**ஜெயமோகன்**

பிறந்தது 1962, ஏப்ரல் 22ல். பள்ளி நாள்களில் ரத்னபாலா என்கிற சிறுவர் இதழில் முதல் கதையை எழுதினார். 1987ல் கணையாழியில் எழுதிய ‘நதி’ சிறுகதை பரவலாகக் கவனம் பெற்றது. 1988ல் எழுதப்பட்ட ‘ரப்பர்’ நாவல் அகிலன் நினைவுப்போட்டியின் பரிசைப் பெற்றது. இது தவிர கதா விருதும் சம்ஸ்கிருதி சம்மான் தேசிய விருதும் பெற்றுள்ளார். இவர் எழுதிய விஷ்ணுபுரம் தமிழ் இலக்கிய உலகில் பெரிய கவனத்தைப் பெற்றதோடு விவாதத்தையும் ஏற்படுத்தியது. இவரது படைப்புகள் தொடர்ந்து தமிழ் இலக்கிய உலகில் அதிர்வலைகளையும் புதிய சாத்தியங்களையும் ஏற்படுத்திய வண்ணம் உள்ளன. தமிழ் மற்றும் மலையாளத் திரைப்படத் துறைகளிலும் இவரது பங்களிப்பு தொடர்கிறது.

என்

பிரியத்திற்குரிய

நண்பர்

இயக்குநர்

லோகிததாஸ்

அவர்களுக்கு...

# உள்ளே

# முன்னுரை

சிறுவயதில் நான் கேட்ட கதைகளில் அற்புத அம்சம் இல்லாத கதைகள் அனேகமாக ஏதும் இல்லை. என் தந்தைவழிப் பாட்டி லட்சுமிக் குட்டியம்மா ஒரு பேய்க் கதைக் களஞ்சியம். அற்புதக் கதைகளின் அடிப்படை என்ன என்று நான் நிறையவே சிந்தித்திருக்கிறேன். வாழ்க்கையைப் பற்றிச் சொல்வதற்கு மேலாக வாழ்க்கையின் முழுமை பற்றிய தேடலைச் சொல்வதற்காகவே இக்கதைகளின் படைப்பாளிகள் யத்தனிக்கிறார்கள் என்பதுதான் எனக்குப் படுகிறது. ஒரு அநீதி, ஒரு துரோகம், ஒரு அடங்காத மோகம் போன்றவை வாழ்க்கையின் பௌதிக எல்லைக்குள் முடிந்துவிடாது என்றும், அப்படி முடிந்துவிட்டால் அதற்குத் தர்க்கபூர்வமான ஒருமை கைகூடாது என்றும் நினைத்த ஆதி படைப்பாளிகள் உருவாக்கியவையே இக்கதைகள். இவை பால் பொங்கி பாத்திரத்துக்குமேல் வழிவதைக் காட்டுகின்றன. அதனாலேயே இவை அதீத உளவியல் சார்ந்த நுட்பங்கள் கொண்டவை. மனித அகத்தின் ஆசைகளையும் வேகங்களையும் யதார்த்தக் கதைகளை விடவும் சிறப்பாகக் காட்டுபவை. அவ்வகையில் இவை மனிதனை அறிவதற்குரிய சிறந்த வழிகள்.

இன்றைய வாசகன் அற்புதக் கதைகளில் நுழையும்போது ஏதோ ஒரு வகையில் தன்னைக் கண்டடைகிறான். அந்த சுயகண்டடைதலே உண்மையில் அக்கதைகளைவிடவும் முக்கியம். அதிலிருந்து தொடங்கும்போது இன்றைய வாழ்க்கையை விளக்கும் அதிநவீனக் கதை ஒன்றை அவன் ஒரு புராதன அற்புதக் கதைக்குள் கண்டுவிட முடியும். இக்கதைகள் அப்படிப்பட்டவை. அற்புதக் கதைகளில் உள்ள திகில் என்ற அம்சத்தை முன்னிலைப்படுத்தி எழுதப்பட்ட கதைகள் இவை.

பேய் என்னும் புராதனமான உள உருவகம் புனைவிலக்கியத்தைத் தொன்றுதொட்டு ஈர்த்துவந்துள்ளது. உலக அளவில் சொல்லப்படும், எழுதப்படும் கதைகளில் கணிசமானவை பேய், பிசாசு, தேவதைக் கதைகளே ஆகும். வாழ்க்கையின் புதிர்களை வாழ்க்கைக்குள் வைத்து விளங்கிக் கொள்ள இயலாது போகும்போது அவற்றை வாழ்க்கைக்கு அப்பால் கொண்டுசென்று விளங்கிக்கொள்ள முயன்ற தொல்மனத்தின் முயற்சிகள் இவை. இன்று மனித மனம் அன்றாட வாழ்க்கையின் தளங்களுக்கு அப்பால் செல்ல எப்படி எப்படி முயல்கிறது என்பதற்கான தடயங்களாக அவை உள்ளன. மனித மனத்தின் அசாதாரண உச்சம் வெளிப்படும் தருணங்கள் இவை. உளச் சிக்கல்கள், திரிபு நிலைகள் ஆகிய சொற்கள் எல்லாமே மனித மனம் உச்சம் நோக்கிச் செல்வதைச் சித்திரிப்பவையே என்றுதான் ஒரு புனைவெழுத்தாளன் கொள்ள இயலும். அவை அவனுக்குத் தொடர்ந்து ஆர்வமூட்டுவது இதனால்தான். உலக இலக்கியத்தின் பெரும் படைப்பாளிகள் பலரும் பேய்க் கதைகளை எழுதியுள்ளனர். என்னைப் பொருத்தவரை வைக்கம் முகமது பஷீர், எடித் வார்ட்டன் ஆகியோரின் பேய்க் கதைகளே என்னை மிகவும் கவர்ந்துள்ளன. அவை கவித்துவமானவை.

வைக்கம் முகமது பஷீரிடம் ஒரு திறனாய்வாளர், 'நீங்கள் பேய்களைப் பார்த்துள்ளீர்களா' என்றாராம். 'ஆம்' என்றார் பஷீர். 'எனக்கும் காட்ட முடியுமா?' என்றாராம் திறனாய்வாளர். 'இது எழுத்தாளன் கண்ணுக்கு மட்டுமே படும் பேய். திறனாய்வாளனால் பார்க்க முடியாது' என்றாராம் பஷீர். வாழ்க்கையைக் கற்பனை மூலம் அறிய முயல்பவர்கள் தினம் தினம் காணும் பேய்கள் பல. அவனுள் குடிகொண்டுள்ள பேய்களோ பற்பல.

எப்போதுமே மனித மனங்களில் உச்சங்களை அறிவதில் ஆர்வம் கொண்டவன், எழுத முனைபவன் என்ற வகையில் நான் ஏற்கெனவே தொடர்ந்து பேய்க் கதைகளை எழுதி வந்துள்ளேன். அவற்றின் உளநுட்பங்களும் கவித்துவ ஆழங்களும் என் வாசகர்களால் பெரிதும் உணரப்பட்டும் உள்ளன. இத்தொகுப்பில், முற்றிலும் அப்படிப்பட்ட கதைகளால் ஆன ஓர் உலகை உருவாக்கியுள்ளேன். குற்றம், பாவ உணர்ச்சி, தனிமை ஆகியவற்றின் வெளிப்பாடுகளாகவே இக்கதைகளைக் காண்கிறேன். பெரும்பாலான பேய்க் கதைகளும் அப்படிப்பட்டவையே. ஆகவேதான்

அறிவியல் யுகத்தில்கூட அவை உலக இலக்கியத்தின் அழியாச் செல்வங்களாகக் கருதப்படுகின்றன.

மனிதன் அழியலாம், ஆனால் அவன் செய்யும் அநீதி அழியாது என்ற எண்ணமே இக்கதைகளை எழுதி முடிக்கையில் எனக்குத் தோன்றியது.

என் பிரியத்திற்குரிய நண்பர் இயக்குநர் லோகித்தாஸுக்கு இந்நூலைச் சமர்ப்பணம் செய்கிறேன். என் குழந்தைகளை விட்டால், அதிகக் கதைகளை அவரிடம்தான் கூறியிருக்கிறேன். அவர் அதை கேட்கையில் குழந்தைபோல ஆகிவிடும் விந்தையே அதற்குக் காரணம்.

**ஜெயமோகன்**

93, சாரதா நகர்,

பார்வதிபுரம்,

நாகர்கோவில் — 629 013

# 1. இமையோன்

நெல்லி மலையின் உச்சியில் எருமைப் பாறை நுனியில் நின்று சுத்தமான அரைவட்டம்போல மங்கலாக ஒளிவிட்ட தொடுவான் கோட்டைப் பார்த்தேன். மேற்கு வானில் மேகக் கூட்டங்களுக்குள் சூரியன் மெல்ல அமிழ்ந்துகொண்டிருந்தது. தொடுவானிலிருந்து என் காலடியில் மோதிய இலைக்குவைகள் வரை வந்த அடர்ந்த பச்சைப் பரப்பில் காற்று அலை அலையாகப் பரவியது. என் சட்டைக் கைகள் சிறகுகள்போலப் படபடத்தன. எனக்குப் பின்னால் அகஸ்தியர் கூடமலைகளின் அடுக்குகள் நான்கு வகை நீல நிறங்களில் எழுந்து நின்றன. புகைநீல நிறமான நான்காவது அடுக்கின் நுனி கரிய மேகங்களில் ஆழப் புதைந்திருந்தது. அங்கிருந்து மென்மையான குளிர் அல்லது நீராவியா என்ன? என் முதுகில் ஊதியது.

மலைநுனியில் நிற்பது விசித்திரமான அனுபவம். பதற்றமா அமைதியா என்று பிரித்தறிய இயலாத நிலை அது. நாம் நம்மைக் கவனிக்கும்போது பதற்றம்; கவனிக்காதபோது அமைதி. ஆனால் மலைநுனிகளில் காலம் இல்லை. அல்லது காலம் முனைகொண்டு உறைந்து நிற்கிறது. காலம் ஓலமிட்டு அலையடித்துச் சுழல்வது சமதளத்தில்தான். அங்கே மனித ஓசை நிரம்பியுள்ளது. அதை நாம் மொழி என்கிறோம். காலம் என்பது கூட மொழியில் நிகழ்வது மட்டும்தான். வானில் காலம் இல்லை. ஏனெனில் அங்கே தூரம் இல்லை. ஒலி இல்லை. அளக்கப்படாதபோது காலம் இல்லை. மண்ணிலிருந்து எழுந்தாலும் மலை விண்ணில் இணைந்திருக்கிறது. காலத்திலிருந்து காலமின்மை நோக்கிய எழுச்சி அது. பின்புறம் நான்கு அடுக்குகளாக எழுந்து நின்றிருக்கும் மேற்குத் தொடர்ச்சி மலையில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு காலம் உறைகிறதா என்ன? நீலம், இளநீலம், பச்சை நீலம், சாம்பல் நீலம் என்று வேறுபட்ட நிறங்கள் கொண்ட காலம்.

இதோ இந்த அடுக்கில் மலைக்காணிகளின் காலம். அப்பால் இரவிக் குட்டிப் பிள்ளையும் அனந்தபத்மநாபனும் வாழும் காலம். அப்பால் ஆய் மன்னர்களின் காலம். அதற்கு அப்பால்... இந்தச் சிந்தனைகள்கூட இந்த மலையுச்சியில்தான் வருகின்றன. மண்ணில் நிற்கையில் சிந்தனைகளின் ஒழுங்கே வேறு.

இருட்டிவிட்டிருப்பதைச் சற்று நேரம் கழித்துத்தான் உணர்ந்தேன். மலைகளுக்கு அப்பாலிருந்து மேகங்கள் கரும்புகைச் சுருள்கள் அடர்ந்து எழுவதுபோல வந்து பரவி வானை நிரப்பிக்கொண்டிருந்தன. ஒரு மேகத்தை இன்னொன்று தலையால் உந்தியபடி தான் மேலெழுவது போல. ஒளி மங்கி மலைகளின் நிறம் மாறுபடுவதைண் சுற்றிச் சுற்றிப் பார்த்துக்கொண்டே நின்றேன். மழை வரப் போகிறது என்ற எண்ணம் ஒரு கணம் வந்து போனாலும்கூட நான் அதைப் பொருட்படுத்தவில்லை. மேற்கு வானில் சூரியனின் ஒளி அப்போதும் மீதி இருந்தது. மேற்கே நகர்ந்த மேகங்கள் விசித்திரமான தவிட்டு நிற ஒளியை அடைந்தன. பால் விடாத இளம் டீ வைத்த கண்ணாடிக் கோப்பைமீது வெயில் படுவதுபோல என்று கற்பனை செய்துகொண்டேன். ஒரு கிளைடர் விமானம் இருந்தால் இங்கிருந்து பாய்ந்து அந்தச் செவ்வொளியில் பறந்து மிதக்கலாம். இரு கைகளையும் விரித்து மிதப்பதுபோலக் கற்பனை செய்தேன். அப்போதுதான், நன்றாகக் குளிர ஆரம்பித்திருப்பது மூளையில் உறைத்தது.

என் ரெக்ஸின் பையைத் தோளில் மாட்டிக்கொண்டேன். அதிகம் போனால் அரை மணி நேரத்தில் மழை கொட்ட ஆரம்பித்துவிடும். என்னிடம் குடை, மழைக்கோட்டு எதுவும் இல்லை. ஆனால் மழையில் நனைவது எனக்கு ஒரு பொருட்டே அல்ல. சொல்லப்போனால் வீட்டை விட்டுக் கிளம்பும்போதே மழையில் நனைந்து ஊறித் திரும்பி வரவேண்டும் என்ற திட்டம்கூட இருந்தது. அதிகமும் குட்டை மரங்களும் புதர்களும் நிரம்பிய அம்மலைச் சரிவில் ஒதுங்குவதற்கு என்றாலும் எந்த இடமும் இல்லை.

எருமைப் பாறையிலிருந்து கீழே வந்து, செம்மண்ணும் சரளைக் கற்களும் பெரிய உருளைப் பாறைகளும் முட்செடிகளும் விரவிப் பரந்த மலைச் சரிவில் நின்று கீழே இறங்கவேண்டிய வழியை ஒரு முறை நிதானித்துக்கொண்டு இறங்க ஆரம்பிக்கும்போது மழை ஆரம்பித்துவிட்டது. பெரிய சரளைக் கற்கள்

விசையுடன் சரிவாக என்னை நெருங்கி ஒருவகை ஓலத்துடன் கடுங்குளிருடன் என்மீது பரவி மலைச் சரிவில் பல்லாயிரம் மான்கள் குளம்பு அதிர இறங்குவதுபோலப் பொழிந்து சரிந்து சென்றது. அத்தனை பெரிய மழைத்துளிகள் சமவெளிகளில் பெய்வதில்லை. சில நொடிகளுக்குள் நான் முற்றிலும் நனைந்துவிட்டேன்.

சில கணங்களுக்குள் எத்தனை அசட்டுக் கற்பனைகளில் நான் இருந்திருக்கிறேன் என்று புரிந்தது. ஏறும்போது இருந்த வெயிலுக்கும் வெக்கைக்கும் மாற்றாகக் குளிரக் குளிர இறங்கலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால் மழை வலுத்ததுமே முற்றிலும் கண் தெரியாமல் ஆயிற்று. பெரிய ஒரு பாலித்தீன் தாளுக்குள் பொட்டலமாகக் கட்டப்பட்டதுபோல உணர்ந்தேன். தலைமீது தபலா மீட்டும் விரல்கள்போல மழைத்துளிகள் அறைந்தன. அனைத்தையும்விட மோசமாகத் தரை இளகி கொளகொளவென்று ஒவ்வொரு அடியும் வழுக்கியது. சற்றுத் தடுமாறியபிறகு ஒரு வழி கண்டுபிடித்தேன். முட்புதர்களின் வேர்முடிச்சு முண்டுகளில் மட்டும் கால்களை வைத்து முட்புதர்களைக் கைகளால் பற்றிக்கொண்டு மெல்ல மெல்ல இறங்கினேன். பாறை இடுக்குகளில் முளைத்திருந்த முட்புதர்களின் வேர்கள் ஆழ இறங்கி என் மொத்த எடையையும் தாங்கும்படியாக இருந்தன. ஓரளவு சகஜநிலை கைகூடியபோது அல்லது அப்படி நான் உணர்ந்தபோது சட்டென்று கால் வழுக்கி பிருஷ்டம் சேற்றில் மோத விழுந்து குப்புற உருண்டேன். பதறியதில் கைப்பிடியும் விடுபட்டுவிட்டது. சேற்றில் எதை எதையோ அள்ளிப் பற்றினேன். ஒரு முட்புதரில் பிடித்துத் தொங்கி, கால்களை அகப்பட்ட பாறை நீட்சியில் வைத்து நின்று மெல்ல ஆசுவாசப்படுத்திக்கொண்டேன். மழை பெரிய அருவிபோலச் சற்றும் ஏற்ற இறக்கம் இன்றி நீரைக் கொட்டியது. என் உடலில் பரவிய சேறு சில நொடிகளில் கழுவப்பட்டுவிட்டது.

படபடப்பு குறைந்ததும் மீண்டும் இறங்க ஆரம்பித்தேன். மழை நிற்பதுவரை காத்திருக்கலாம் என்று ஒரு கணம் பட்டது. ஆனால் மலைமழை சாதாரணமாகவே மூன்று மணி நேரம் நின்று பெய்யும் என்பார்கள். மணி அப்போதே ஐந்து ஆகியிருந்தது. இருட்டிவிட்டால் இந்த மலைப்பகுதியில் நடப்பது கற்பனையில்கூடச் சிரமமானது. எங்கும் பாதை அடையாளங்கள்

இல்லை. வெளிச்சமும் இருக்காது. குறுநரிகளுக்கும் செந்நாய்களுக்கும் பேர்போனது இந்த மலை என்று அத்தான் சொன்னார். மலையில் முயல்கள் குறையும். வெயில் காலத்தில் அவை படைபடையாக ஊர்களுக்குள் இறங்கி பசுக்களைக்கூடப் பிடித்துக் கிழித்துச் சாப்பிட்டுவிடுமாம்.

நான் இறங்கும் வேகத்தைப் பற்றி எண்ணியபோது அச்சம் எழுந்தது. இதே வேகத்தில் இறங்கினால் அடிவாரத்து ஏரிக்கரைக்குப் போக இரவு எட்டு மணிகூட ஆகலாம். அங்கேதான் மதகு அருகே புதர்மறைவில் என் சைக்கிளை வைத்திருந்தேன். அங்கிருந்து ஒரு மணி நேரம் போனால் என் அக்காவின் ஊர். இரவில் அவள் எனக்காக மிகவும் பதற்றப்படக் கூடும். மழையின் திரை வழியாக விலக்கி விலக்கிச் செல்லும்போது அது சரியான வழிதானா என்ற பயமும் எழுந்தது. ஆனால் வேறு வழியில்லை. எப்படியும் மலையடிவாரத்தை அடைந்தால் அங்கிருந்து ஏரியை விசாரித்துக்கொண்டு போய்விடலாம். மனிதர்கள் வாழும், மனிதமொழி பயன்படும் ஓர் இடத்துக்குச் சென்றால் மட்டும் போதும்.

அத்தனை சீக்கிரம் நான் களைத்துவிட்டது எனக்கு வியப்பைத் தந்தது. மலையில் எங்குமே ஓய்வெடுக்காமல் ஏறியவன் நான். மழையைத் தோள்களில் சுமந்தபடி இறங்குவதனால் போலும். மழையைவிட அதன் ஓலம்தான் என்மீது அதிமாகக் கனப்பதாக அப்போது பட்டது.

ஏறத்தாழ சமமான ஒரு பகுதியை வந்தடைந்திருப்பதை என் கால்கள் உணர்ந்தன. தண்ணீர் பெரிய ஓடைபோல அதன்மீது ஓடிப் பரவி அப்பால் இறங்கிக் கொண்டிருந்தது. நீரில் கால்களை நனைத்தபடி அதன் வழியாக நடந்தேன். அது அகலம் குறைந்த ஒரு சாலை என்பதை சற்று நேரத்தில் உணர்ந்தேன். மலையில் அப்படி ஒரு சாலை இருப்பதை வரும்போது நான் காணவேயில்லை. மலையின் வேறு பக்கத்தில் இறங்கிவிட்டேன் என்பது உறுதியாயிற்று. ஆனால் ஒன்றும் செய்வதற்கில்லை. குறைந்தபட்சம் இங்கே ஒரு சாலை இருக்கிறது. இப்பகுதியில் ஏதாவது எஸ்டேட் கட்டடம்கூட இருக்கலாம். மாட்டு வண்டியாவது வந்து போகிறது. அந்த நினைப்பே ஆறுதல் தந்தது.

சாலையில் அரை மணி நேரம் நடந்தபிறகு தொலைவில் மிகப் பழைய ஒரு கட்டடத்தைக் கண்டேன். மழை மூடியிருந்தமையால் அதை நான் தெளிவாகக் காணவில்லை. ஆனால் அதன் அமைப்பு அது பழைய கட்டடம் என்பதைக் காட்டியது. உயரம் குறைவான ஓட்டுவீடு. நான்கு சுற்றுத் திண்ணையும் பூமுகமும் கொண்டது. மழைத் திரைக்கு அப்பால் அங்கே ஒரு விளக்குச் சுடர் தெரிந்தது.

நான் அந்தக் கட்டடத்தை நெருங்கியபோது என் உடலைத் தாங்கி நிற்கக் கால்கள் தவித்தன. என் கரங்கள் குளிரில் நடுங்கித் துடித்துக்கொண்டிருந்தன. அந்த வீடு அத்தனை பழையதாக இருக்கும் என்று நான் கற்பனைகூடச் செய்திருக்கவில்லை. திண்ணை, படிகள், தூண்கள் எல்லாம் கல். மண் சுவரில் சாணி மெழுகிய பூச்சு. அது வலைவலையாக வெடித்துப் பரவியிருந்தது. ஓட்டுக் கூரை என்று நான் நினைத்தது தவறு. கூரை மரத்தால் ஆனது. ஆனால் மரம் நன்றாக மட்கிக் கறுத்திருந்தது. திண்ணையிலும் வீட்டு முகப்பறையிலும் யாரும் இல்லை. பாறையில் மட்டும் ஒரு பித்தளை விளக்கு சிறிய சுடர் விட்டுக்கொண்டிருந்தது.

நான் ‘சார்’ என்றேன். என் குரலே உள்ளே எங்கோ எதிரொலித்து மீண்டு வந்தது. துணிந்து திண்ணைமீது ஏறினேன். அந்த வீட்டுக் குடியில் சார் என்று கூப்பிடுவது பொருந்தாது என்று உணர்ந்து, ‘யாருமில்லையா? ஐயா?’ என்றேன். அந்த விளக்கை அப்போதுதான் கவனித்தேன். அத்தனை காற்றிலும் அதன் சுடர் அசையாமல் மொட்டுபோல நின்றது.

உள்ளிருந்து ஒரு பெண்மணி எட்டிப் பார்த்து, ‘ஆராக்கும்?’ என்று கேட்டாள். மலையாளிகள் பேசும் தமிழை உடனே அடையாளம் கண்டு நான் மலையாளத்தில் ‘மலையில் ஏறிப் போய்விட்டு இறங்கினேன். மழை. வழியும் தவறிவிட்டது’ என்றேன்.

அவள் தொடர்ந்து தமிழில் ‘எங்குள்ள ஆளாக்கும்?’ என்றாள்.

‘கீழே கணியாமங்கலம். சாரதா டீச்சரின் தம்பி. மதுரையிலிருந்து வரேன்’ என்றேன்.

‘உள்ள வரணும்’ என்றாள். நான் உள்ளே நுழைந்தேன். விநோதமான வாசனை அல்லது நாற்றம். மங்கலான அசைவற்ற ஒளி. அந்தப் பெண்ணுக்கு முப்பத்தைந்து வயது இருக்கும். நான் பார்த்ததிலேயே அழகான பெண்களில் ஒருத்தி அவள் என்று எண்ணினேன். ஆனால் அப்படி வலிந்து எண்ண வேண்டியிருந்தது. அழகிய பெண்களைப் பார்க்கையில் முதலில் மனத்தை அறைவது அவர்கள் அழகுதான். மனத்தைக் கலைத்துத்தான் வேறு எண்ணங்களைத் தருவித்துக்கொள்ள வேண்டும். அதுவும் அவர்களை நாம் உற்றுப் பார்ப்பதை அவர்கள் சங்கடத்துடன் உணரும்போது நம் பார்வையை விலக்கிக்கொண்டு சாதாரண முகபாவனையை உருவாக்கிக் கொள்ளும் பொருட்டுச் சிரமப்படவேண்டும். ஆனால் இவள் அழகானவள் என்று கண் சொன்னபிறகும் மனம் ஏற்க மறுக்கிறது. சிலவகைப் புற்களைத் தின்ன பசுக்கள் பிடிவாதமாக மறுத்துவிடும். புரிந்துகொள்ளவே முடியாது. அதைப்போல. என்ன யோசிக்கிறேன் என்று நானே வியந்துகொண்டேன்.

அந்தப் பெண், ‘இங்கே ஆண் பிள்ளைத் துணிகள் கிடையாது. பட்டு வேஷ்டி மட்டும்தான் உண்டு’ என்றாள்.

நான் ‘பரவாயில்லை’ என்றேன்.

அவள் திரும்பி நடந்தபோதுதான் ஒன்றைக் கவனித்தேன். அவள் அணிந்திருந்த உடை மிக விநோதமாக இருந்தது. பத்மநாபபுரம் அரண்மனையில் பதினெட்டாம் நூற்றாண்டு டச்சு தைலச்சாய ஓவியங்களில் வரையப்பட்டுள்ள அரச மகளிரும் சேடியரும் அணிந்திருக்கும் உடை அது. கீழே ஒரு பட்டு வேட்டி. மேலே தங்க சரிகைப் பட்டை வைத்த மார்க்கச்சு. இவள் தோள்களை மறைக்க இன்னொரு மேலாடை அணிந்திருந்தாள். தலைமயிரைக் கொண்டை போடுவதற்குப் பதிலாக விரித்துப் பரவ விட்டிருந்தாள். அவளுடைய பின்பக்கம் நன்றாகத் திரண்டு பருத்து அவள் நடைக்கேற்ப இறுக்கமாக அசைந்தது. ஒரு கணத்தில் தாங்க முடியாத காம இச்சை எழுந்து என் உடல் என் மனத்தின் எல்லாக் கட்டுப்பாடுகளையும் மீறியது. உண்மையில் அப்படியே அவளை அள்ளி அணைத்துக்கொள்ளும் பொருட்டு நான் ஓரிரு அடி முன்னால் நகர்ந்துவிட்டேன்.

அவள் திரும்பிப் பார்த்து ‘ஒரு நிமிஷம்’ என்று சொல்லி, உள்ளே போனாள். அப்போது ஒன்றை உணர்ந்தேன். அவள் திரும்பி என் கண்களைப் பார்த்ததுமே, அந்தக் காம இச்சை பால் பொங்குதல் மீது நீர் விழுந்ததுபோல அப்படியே அடங்கி என் அந்தரங்கம் குளிர்ந்து செயலற்றுப் போனது. அவள் அறைக்குள் சென்றதும் நான் மீண்டு என் நெற்றியில் கையை வைத்து அழுத்தினேன். ஏதாவது கெட்ட கனவா இது! அந்த அளவுக்கு உணர்ச்சிக் குழப்பத்தை நான் அறிந்ததே இல்லை. உணர்வுகள் பொங்கியது உண்டு, சோர்ந்து துவண்டதும் உண்டு. ஆனால் என்ன உணர்வு, ஏன் வருகிறது என்று தெரிந்துகொள்ள முடியாமல் நான் முற்றிலுமாக வேறு ஒரு சக்தியின் பிடியில் சிக்கி இயங்குவது போல உணர நேர்ந்ததில்லை.

அவள் பாலராமபுரம் துண்டு ஒன்றையும் பட்டையாக சரிகை இடப்பட்ட வேட்டி ஒன்றையும் கொண்டுவந்து நீட்டினாள். அந்த வேட்டி ஒரு மாதிரி விடைப்பாக, குருத்துபோல வழவழப்பாக இருந்தது. அவள் பக்கத்து அறைக்குள் சென்றதும் நான் உடைகளை மாற்றிக்கொண்டேன். உள்ளாடையைக் கழற்றும்போது சற்று நிலை தடுமாறி சுவரில் கை ஊன்றியபோது சுவர் ஈரமாக சொதசொதவென்று இருப்பதை உணர்ந்தேன். கை பட்ட இடத்தில் சாணிப் பூச்சு உதிர்ந்தது. அடியில் பிலுபிலுவென்று வெண்ணிறமான கரையான்கள் பதறிக் கலைந்தன.

அந்த அறையின் தரையும் ஈரமாகத்தான் இருந்தது. சாணி மெழுகப்பட்ட தரை, நீரில் ஊறி சேறாக மிதிபட்டது. இந்தச் சேற்றுக் குகையில் எப்படி இரவு தங்க முடியும் என்று புரியவில்லை. பார்வை உணர்வு ஏற்படத் திரும்பிப் பார்த்தேன். அவள்தான். அவள் முகத்தில், கண்களில் எவ்வித உணர்வும் இல்லை என்பதை அப்போது கவனித்தேன். ஓவியம்போல இருந்தள். அவள் அழகு என்னை முதலில் தொடாதுபோனதற்குக் காரணமே அதுதான். அவளை என் ஆழ்மனம் ஓர் உயிரற்ற பொருளாகவே உணர்ந்தது. அப்போதும், அவள் என்னுடன் பேசியபிறகும்கூட, அப்படித்தான் என் ஆழம் பொருள் கொள்கிறது என்று உணர்ந்தேன்.

‘இங்கே ராத்திரி ஊண் கிடையாது. பழங்கள் மட்டும்தான் உண்டு. கொண்டு வரட்டா?’ என்றாள்.

‘சரி’ என்றேன். எனக்குப் பசித்தது. அவள் திரும்பிச் சென்ற கணம் மீண்டும் அந்தக் கட்டுக்கடங்காத காமவெறி எழுந்தது. என்னை மீட்டு எதிர்திசை நோக்கிச் செலுத்தினேன். அங்கே சிறிய அறையில் கட்டிலில் ஒருவர் படுத்திருந்தார். முதலில் நான் அவரைப் பார்க்கவில்லை. அறை அரை இருட்டாக, விசித்திரமான வீச்சம் நிரம்பியிருந்தது. கட்டிலில் அவர் கழுத்து வரை கம்பளியால் மூடி, தலையில் குல்லாயோ முண்டாசோ ஏதோ கட்டியிருந்ததனால் துணிக் குவியல்போலத்தான் இருந்தார். அவரது கண்களைத்தான் தற்செயலாக என் கண்கள் சந்தித்தன. உடல் பதற வெளியே வந்துவிட்டேன். படபடப்புடன் மீண்டும் உள்ளே பார்த்தேன்.

‘வணக்கம். நமஸ்தே’ என்றேன்.

கண்களில் சிறியதாக ஒரு பாவனை மாற்றம் வந்தது. அல்லது அது என் கற்பனையாகவும் இருக்கலாம். அவர் ஒன்றும் சொல்லவில்லை. பெரிய உருண்ட விழிகள். செவ்வரி ஓடிய வெள்ளைப் பரப்பில் சற்றே பழுப்பு கொண்ட இரு மணிகள். அவை என்னைப் பார்த்தன. கடுமையான வெறுப்பு மட்டுமே ஒருவன் கண்களுக்கு அத்தனை கூர்மையையும் வலிமையையும் அளிக்க இயலும்.

அவள் என் பின்னால் வந்தாள். ‘அது என் வீட்டுக்காரராக்கும். அவருக்கு சுகமில்லை’ என்றாள்.

பித்தளையால் ஆன மிகப் பழைய தாம்பாளத்தில் ஏழெட்டு வாழைப்பழங்களும் சிறிய பித்தளை கூஜாவில் நீரும் இருந்தன.

‘பேச மாட்டாரா?’ என்றபடி வாங்கினேன். பித்தளைப் பாத்திரங்கள் நுட்பமான கலை வேலைப்பாடுகளுடன் பச்சை படர்ந்து அருங்காட்சியகத்திலிருந்து வந்தவைபோல் இருந்தன.

‘வாதம்’ என்று அவள் அருகே சென்று அவரை நன்கு போர்த்திவிட்டாள். அவர் கண்கள் காற்று பட்ட கங்குகள்போல ஆயின. அல்லது அது என் கற்பனையாகவும் இருக்கலாம். ‘பேச முடியாது. எந்திரிக்க முடியாது. கைகாலை ஆட்டவும் முடியாது’ என்றாள்.

‘இங்கே வேற யாரும் இல்லியா?’

‘ஒரு வேலைக்காரி உண்டு. கீழேருந்து தினமும் காலைல வருவா. இது எங்கக் குடும்ப வீடு. இவர் பிழைக்க மாட்டார்ன்னு டாக்டர் சொல்லியாச்சு. இவருக்குக் குடும்ப வீட்டிலே சாகணுமின்னு ஆசை. அதாக்கும் ஒரு வாரமா இங்கே வச்சிருக்கு. இப்பம் மழையும் வந்தாச்சு. வீடு இடிஞ்சுபோயிடும்போல இருக்கு.’

நான் அவரையே பார்த்தேன். பேசுவது அவருக்குப் புரிகிறதா? சாவது பற்றி இத்தனை சாதாரணமாகப் பேசுகிறாள். இவர்களுக்குள் என்ன வகையான உறவு?

பழங்களைச் சாப்பிட்டுத் தண்ணீர் குடித்தேன்.

‘நாமள் பேசுவது அதுக்குக் கேட்காது. காது கிடையாது.’ அவள் சொன்னாள்.

எனக்குச் சிறு ஆறுதல் ஏற்பட்டது.

‘வீடெல்லாம் ஈரம். உங்களுக்கு அங்கே ஒரு கட்டில் போட்டுக் குடுக்கட்டுமா?’

‘சரி’ என்றேன்.

‘கொஞ்சம் பிடிங்க’ என்றாள். நான் அவளைப் பின்தொடர்ந்தேன்.

இன்னொரு அறை முழுக்க உடைச்சல்கள் குவிந்து கிடந்தன. பல வகையான மரச்சாமான்கள், மண்கலயங்கள், வாட்கள், கேடயங்கள்...

‘வாளா அது?’

‘ஆமா. இவங்க பூர்வீகர் வச்சிருந்த வாள். துரும்பெடுத்துப் போச்சு. பிடிங்க.’

தட்டுபடி என்று சொல்லப்படும் கால் வைத்த விசிப்பலகை, மடிக்கக்கூடிய கால்களைச் சேர்த்துக் கட்டியிருந்தார்கள். அவள் குனிந்து ஒரு பக்கம் பிடித்தபோது போர்வை விலகி, அவளது தோள்களையும் மார்புகளின் எழுச்சியையும் பார்த்தேன். காமம் என் இதயத்தைக் கடலலை கரைப்பாறையை அறைவதுபோலத் தாக்கியது.

தட்டுபடியைப் போட்டபிறகு அவள் ஒரு தாழம்பாயை அதன்மீது விரித்தாள். தலைக்கு வைக்க ஒரு மரப்பலகைத் துண்டைத் தந்தாள். வேண்டாம் என்றபோது அது தலைக்கு வைப்பதற்குரிய பலகைதான் என்றாள்.

வைத்துக்கொண்டேன். அதில் செதுக்கப்பட்டிருந்த இதமான குழி பஞ்சைவிடத் தலைக்கு மென்மையாக இருந்தது.

அவள் சற்றுத் தள்ளி நிலைப்படியில் அமர்ந்துகொள்வாள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆகவே எழ முயன்றேன்.

‘நீங்க படுங்கோ. நான் சும்மா உட்கார்ந்தேன். இங்கே யாருமே வாறது இல்லை. அதனால் சும்மா பேசலாம்னாக்கும் உக்கார்ந்தது’ என்றாள்.

நான் ஒருக்களித்துத் தலையைக் கையில் வைத்துச் சரிந்தேன்.

‘நான் ராத்திரி செரியா உறங்கமாட்டேன். இதுக்கு மூன்று தடவை மூத்திர டப்பா மாற்றணும்’ என்றாள். ‘நீங்கள் என்ன தொழில் செய்யறது?’

‘தொழில்ன்னு இப்ப ஒண்ணும் இல்ல. எலக்ட்ரானிக் எஞ்சினியரிங் முடிச்சேன். ரெண்டு வருஷம் ஆகுது’ என்றேன்.

‘கல்யாணம் ஆயாச்சா?’

‘கல்யாணமா, நல்ல கதை. எனக்கு வயசே இருபத்திரண்டுதான்.’

‘எனக்குக் கல்யாணமாகும்போ பதினெட்டு வயது. இதுக்கு முப்பது. நேரா இங்கத்தான் வந்தோம். அப்போ இந்த இடம் இப்படி இருக்காது. பெரிய தென்னந்தோப்பு. ரெண்டு பக்கமும் பெரிய குளம் எல்லாம் இருக்கும். வடக்குப் பக்கம் வேலைக்காரர்கள் தாமசிக்க நிறையக் குடில்கள் உண்டு. அப்போ இங்கே நாலு யானை இருந்தது. குட்டி சங்கரன், பாச்சு, கேசு, பின்னே நாணிக்குட்டி. நாணிக்குட்டி அப்பம் ரொம்பச் சின்னது. எருமை மாதிரி இருக்கும். யாரைப் பார்த்தாலும் முட்டித் தள்ளும். தென்னை மரத்தை முட்டிக்கிட்டே இருக்கும். எல்லோரும் தூங்கினபிறகு நான் ரகசியமா எந்திரிச்சிப் போயி அதுகூட விளையாடுவேன்.’

‘ஏன்?’

‘அப்பம் பெண்கள் அகத்தளத்தை விட்டு வெளியே வர முடியுமா? வருஷத்துக்கு ஒருமுறை திருவாதிரை ஆட்டம் பாக்கக் கோயிலுக்குப் போகலாம். அவ்வளவுதான். அகத்தளம் முழுக்க இருட்டு. அங்கதான் இருக்கணும். பெருச்சாளி மாதிரி. கிழவி, குமரி, குழந்தை, குட்டி எல்லாம்.

செத்தாத்தான் வெளியே போகலாம். வருஷத்துக்கு மூணு பேர் எப்படியும் சாவாங்க. அது ஒரு காலம்...'

'ரொம்ப முன்னாடியா?'

அவள் ஒன்றும் சொல்லவில்லை. வெளியே மழை மீண்டும் ஆரம்பித்தது.

'இது ஏன் இப்பிடிப் பாழடைஞ்சு கிடக்கு?'

'ரொம்ப வருஷம் ஆகுதே. இந்த எடத்தை விட்டு எல்லாரும் போயிட்டாங்க. ஆள் நடமாட்டம் இல்லாம அப்பிடியே அழிஞ்சு போச்சு.'

'ஏன் எல்லாரும் போனாங்க?'

அவள் சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். அவள் ஏதாவது பேசுவாள் என்று நான் காத்திருந்தேன். பிறகு 'தண்ணிப் பஞ்சமா?' என்றேன்.

'அதெல்லாம் இல்லை' என்றாள். மீண்டும் மௌனம். எழுந்து அறைக்குள் போய் கணவனை மீண்டும் போர்த்திவிட்டு வந்தாள்.

'இந்த வீடுகூட அப்பபடியே தொட்டா உதிர்ற மாதிரி இருக்கு' என்றேன்.

'எல்லாம் ஒரு சாபம்தான்.'

'சாபமா?' அப்படி ஒரு கதை இருக்கும் என்று நான் உள்ளூர ஊகித்திருந்தேன்.

'ஆமாம், சாபம்தான். நான் இங்க வர்றதுக்கு முந்தி நடந்தது இது. செவிவழிக் கதையா சொல்வாங்க.' அவள் கால்களை நீட்டி, சாய்ந்து அமர்ந்துகொண்டாள். 'இந்தக் குடும்பத்துக்க பேர் கீழேசிறைக்கல்னாக்கும். இரவிக் குட்டிப் பிள்ளை கேட்டிண்டுண்டா?'

'ஆமா, திருவிதாங்கூர் படைகளுக்குத் தலைவனா வடுகப் படை கூடப் போர் செஞ்சாரே?'

'ஆமா, அவர்தான். அவர் களத்திலேயே செத்துப்போனார். அப்ப அவர்கூட காவலுக்கு நின்ன வீரர்களில் ஒருத்தன், அவருக்க சவசரீரத்தை ஒத்தையாத் தூக்கிட்டு கணியாகுளம் மலை வழியா ஏறி மறுபக்கம் எறங்கி பத்மநாபபுரம்வரை கொண்டுவந்து சேத்தான். அவனுக்கு மகாராஜா இந்த

மலையைப் பதிச்சுக் குடுத்து கர மொழிவு விதிச்சார். அப்பிடி உருவான குடும்பமாக்கும் இது. அந்தக் காலத்திலேயே கழுவேற்றவும் சாதிவிலக்கவும் அதிகாரம் இருந்தது. அந்தப் பக்கம் தெக்குச் சாவடிப் பக்கமா ஏழு கழுமரங்கள் இப்பமும் உண்டு. அந்தக் குடும்பத்தில் வந்த ஒரு காரணவர்தான் சாபம் போட்டது.'

'அவரு பேரு என்ன?'

அவள் எழுந்து உள்ளே போய் அவரைப் பார்த்துவிட்டு வந்தாள். 'சில சமயம் கொஞ்சமா முனங்குவார்' என்றாள்.

'அவரு பேரு என்ன?'

'சடையன் செண்பகராமன். அவர் பேரு திற்பரப்புக் கோயில் கல்வெட்டில் இருக்கு. கோயிலுக்கு நாலு யானை தானமாக் குடுத்ததுக்காக. பத்மநாபபுரம் பெருமாள் கோயில் உத்தரமண்டபத்தைக் கட்டினதும் அவர்தான். அங்கேயும் குறிமானம் உண்டு. பெரிய வீரன். ஏகப்பட்ட பூமிசொத்து. ஒரு குறையும் இல்லை. மகாராஜா அவரை சடையா அப்டீன்னு நேர் பேர் சொல்லித்தான் கூப்புடுவார். ராஜசபையிலும் இடம் உண்டு. அவருக்கு நாலு அச்சி, ஏழு வைப்பாட்டி. ஆன, குதிரை, பல்லாக்கு ஒரு குறையும் இல்லை. அப்படிப்பட்டவர் ஒரு தடவ ராஜாங்க விஷயமா காயங்குளம் போனார். காயங்குளம் அப்பம் திருவிதாங்கூருக்க சமந்த ராஜ்யமாக்கும். காயங்குளம் பெரிய காயல் கரை வழியா அவரும் பரிவாரமும் வாற நேரத்தில் ஒரு பெண்ணைப் பாத்தாங்க. பத்துப் பதினெட்டு வயசிருக்கும். முலையும் தோளும் திரண்ட பெண். ஆனா இடுப்பில் ஒரு கந்தல் மட்டுந்தான். தண்ணியில் முங்கி ஏறி முங்கி ஆம்பல்காய் பறிச்சிட்டிருந்தா. சடையன் தம்பிரானுக்கு அவளைப் பார்த்தபோது ஒரு பொன்மீன் நீந்துகிறதுமாதிரி இருந்தது. அவளைக் கூப்பிட்டு இதெல்லாம் எதுக்குப் பறிக்கிறேன்னு கேட்டார். அவ சொன்னா, 'வீட்டில் அம்மாவும் ஏழு தம்பிகளும் உண்டு. ஒரு வாய் கஞ்சிக்கு வழியில்லை. ஆம்பல்காய் சாப்பிட்டுத்தான் பசியாறணும்'னு. சடையன் தம்புரான் அவளுக்கு அங்கேயே புடைவை கொடுத்துக் கல்யாணம் செய்து கூட்டிவந்தார். அவள் குடும்பமே அவளுடன் வந்தது. அதன்பிறகு அவள்தான் கீழேசிறைக்கல் ராணி. சடையன் தம்புரான் அவள் காலில் விழுந்து கிடந்தார். அவள் சொன்னதுதான்

சட்டம். அப்பிடி ஒரு மோகம் அவமேல. அவ சொன்னான்னு மத்த அச்சிகளை வெளியூர்களிலே குடியேத்தினார். வைப்பாட்டிகளைப் பணம் குடுத்து பாண்டி நாட்டுக்குத் துரத்தினார். அவள் தம்பிகளையெல்லாம் ராஜகுமாரர்களைப்போல அரண்மனையில் குடியேற்றினார். எல்லாம் அவள் இஷ்டம். அவள் கேட்டது உடனடியாக வந்து சேர்ந்திருக்கும். படுக்க சந்தனமரக் கட்டில். உடுக்கக் காசிப் பட்டு. முத்துமாலை. அவள் துப்புவதற்குக்கூட பொன்னில் கோளாம்பி செய்து கொடுத்தார்.'

நான் கதையில் அதுவரை விடுபட்டு வந்த முடிச்சை மனத்தால் நெருடிக்கொண்டிருந்தேன். அதை அவள் உணர்ந்து, 'அவங்களுக்குக் குழந்தைகள் இல்லை' என்றாள்.

'அவள் அவர்மேல அன்பா இருந்தாளா?'

அவள் 'என்னது?' என்றாள். திடுக்கிட்டதுபோலவோ ஆச்சரியப்படுவதுபோலவோ. பிறகு சற்றுத் தலைகுனிந்து மௌனமாகச் சில நிமிடங்கள் இருந்துவிட்டு, 'பின்னே அன்பில்லாமல் இருக்குமா? அவள் இருந்த இருப்பென்ன? சாதாரணமான வாழ்வா அவளுக்கு வாய்த்தது? ராஜயோகம். அதிகாரம். அவள் சும்மா கொஞ்சம் கண்ணைக் கசக்கினாலே தம்புரான் துடித்துப் போவாரே.'

நான் கை கடுக்கவே சற்று மல்லாந்து படுத்துக்கொண்டேன்.

'அவளுக்கும் தம்புரான்னா உயிர்தான். அவரை சின்னக் கைக் குழந்தை மாதிரிதான் வைச்சிருப்பாள். சில சமயம் அடிப்பாள். சில சமயம் கொஞ்சுவாள். இரண்டு பேரும் இணைக்கிளிகள் மாதிரி வாழ்ந்தாங்க.'

'பிறகு?' என்றேன்.

'அப்போ பாண்டி நாட்டிலிருந்து ஒரு பட்டுச் செட்டி அங்கே வந்தான். வழக்கமா வாற பட்டுச்செட்டிக்க மகன் அவன். ரொம்ப அழகன். சின்ன வயசு. திருமலை நாயக்கர் குதிரைமேல் இருப்பானே பாகன், அதே மாதிரி உடம்பு அவனுக்கு. அவன் மந்திர தந்திரங்கள் படிச்சவன். மாயாவி. அவன் எப்படியோ சின்ன ராணியை மயக்கிக் கையில் எடுத்துவிட்டான். அவள் அடிமை மாதிரி அவனுக்குக் கட்டுப்பட்டாள்.'

‘என்ன மந்திரம் அது?’

‘ஏதோ மந்திரம். கதைதானே! கதையில அப்பிடி எவ்வளவோ மந்திரமும் மாயமும் இருக்கே.’

‘சரி’ என்றேன். எனக்குத் திடீரென்று அதெல்லாம் கனவுதான் என்ற எண்ணம் ஏற்பட்டது. விழித்தெழ முடியும் என்றும்.

‘ராத்திரி தம்புரான் சீமைக் கள் குடித்துவிட்டுத் தூங்கின பிறகு பட்டுச்செட்டி வருவான். கோட்டைக் கதவுக்கு வெளியே நின்னுட்டு அந்த மந்திரத்தைச் சொல்வான். அதைக் கேட்டதும் ராணி எந்திரிச்சுப் போய் கதவுகளைத் திறப்பாள். அவன் வந்து அவளுடன் சேர்ந்திருப்பான். ஒரு நாள் ஏதோ நினைப்பில் தம்புரான் எந்திரிச்சு வந்திட்டார். ராணி கதவுகளை மூடாம விட்டிருந்தா. உள்ள வந்த தம்புரான் ரெண்டு பேரையும் பாத்துட்டார். அப்படியே நெஞ்சு உடஞ்சு சரிஞ்சு விழுந்தார். ஒரு சொல்லு சொல்லலை. அப்பிடியே திறந்த கண்ணோட...’

‘அப்ப சாபம் யாரு போட்டது?’

‘வாயால சொன்னாத்தானா? அந்தச் சாபம்தான் இந்த ஊரையே இல்லாமல் ஆக்கியது. அப்பிடி ஒரு கதை...’

‘கதை சரி. உண்மையில எப்பிடி இப்பிடி ஆச்சு?’

‘ராஜ ஆட்சி போச்சு. யாரும் பட்டமும் வாரமும் அளக்கல்லை. வருமானமில்லை. தம்புரான் திருவனந்தபுரத்துக்குப் போய் மர வியாபாரம் செய்ய ஆரம்பிச்சார். அப்படித்தான். தூக்கம் வருதா?’

நான் அந்தக் கதையை உடனே மறக்க ஆரம்பித்தேன். அல்லது அதை நான் சரிவரக் கவனிக்கவேயில்லை. காரணம் அது ஒரு சாதாரணமான கனவு. எதிர்பாராததோ பயங்கரமானதோ ஆன எதுவும் இல்லை. ஒரு துரோகம், ஒரு சாபம். ஆனால் நீண்ட வரலாறு உள்ள எந்த இடத்திலும் துரோகங்களும் சாபங்களும் நிரம்பியிருக்கின்றன. உண்மையில் துரோகம் என்பது ஒரு முக்கிய அசைவு. மீறல். எல்லாம் அதனதன் ஒழுங்கில், பழகிய தடத்தில் நகர்கையில் காலமே தேங்கிவிடுகிறது. அசைவிழந்து மட்க ஆரம்பிக்கிறது. துரோகம் சட்டென்று அனைத்தையும் கலக்கிவிடுகிறது. புத்தம்புதிய வழிகள்

திறக்கின்றன. முன்பு இல்லாதவை நிகழ்கின்றன. துரோகம் அந்த அசைவின்மை கண்டு பொறுமை இழந்த ஒருவரால், புதியதைத் தேடித் தவிக்கும் ஓர் ஆத்மாவால் நிகழ்த்தப்படுவது.

அவள் போய்ப் படுத்தபிறகும் நான் அந்த உதிரிச் சிந்தனைகளை அளைந்தபடி தூங்கிவிட்டேன். என் உடல் அத்தனை களைத்திருக்காவிட்டால் அப்படிப்பட்ட ஓர் இடத்தில் என்னால் தூங்கியிருக்க முடியாது.

தூக்கத்தின் ஆழத்தில் எங்கோ அந்தக் கண்களைப் பார்த்தேன். விழித்துக்கொண்டு எங்கிருக்கிறேன் என்று பதைத்து நினைவுகூர்ந்து எழுந்து அமர்ந்தபோது உடல் வியர்த்துக் குளிர்ந்திருந்தது. மெதுவாக எழுந்து அந்த அறை நோக்கிச் சென்றேன். அந்த மனிதனின் கண்கள் இருளில் திறந்துதான் இருந்தன. அவற்றில் தெரியும் அந்த உக்கிரம் எப்போது எக்கணத்தில் குடியேறியது என நான் தெளிவாக உணர்ந்தேன். அருகே சென்று அவற்றை உற்றுப் பார்த்தேன். அவை என்னைப் பொருட்படுத்தவில்லை. மாறாத, நிலைத்த உக்கிரம்.

அந்தக் கனத்த கம்பளிப் போர்வையைப் பற்றி இழுத்தேன். அது மட்கிப்போயிருந்தது போலும். பிய்ந்து என் கையோடு வந்தது. ஈரமான கரையான் புற்றைப் பிரிப்பதுபோல அதைப் பிய்த்து விலக்கினேன். உள்ளே ஒன்றுமில்லை. எலும்புக்கூடு மட்டுமே எஞ்சியிருந்தது. தலையிலும் சதை இல்லை. மட்கிய புராதன மண்டையோட்டில் உயிர் எரியும் இரு கண்கள் மட்டுமே.

என்ன செய்துகொண்டிருக்கிறேன் என்ற பிரக்ஞை எழ, வீரிட்டபடி அறையிலிருந்து வெளியே பாய்ந்தேன். எதிரே அவள் நின்றிருந்தாள். அழகிய இளம் உடல், அலையடிக்கும் கருங்கூந்தல், உணர்ச்சியே இல்லாத முகம் கொண்ட முப்பரிமாண ஓவியம்போல.

‘நானூறு வருஷம் தாண்டியாச்சு’ என்று அவள் ஒரு வகையான கிட்டித்த குரலில் சொன்னாள். ‘நானூறு வருஷம். இன்னும் எனக்கு மோட்சமில்லை. இந்தக் கண்ணு ரெண்டும் மட்காதவரை எனக்குக் கதியில்லை...’ திடீரென்று, விசித்திர ஒலியுடன் வீரிட்டு அலறியபடி சுவரில் மோதிக் கீழே அமர்ந்து தலையில் கைகளால் ஓங்கி அறைந்து கதறி அழ ஆரம்பித்தாள்.

நான் வாசல்கள் வழியாக முட்டி மோதி விழுந்து எழுந்து ஓடினேன். ஒரு வழியாக, வெளியே பீறிட்டு மழை கொட்டிக் கொண்டிருந்த சேற்றுப் பரப்பில் தள்ளாடி ஓடி விழுந்து மயக்கமானேன். மறுநாள் மாடு மேய்க்கும் கும்பல் ஒன்று என்னை மீட்டது. அந்தப் புராதனமான சாலை அப்படிப் பலரைக் கவர்வதாகவும் அவர்கள் அதன் மறுநுனியில் இருக்கும் குட்டிச்சுவர் அருகே விழுந்து கிடப்பதுண்டு என்றும் சொன்னார்கள். நான் திரும்பிப் பார்க்கத் துணியவில்லை.

**உயிர்மை, அக்டோபர் 2004**

# 2. பாதைகள்

குடிவந்தபோது சிவசங்கரன் மாமா தன்னை ஓர் ஓவியர் என்றுதான் அறிமுகப்படுத்திக்கொண்டார். அந்த வீடு எட்டு வருடமாகப் பூட்டிக் கிடந்தது. அதைக் கட்டியவர் சிங்கப்பூர்க்காரரான டேனியல் வைத்தியர். அவ்வருடமே அவரது மகளும் மனைவியும் கார் விபத்தில் இறந்துபோனார்கள். வைத்தியருக்கு ஆரம்பத்தில் ஒன்றும் புரியவில்லை. அழுகையும் படுக்கையுமாக இருந்தார். ஊரார் போய் துக்கம் கேட்டார்கள். மூன்று மாதத்தில் எழுந்து நடமாடி ஆறு மாதத்தில் வழக்கம்போலப் புது மாப்பிள்ளைக் கோலம் பூணுவார் என்றுதான் எதிர்பார்த்தார்கள். சில கல்யாணத் தரகர்கள்கூடப் போய் துக்கம் விசாரித்து வந்தார்கள். ஆனால் இரண்டு மாதம் கழித்து வைத்தியரின் நடவடிக்கைகளில் மாற்றம் தெரிந்தது. உடைகளைக் கோணலாக அணிந்துகொண்டு தனக்குத்தானே பேசிச் சிரித்துக்கொண்டு நடமாட ஆரம்பித்தார். ஒரு மாதத்தில் எல்லாம் உறுதியாகிவிட்டது. பிடித்துக் கொண்டுபோய் ஊளன்பாறை பைத்திய ஆஸ்பத்திரியில் சேர்த்தார்கள். அங்கு போன எவரும் திரும்ப வருவதில்லை.

வைத்தியரின் தம்பி சாமுவேல் உள்ளூரில் பலசரக்குக் கடை வைத்திருந்தார். அவர் ஒரு நாள் புது வீட்டில் பால் காய்ச்சி பாதிரியாரைக் கூப்பிட்டு ஜெபம் வைத்துக் குடியேறினார். அவர்தான் டேனியல் வைத்தியருக்குச் செய்வினை வைத்தது என்று ஊரில் பேச்சு இருந்தது. ஆறு மாதத்திற்குள் சாமுவேல் வீட்டை விட்டு மாறி குலசேகரத்திற்குக் குடிபோனார். அவரது மகள் டெய்சிபாய்க்கு ஏதோ ஆகிவிட்டது என்றார்கள். சும்மா கெட்ட கனவுகள்தான் என்று அவர் சொன்னாலும் மறைக்க முடியவில்லை. டெய்சிபாய்க்கும்

மனநிலை பிசகிவிட்டது. அவளைக் கேரளா பக்கமாக ஏதோ ஒரு குருசடிக்குத்தான் கொண்டுபோனார்கள்.

அதன்பிறகு அந்த வீட்டில் யாரும் குடியேறத் துணியவில்லை. இரவில் வேட்டியை நன்றாக ஏற்றிக் கட்டி தலையில் தலைப்பாகையும் தோளில் குற்றாலம் துண்டுமாக வைத்தியர் அந்த வீட்டைச் சுற்றிவருவதைத் தான் கண்டதாக அப்பு நாடார் சொன்னார். துருப்பிடித்த பூட்டு தொங்கும் வீட்டுக்குள் இரவில் சில சமயம் விளக்குகள் எரிவதும் ஆட்கள் நடமாடுவதும் தெரிவதாக அம்மிணிப் பாட்டி சொன்னாள். பாட்டியின் வீட்டுக்கு இருநூறடி தொலைவில்தான் வைத்தியரின் வீடு. பெரிய தோட்டத்திலும் எவரும் நடமாடாமல் ஆகி காடு அடர்ந்தது. வீடு ஆங்காங்கே காரை உதிர்ந்து ஜன்னல் பலகைகளில் பூசணம் பூத்துப் பாழடைந்தது.

அந்த வீட்டுக்குத்தான் சிவசங்கரன் மாமா திடீரென்று குடிவந்தார். அவர் வீட்டைக் கிரயம் செய்தது யாருக்கும் தெரியாது. ஒரு நாள் காலையில் மூன்று மாட்டு வண்டிகளில் வீட்டுச் சாமான்கள் வந்திறங்கின. வீட்டை வண்டிக்காரர்களே கூட்டிப் பெருக்கினார்கள். ஒருவன் முற்றத்தில் அடர்ந்திருந்த புற்களையும் தொட்டால்வாடிச் செடிகளையும் மண்வெட்டியால் செதுக்கினான். கதவுகளிலும் சன்னல் கம்பிகளிலும் செடிகள் படர்ந்திருந்தன. நான் வேலி அருகே நின்று வேடிக்கை பார்த்தேன். வழுக்கைத் தலையும் சோடாப்புட்டிக் கண்ணாடியும் அணிந்த குள்ளமான ஒரு மனிதர் சுறுசுறுப்பாகச் சுற்றிவந்து சாமான்களை இறக்கிக்கொண்டிருந்தார். என்னுடன் அச்சுதன் பணிக்கரும் வந்து நின்றுகொண்டார். ‘வெளியேயிருந்து வந்தவனுகளாக்கும். இல்லாட்டி இப்பிடித் துணிஞ்சு கேறிக்கிட மாட்டானுக’ என்றார் பணிக்கர்.

நான் ‘வழுக்கைத் தலை ஆளு ஆராக்கும்?’ என்றேன்.

‘அவன்தான் ஓனரு. படம் வரையுத ஆளுன்னாக்கும் பேச்சு.’

‘படமா? புஸ்தகத்திலயா?’

‘ஆரு கண்டா? சாவதுக்காக்கும் வந்திருக்கான். நீ பாரு மக்கா, இண்ணு இருட்டி நாளை வெளுக்கும்பம் அவன் சங்கதிகள் மனசிலாக்குவான். பாவம்...’

நான் வெகுநேரம் கழித்து வீட்டுக்குச் சென்று அம்மாவிடம் விஷயத்தைச் சொன்னேன். அதற்குள் நாணிப் பாட்டி ஊர் முழுக்க எல்லாவற்றையும் சொல்லிவிட்டிருந்தாள். வந்தவர் பெயர் சிவசங்கரன். திருவனந்தபுரத்தில் படம் வரைந்து கொண்டிருந்தவர். மனைவி செத்துப் போய்விட்டாள். பிள்ளைகள் இல்லை. ‘தனிக்கட்டை துணிஞ்ச கட்டை. இல்லேன்னா இப்பிடி வருவானா. பாவம்...’ என்றாள் பாட்டி.

ஆனாலும் ஒன்றும் நிகழவில்லை. நான் மறுநாள் காலையிலேயே விபரீதச் சேதிக்காக அடித்துப் புரண்டு போய் பூவரச வேலியில் நின்று பார்த்தபோது சிவசங்கரன் மாமா பிரஷ் வைத்துப் பல் தேய்த்துக்கொண்டிருந்தார். எங்களூரில் அப்போது டாக்டர் ஒருவர்தான் அப்படிப் பல் தேய்ப்பார். அவர் சோப்புப் போட்டுப் பல் தேய்ப்பதாக நான் நீண்ட நாள் நம்பி வந்தேன். பிறகுதான் அது ஒரு பசை மருந்து என்று தெரிந்துகொண்டேன். என் எதிர்கால லட்சியங்களில் ஒன்றாக அப்படிப் பல் தேய்ப்பது இருந்தது. நான் பார்ப்பதைக் கவனித்ததும் மாமா கையசைத்து என்னைக் கூப்பிட்டார். மறுகணம் நான் திரும்பி ஒரு கையில் அவிழும் காற்சட்டையைப் பற்றியபடி ஓடி மூச்சுத் தெறிக்க என் வீட்டுக்குள் பாய்ந்து சமையலறைக்குள் நுழைந்தேன்.

‘என்னடா’ என்றாள் அம்மா. நான் ஒன்றும் சொல்லவில்லை.

‘அந்தத் தெருநாய்ட்ட விளையாடதேன்னு ஆயிரம் மட்டம் சொன்னேம்பிலே?’ என்றாள். முதுகில் ஒரு பொய்யடி வைத்தாள்.

எனக்கு அது சிவசங்கரன் மாமாதானா என்ற சந்தேகம் வந்தது. பேய்கள் அப்படி வேடம் மாறி வந்து நிற்கலாமே. கை வீசி என்னை ஏன் அது கூப்பிடவேண்டும்? யோசித்துப் பார்த்தபோது, அதன் கால்கள் தரையிலேயே படவில்லை என்றும் தோன்றியது. இரண்டு நாள் இரவும் பகலும் அதைப் பற்றி யோசிக்காமல் இருக்க முயற்சி செய்து உலவினேன். மூன்றாம் நாள் பயம் குறைந்து ஆவல் ஏறியது. மாலையில் மெல்ல நடந்துபோய் வைத்தியர் வீட்டைப் பார்த்து நின்றேன். வீட்டு முன் யாரும் இல்லை. உள்ளே போகலாமா வேண்டாமா என்று நான் வெகுநேரமாக யோசித்துக்கொண்டிருக்கும்போது பின்பக்கம் மாமா வந்து நின்றார். நான் மூச்சு அவிந்து, பேச்சிழந்து நின்றேன்.

அவர் கையில் இருந்த பையைக் கீழே வைத்துவிட்டு, வேட்டியை நன்றாகத் தூக்கிக் கட்டினார். ‘உள்ளே வா. ஏன் இங்கே நின்று பாக்கே?’ என்றார்.

நான் ‘இல்லை’ என்றேன். பின்னால் நகர்ந்தேன்.

‘என்ன பயப்படுதே? ஆம்பிளைதானே? இந்த வயசில இப்பிடி பயப்பட்டா எப்பிடி? வா’ என்றபடி உள்ளே போனார்.

ஆண்பிள்ளையா என்ற கேள்வி என்னை உசுப்பியது. மேலும் அவர் சிரிப்பும் நம்பிக்கை தரக்கூடியதாக இருந்தது. மாமா, வீட்டின் புதிய பித்தளைப் பூட்டைத் திறந்து உள்ளே போய் பையை வைத்தார். எனக்கு அந்த வீட்டுக்குள் வெளிச்சம் அலையடிப்பதுபோல இருந்தது.

‘கொஞ்சம் பலசரக்கு, காய்கறி வாங்கிட்டு வந்தேன். சமையல் சொந்தமாத்தான். என்ன பாக்கே?’

‘வெளிச்சமா இருக்கு.’

‘வெள்ளையடிச்சேன்’ என்றார்.

சுவர்களின் பால் வண்ணம் அப்போதுதான் என் கவனத்திற்கு வந்தது. ‘இது வேற மாதிரி வெள்ளையா இருக்கு.’

‘இது சுண்ணாம்பில்ல. பெயிண்ட்.’

‘நீங்களே அடிச்சீங்களா?’

‘ஆமா. சும்மா இல்லை, இதுமேல படம் வரையப்போறேன்.’

‘சுவரிலயா?’ நான் கோயில்களில் அப்படிப்பட்ட படம் பாத்திருக்கிறேன். ‘சாமி படமா?’

‘இது வேற மாதிரிப் படம்.’

அவர் எனக்குப் பால் இல்லாத டீ தந்தார். நான் குடித்துவிட்டு வீட்டைச் சுற்றிப் பார்த்தேன். மிகப் பெரிய வீடு. எங்கள் வீடே பெரிது. இது அதைவிட ஏழெட்டு மடங்கு பெரிது. நிறையக் கூடங்கள், அவற்றிலிருந்து திறக்கும் வாசல்கள். வழி தவறி பல அறைகளில் அலைந்து மீண்டும் கொல்லைக்கே வந்தேன். மாமா வேறு அறையிலிருந்து கூப்பிட்டார். அவருடன் மீண்டும் முகப்புக்கு வந்தேன்.

‘உங்களுக்கு வீட்டில் யாருமே இல்லையே. எதுக்கு இவ்வளவு பெரிய வீடு?’ என்றேன்.

‘படம் வரையத்தான்’ என்றார் மாமா.

நான் அந்த வீட்டுக்குள் போன விஷயத்தை அம்மாவிடம் கூறவில்லை. அடுத்த நாள் எங்கள் வீட்டில் எல்லோரும் சுசீந்திரம் தேர் பார்க்கப் போனோம். கன்னியாகுமரிக்கும் போய்விட்டு நாராயணன் சித்தப்பா வீட்டில் தங்கி நான்கு நாள் கழித்து நள்ளிரவில் திரும்பி வந்தோம். மறுநாள் காலையில் எழுந்து கருப்பட்டிக் காப்பி குடித்ததுமே நான் கால்சட்டையைக் கையில் பிடித்துக்கொண்டு மாமா வீட்டுக்கு ஓடிப்போனேன். கதவு சாத்தியிருந்தது. ‘மாமா’ என்றேன்.

‘வா வா’ என்றார் அவர் உள்ளேயிருந்தது.

நான் கூடத்துக்குள் நுழைந்ததும் பிரமிப்பும் குழப்பமுமாக நின்றேன். கூடம் முற்றிலும் மாற்றிக் கட்டப்பட்டிருந்தது. இரண்டு புதிய வாசல்கள் திறந்தன. ஒன்று சற்றே இருட்டின ஓர் அறை நோக்கித் திறந்தது. உள்ளே மங்கலான மின்விளக்கு மட்டும் எரிய, உள்ளே யாரும் இல்லை. மேஜை நாற்காலிகள்மீது மட்டும் வெளிச்சம். மேஜைமீது சில புத்தகங்கள், ஒரு காலி டம்ளர். இன்னொரு கதவு முழுக்கத் திறந்து கிடந்தது. உள்ளே அதற்கடுத்த அறைக்கான வாசல். அதற்குள் அதற்கடுத்த வாசல். அப்பால் வெயில் சரிந்து விழுந்த கொல்லைப்புறத்தில் சில வாழையிலைகளும் ஒரு தென்னை ஓலையும். நான் மாமா என்று கூவியபடி அந்த வாசலில் நுழைய முயன்று முகத்தில் அறைபட்டு நின்றேன். ஒரு கணம் என் மூளை குழம்பியபிறகே அது சுவரில் வரையப்பட்ட ஓவியம் என்று தெரிந்தது.

இன்னொரு வாசலைத் தொட்டுப் பார்த்தேன். அதுவும் ஓவியம். எனக்கு அறிமுகமான பழைய வாசலையும் மெதுவாக ஐயத்துடன் தொட்டுப் பார்த்தேன். அதுவும் ஓவியமே என்று தெரிந்தபோது என் மனம் முழுக்கப் பயம் பிடித்தது. திரும்பிவிட எண்ணிக் கதவை நோக்கிச் சென்றேன். வெயில் பரவிய தோற்றத்துடன் அவ்வாசலும் ஓவியம்போலத்தான் இருந்தது. அதை நோக்கிச் செல்ல எனக்குத் தைரியம் வரவில்லை. நான்கு பக்கமும் வாசல்கள். நான்கும் ஓவிய வாசல்கள். பீதியுடன் நான் அழ ஆரம்பிக்கும்போது இருண்ட அறையின்

சன்னல் பெயர்ந்து விலகி அங்கு ஒரு கதவு திறந்து மாமா வந்தார். ‘பயந்திட்டியா?’ என்றார்.

நான் உடனே விசும்பி அழுதேன். அவர் என்னைத் தோளைத் தொட்டு அணைத்துக்கொண்டார். ‘வா’ என்று அழைத்துச் சென்றார்.

உள்ளே பல அறைகளில் வண்ணம் தீட்டப்பட்டிருந்தது. முடிவடையாத ஓவியங்கள். எதிலுமே வழக்கமான ஓவியங்கள் போல மனிதர்கள், விலங்குகள் ஏதும் இல்லை. எல்லாமே கதவுகள், சன்னல்கள், அறைத் திறப்புகள்.

மாமா எனக்குப் பால் விடாத டீ கொடுத்தார். நான் அதைக் குடித்தபடி, ‘எதுக்கு இப்படி வரையறீங்க?’ என்றேன்.

‘சும்மாதான்’ என்றார் கண்களைச் சிமிட்டியபடி. ‘பேய்கள் நம்மளைப் பிடிக்க வந்தா வழி தெரியாம குழம்பிப் போய்டும் பாரு அதான்.’

நான் வயிறு குபீரிட எழுந்துவிட்டேன். மாமா என் கையைப் பிடித்தார். ‘எங்க ஓடறே?’

‘இங்க பேய் இருக்கா?’

‘சும்மா சொன்னேன். பேயும் பிசாசும் ஒரு மண்ணும் இல்லை. நீ படித்த பிள்ளைதானே? சிந்திச்சுப் பாக்கவேண்டாமா?’

‘அப்ப ஏன் இப்பிடி வரையணும்?’

‘சும்மா ஒரு ஜாலிக்காகத்தான். எனக்குச் சின்ன வீடுகளே பிடிக்காது. எப்பவுமே பெரிய வீட்டிலதான் இருப்பேன். வீட்டுக்குள்ளேயே காலார நல்லா நடக்கணும், ஓடணும். அவ்வளவு பெரிய வீட்டுக்கு எங்க போறது? எவ்வளவு பெரிய வீடுன்னாலும் அதுக்கு ஒரு அளவு இருக்கே. இது அந்த மாதிரி இல்லை. இஷ்டத்துக்கு விரிச்சுக்கிட்டே போகலாம். இப்ப இந்த வீட்டுக்குள்ளே எத்தனை ரூம் இருக்குன்னு எனக்கே எண்ணிச் சொல்ல முடியாது. நேத்தைக்கு ராத்திரி கரெண்டு போயிடுச்சு. லாந்தரை எடுத்துக்கிட்டு சமையலறைக்குப் போனேன். வழி தவறிட்டது. அலைஞ்சு ஒரு வழியா போய்ச் சேர ஒரு மணி நேரம் ஆச்சு தெரியுமா?’

எனக்கு நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. அந்த வீட்டுக்குள் பார்ப்பவை இப்போது பயத்தையும் பரவசத்தையும் ஏற்படுத்தின. அதைப் பற்றி அம்மாவிடம் சொல்லாமல் இருக்க முடியவில்லை. அரைகுறையாக ஏதோ சொல்லப்போக, அம்மா குத்திக் குடைந்து எல்லாவற்றையும் கேட்டாள். அவள் முகத்தில் பீதி வெளுத்துப் படர்ந்து, 'இனிமே நீ அங்கே போகப்பிடாது. போனா கையக் கால முறிச்சிடுவேன்' என்று சொல்லிவிட்டாள்.

அவள் அப்படி ஒப்புக்கு ஏதும் சொல்வதில்லையாதலால் நான் அரண்டு போனேன். நாலைந்து நாள் மாமா வீட்டுப் பக்கமே தலை காட்டவில்லை. ஐந்தாம் நாள் அப்பக்கமாக ஓரக்கண்ணால் பார்த்தபடி போய் 'மாமா! மாமா!' என்று கூப்பிட்டேன். 'உள்ளே வா' என்று மாமாவின் குரல் கேட்டது. வாசலைத் திறந்து கூடத்தில் சமைந்து பிரமித்து நின்றேன். திறந்துகிடந்த ஆறு கதவுகள் வழியாகவும் ஏராளமான கதவுகள் திறந்த நீண்ட பாதைதான் தெரிந்து. மனம் படபடக்க ஒரு கணம் நின்றுவிட்டுத் திரும்பி ஓடி வந்துவிட்டேன்.

மாமாவைப் பற்றிய செய்தி அதற்குள் ஊருக்குள் பலவாறாகப் பரவிவிட்டது. அவர் ஒரு சூனியக்காரர் என்று நாணிப் பாட்டி சொன்னாள். அவருடைய வீட்டுக்குள் பலவிதமான ரகசிய வாசல்களும் பாதைகளும் திறந்திருப்பதாகவும், அதன் வழியாக டேனியல் வைத்தியரும் அவருடைய மகனும் மனைவியும் எல்லாம் சுற்றி அலைவதாகவும், சில சமயம் அவர்களுக்கும் சிவசங்கரன் மாமாவுக்கும் பெரிய சண்டை நடப்பதாகவும் சொன்னாள். தொடர்ந்து கேட்ட கதைகளால் கிலியடைந்து நான் மாமா வீட்டுப் பக்கமாகப் போவதையே தவிர்த்தேன்.

திருவனந்தபுரத்தில் ஓட்டலில் வேலை செய்யும் சிவதாணு, ஊருக்குப் புதிய செய்தியுடன் வந்தான். மாமாவின் மனைவி இறக்கவில்லை. ஒரு ஆசாரியுடன் கோழிக்கோட்டுக்கு ஓடிப் போய்விட்டாள். அதன் பிறகு மாமா சில காலம் மனநிலை பிசகி சிகிச்சை எடுத்துக்கொண்டிருக்கிறார். நெடுமங்காட்டுப் பக்கம் ஒரு வீட்டில் கொஞ்ச நாள் இருந்தார். ஊரார் கூடி அவரை அடித்துத் துரத்தி அந்த வீட்டுக்கும் தீ வைத்திருக்கிறார்கள். அதன் பிறகு பத்து வருடம் ஆளை

யாரும் காணவில்லை. வடக்கே சாமியாராகி அலைவதாகச் சொல்லப்பட்டது. போன வருடம் திரும்பி வந்து அவரது மனைவியை கோழிக்கோட்டில் சந்தித்து கட்டையால் தாக்கியிருக்கிறார். அவளுக்கும் ஆசாரியால் பிறந்த குழந்தைக்கும் அடி விழுந்திருக்கிறது. அங்கிருந்து தப்பி ஓடி திருவனந்தபுரம் வந்து பூர்விக வீட்டை விற்றுவிட்டு தலைமறைவு ஆகிவிட்டார். கோழிக்கோடு போலீஸ் தேடி வந்தபோதுதான் எல்லாருக்கும் விஷயம் தெரியும். சிவதாணுவின் ஓட்டலுக்கு நேர் பின்னால்தான் அவரது வீடு.

'இப்பம் விளிச்சு ஒரு ஃபோனடிச்சாப் போறும். பிடிச்சு அமுக்கி எடுத்துப் போய்டுவா. அப்படிப்பட்ட பிடி கிட்டாப் புள்ளியாக்கும்' என்றான் சிவதாணு.

நான் மறுநாள் மாமாவின் வீட்டுமுன் பூவரச மரத்தடியில் நின்று வீட்டையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தேன். வெண்ணிறச் சுவர்களும் சிமெண்ட் கூரையும் கொண்ட, உயரம் குறைவான வீடு. வெளியேயிருந்து பார்க்கும்போது மிகவும் சாதாரணமாக மற்ற எல்லா வீடுகளையும் போலத்தான் இருக்கிறது. ஆனால் அதற்குள் எத்தனை ஊடுவாசல்கள், கதவுகள், ஊடு வழிகள், ரகசியப் பொந்துகள். உள்ளே போகும் ஒருவர் மீண்டு வரவே முடியாதபடி மாட்டிக்கொள்ள முடியும். நாட்கணக்கில், மாசக்கணக்கில், வருடக்கணக்கில். எனக்கு மூச்சுத் திணறியது. சிறுநீர் வந்து முட்டி ஒரே ஓட்டமாகத் திரும்பி ஓடி வந்துவிட்டேன். அன்றிரவும் பிறகும் என் கனவில் நான் விசித்திரமான வாசல்களைத் திறந்து திறந்து சுற்றியலைந்து வழி தவறி, பயந்து, சிறுநீர் கழித்து விழித்துக்கொண்டேன்.

மாமாவை வெளியே எவருமே பார்க்கவில்லை என்பதையும் எவரும் கவனிக்கவில்லை. ஒரு மாதம்வரை ஆனபோதுதான் அவர் அங்கே இல்லையோ என்ற சந்தேகம் ஏற்பட்டது. சாமான்கள் வாங்குவதற்காவது அவர் வந்தாக வேண்டுமே. பஞ்சாயத்து மெம்பர் சாமிதாஸ் நாடார் என் அப்பாவை வந்து பார்த்து இருவரும் தனியாக வெகுநேரம் பேசிக்கொண்டார்கள். மறுநாள் மீன் சந்தையில் ஊர்ப் பெரியவர்கள் கூடி மாமாவைப் பற்றிப் பேசியதாக அப்பு அண்ணா சொன்னார். முக்கியமான ஏழெட்டுப் பேர் கூடி மாமாவின் வீட்டுக்குப் போய் பலமுறை கூப்பிட்டுப் பார்த்தனர். பதில் இல்லை. ஞானகுணத்தை உள்ளே அனுப்பிப் பார்க்கச் செய்தனர். உள்ளே யாருமில்லை என்று அவர்

சொன்னார். வெளியே வீட்டைப் பூட்டி சாவியை மெம்பர் சாமிதாஸ் வைத்துக்கொண்டார். ஆனால் வீட்டுக்குள் இரவில் வெளிச்சம் தெரிவதாக நாணிப் பாட்டி சொன்னாள்.

‘அவரை அந்த வைத்தியருக்க பேய் பிடிச்சு முழுங்கிப் போட்டு. அதாக்கும்’ என்றான் அப்புக்குட்டன். எனக்குப் பல நாட்கள் இடைவிடாது மூத்திரம் முட்டுவதுபோன்ற பதற்ற நிலையும், நிலை கொள்ளாமையும் இருந்தது. பிறகு மெல்ல எல்லாரும் மாமாவை மறந்ததுபோலத் தோன்றியது. சேலக்கரை வீட்டு ருக்மிணித் தங்கச்சியின் மகள் அம்பிகாமணித் தங்கச்சி அயலூர்க்காரன் ஒருவனுடன் ஊரை விட்டு ஓடிப்போன தகவல் வந்து ஊரைப் பரபரப்பாக்கியது. அதன்பிறகு கோயில் திருவாதிரை விழாவில் பாறாசாலை பத்மத்தின் நடன நிகழ்ச்சி.

நான் வெகுநாள் யோசித்துத் தீர்மானித்து மாமாவின் வீட்டை அடைந்தேன். வீடு மேலும் பாழடைந்து மேலும் தனிமையும் மர்மமும் கொண்டு நின்றது. முற்றத்தை முட்செடிகள் மூடியிருந்தன. வெகுநேரம் பூவரச மரத்தடியில் நின்று வீட்டையே பார்த்தேன். மெதுவாகத் தைரியம் சேகரித்து வீட்டை நெருங்கி கதவருகே போய் ‘மாமா மாமா, சிவசங்கரன் மாமா’ என்று பலமுறை கூப்பிட்டேன். பதில் இல்லை. பூட்டை இழுத்துப் பார்த்தேன். கெட்டியான பூட்டு, சற்று துரும்பேற ஆரம்பித்திருந்தது. கதவைத் தள்ளிப் பார்த்தபோது ஒன்று தோன்றியது. வீட்டில் வேறு வாசல்கள் இருக்கக்கூடும். கொல்லைப் பக்கம் போய்ப் பார்த்தேன். உள்பக்கம் மூடியிருக்கிறதா என்று தள்ளினேன். கையில் சுவர் தட்டுப்பட்டது. இன்னொரு கொல்லைப் பக்கம் கதவு லேசாகச் சாத்தப்பட்டிருந்தது. ஓவியம்போலத்தான் இருந்தது. ஆனால் கை வைத்ததும் திறந்துகொண்டது.

உள்ளே நான்கு வாசல்கள் திறந்தன. ஒவ்வொன்றாக மூடினேன். மூன்றாம் வாசல் திறந்தது. மீண்டும் வாசல்கள். வாசல்கள் வழியாகத் திறக்கும் வராந்தாக்கள். பாதி மூடிய கதவுகளுக்கு அப்பால் ஒளி சரிந்திறங்கிய சன்னல்கள் கொண்ட அறைகள். பல வகையான அறைகள். செவ்வக வடிவமானவை, சதுர வடிவமானவை. எல்லா அறைகளிலும் பல வகையான வாசல்கள் திறந்து பல திசைகளுக்கு விரிந்த அறைவாசல் திறப்புகளைக்

காட்டின. திசைதடுமாறி விட்டிருப்பதை உணர்ந்தேன். ‘மாமா மாமா!’ என்று கூப்பிட்டேன். என் குரல் வேறு எங்கோ எதிரொலித்தது.

சற்று நேரம் வரை எப்படியும் மீண்டுவிடலாம் என்ற ஆழமான நம்பிக்கையும் அதிலிருந்து உருவான உற்சாகம் மிக்க ஆவலும் என்னிடம் இருந்தன. கால்கள் களைத்துச் சோர்ந்து, உடல் எங்கும் வியர்வை வழிய ஆரம்பித்தபோது உற்சாகம் வடிந்தது. இதோ வாசல் என்று உறுதியாக நம்பித் திறந்த பல வாசல்கள் பொய் என்று தெரியத் தெரிய பயம் மேலோங்கியது. ‘மாமா மாமா!’ என்று நான் கூவியபோது என் குரல் நடுங்கியதையும் பிறகு தழுதழுத்ததையும் நானே உணர்ந்தேன்.

யாரோ நடமாடும் காலடி ஓசை கேட்டது. அது என் காலடி ஓசைதானா என்று சோதிக்கச் சட்டென்று நின்று கேட்டேன். இல்லை, வேறு யாரோ. வேறு யாரோ மிக நிதானமாக நடந்து செல்லும் ஓசை. ‘யாரது?’ என்றேன். பதில் இல்லை. ‘மாமா!’ மீண்டும் நடந்தேன். இம்முறை என் நடை மெல்ல மெல்ல ஓட்டமாக மாறியது. ஒரு கட்டத்தில் துரத்தப்படுபவன்போல வாயால் மூச்சு விட்டபடி ஓடிக்கொண்டிருந்தேன்.

களைத்துத் திரும்பி தலையைக் கைகளால் பற்றிக்கொண்டு குனிந்து தரையில் அமர்ந்தேன். மூச்சும் தாகமும் தொண்டையை அறுத்தன. எச்சில் கூட்டி விழுங்கிவிட்டு எழுந்தபோது எதிரே திறந்த வாசல்களுக்கு அப்பால் ஒரு மனிதர் வேட்டியை வயிற்றின்மீது ஏற்றிக் கட்டி தலையில் தலைப்பாகையும் தோளில் சிவப்புக் குற்றாலம் துண்டுமாக மெல்ல நடந்து செல்வது தெரிந்தது. மிதமிஞ்சிய பயத்துடன் உறைந்து நின்று அவரைப் பார்தேன். ‘வைத்தியர்’ என்று என் மனம் சொன்னதுமே எல்லா உறுப்புகளும் பரபரப்படைந்தன. ஓடி அவ்வாசலை முட்டியபோது அது நிலைக்கண்ணாடி என்று தெரிந்தது. அப்படியானால் அது பிரதிபலிக்கும் வாசல் எது? நேர் எதிரில் இருந்தது ஓர் ஓவியவாசல்தான். வாசல்களை முட்டி முட்டி இறுதியில் திறந்த அது வேறு ஒரு வராந்தாவுக்குக் கொண்டு சென்றது. அங்கிருந்து இன்னொரு அறைக்கு. மீண்டும் அதே வராந்தா. மீண்டும் அறைகள், மீண்டும் நான் வந்தது முதலில் இருந்த அதே அறைக்குத்தான், ஆனால் வேறு திசையிலிருந்து.

ஒருமுறை நின்று மூச்சு வாங்கியபோதுதான் நான் தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருப்பதை உணர்ந்தேன். அழுதபடியே அறைகள் அறைகளாக ஓடினேன். ஓர் அறைக்குள் ஒரு அம்மாவும் பெண்ணும் இருப்பது சன்னல் இடைவெளி வழியாகத் தெரிந்தது. அம்மா கட்டிலில் படுத்திருக்க, பெண் பைபிள் படித்துக்கொண்டிருந்தாள். ஆனால் நான் அறைக்குள் நுழைந்ததும் காட்சிக் கோணம் மாறிவிட்டது. யாருமில்லை. மீண்டும் ஓட்டம். வெகுதொலைவில் மீண்டும் வைத்தியரைக் கண்டேன். வெகுநேரம் கழித்து மிகப் பக்கத்து அறையில் அம்மா பெண்ணிடம் ஏதோ சொல்வதைக் கேட்டேன். அவ்வறைக்குள் நுழைய முயன்று அது ஓர் ஓவியம் என்று கண்டேன்.

கடைசியில் ஒரு பெரிய கூடத்தில் அப்படியே குப்புற விழுந்துவிட்டேன். நான் சில கணங்களில் செத்துவிடுவேன் என்று தோன்றியது. கண்களை மூடிக்கொண்டபோது முதுகு கோடிக் கண்களினால் ஆன ஒரு பரப்பாக மாறி, காட்சிகள் தெரிய ஆரம்பித்தன. யாரோ நெருங்கி வருகிறார்கள். கூட்டத்திற்குள் வந்து என்னைப் பார்க்கிறார்கள். சில கணம் பார்த்தபடி நின்ற பிறகு திரும்பி வேறு ஓர் அறைக்குள் நுழைகிறார்கள். நான் பாய்ந்து எழுந்து கூடத்தைப் பார்த்தேன். நான்கு பக்கமும் திறந்த அறைகளின் முடிவற்ற வரிசை. ஓர் அறைக்குள் நுழைய முயன்றேன். அது கண்ணாடிப் பிம்பம். உடனே அதுவரை அறுபட்டிருந்த கண்ணீர் பிறீட்டு வந்தது. ‘அம்மா’ என்று அழுதேன். ‘அம்மா அம்மா’ என்று கூவியபடி கதவுகளை முட்டி ஒன்றில் நுழைந்து இன்னொன்றில் ஊடுருவிச் சென்று மீண்டும் களைத்து நின்றேன்.

அப்பால் திறந்த பிரகாசமான அறை ஒன்றில் மாமாவைக் கண்டேன். மேஜைமீது பேப்பர் வைத்து வரைந்துகொண்டிருந்தார். மேஜைமீது ஒரு மூன்று வயதுப் பெண் குழந்தை உட்கார்ந்து சாயங்களால் விளையாடிக் கொண்டிருந்தது. மறுபக்கம் ஒரு பெண் ஏதோ படித்துக்கொண்டிருந்தாள். அது அவர் மனைவி என்று தெரிந்தது. நான் மாமா என்று கூப்பிட்டேன். மாமா மாமா என்று கத்தினேன். மாமா அருகே இன்னொருவன் அமர்ந்து டீயை ஸ்பூனால் கலக்கிக்கொண்டிருந்தான். அல்லது ஸ்பூனால் எதையோ அதிலிருந்து எடுத்தான். நான் அவர்களை ஒரு கணம்தான் கண்டேன். குரல் எழுப்பியபடி சற்று முன்னகர்ந்தபோது கோணம் மாறிவிட்டது. அவர்களைத் தெரியவில்லை.

மீண்டும் கதவுகளைத் தட்டித் தட்டி திறந்து திறந்து ஓடிக் களைத்து நின்றேன். அப்போது அச்சம் முற்றிலும் விலகிவிட்டது. பிரமிப்பு மட்டும்தான். அவர்கள் என்னை வேறு எங்கிருந்தோ பார்க்கிறார்கள் என்று உணர்ந்தேன். அவர்களைப் போலத்தான் நானும். இனி இவ்வீட்டில் நுழைபவர்கள் என்னையும் ஓவியமாகக் காண்பார்கள். மறு கணம் பீடித்த பேரச்சம், என்னைத் தூக்கி வீசியதுபோலப் பாய வைத்தது. நான் வெளிவந்த கூடம் பல முறை அதற்குள் வந்ததுதான். சுவரில் ஒரு பெரிய ஓவியம் மாட்டப்பட்டிருந்தது. அது ஒரு புங்கமரம். அதற்கு அப்பால் தெரு. வீடுகளில் விளிம்புகள். எனக்கு அறிமுகமான இடம். நான் ஓவியம் நோக்கிப் பாய்ந்தேன். ஆனால் அது ஒரு திறப்பு. தோட்டத்தில் அந்தப் புங்கமரத்தில் வந்து மோதி விழுந்தேன்.

எழுந்து திரும்பிப் பார்க்காமல் ஓடினேன். மாமா அந்த வீட்டுக்குள்தான் இருக்கிறார் என்று நான் சொன்னதைப் பல வருடங்கள் எல்லோருமே கிண்டல் செய்தனர். பிறகு அந்த வீடு இடிந்து விழுந்தது. நான் படிப்பிற்காக ஊரை விட்டு வந்தேன். மேலும் பல வருடங்கள் கழித்து ஒருநாள் அக்காட்சிகள் உக்கிரமான கனவாக வந்தன. விழித்துக்கொண்ட பின்பு நான் முதலில் அவ்வீட்டுக்குள் அனுபவித்ததும் கனவே என்று பட்டது. அல்லது கனவில் கண்டவை நனவுடன் கலந்து நினைவில் பதிந்திருக்கின்றன.

அன்று மாமாவுடன் அவ்வறையில் இருந்தவன் அந்த ஆசாரிதான் என்று ஒரு நினைவுக் கணத்தில் என் மனம் அறிந்தது. மற்றது அவர் மனைவியும் அந்தக் குழந்தையும்தான். உலகத்தை அறிந்துவிட்டிருந்தமையால் எனக்கு அதில் ஆச்சரியம் ஏற்படவில்லை. ஆனால் உடனே அந்த வீட்டில் நான் சுற்றிச் சுற்றி அலைந்ததை மேலும் பல மடங்கு பீதியுடன் அனுபவித்தேன்.

உயிர்மை, நவம்பர் 2004

## 3. அறைகள்

ஏ க்நாத் மேன்ஷனில் அண்ணாச்சி ரங்கசாமியின் அறைதான் இருப்பதிலேயே சிறந்தது. அவர்தான் மேன்ஷனிலேயே மூத்த உறுப்பினர். அறை மாறி, அறை மாறி கடைசியில் இதைத் தேர்வு செய்திருந்தார். கீழே ஒரு மருந்துக்கடையின் குடோன். மாடிப்படி ஏறினால் முதல் வளையில் பிரிந்து செல்லும் இரு படிகள் குட்டிப் பால்கனிக்குச் சென்று அண்ணாச்சியின் அறையை அடையும். அவரது வாசலுக்கு முன்னால் சாலைதான். மேன்ஷனில் பிற அனைத்து அறைகளையும் சாலையோரக் குடிசைகள் போலத்தான் உணர முடியும். வராந்தாக்களில் இருபத்து நாலு மணி நேரமும் மனித நடமாட்டம் இருக்கும். ஆம், இருபத்துநாலு மணி நேரமும். இரண்டாம் ஆட்டம் முடிந்த கும்பல் வந்து சேர்ந்தபிறகு சினிமாக் கதை டிஸ்கஷன் முடிந்த கும்பல் வர ஆரம்பிக்கும். அவர்கள் கூடணைவதற்குள் மில் வேலைக் கும்பல் எழுந்துவிடும். ஆனால் அண்ணாச்சி அறை முற்றிலும் தனிமையானது. அவரைப் பார்க்கவென்று படியேறி மூன்று முறை திரும்பினால்தான் அவரது அறை வாசலை அடைய முடியும். சன்னல்கள் எல்லாம் வெளிப்பக்கமாகத் திறப்பவை. அண்ணாச்சி அவற்றை எப்போதும் மூடியே வைத்திருப்பார்.

அண்ணாச்சிக்கு நெல்லைப் பக்கமாக ஊர். மளிகைக் கடைகளுக்குப் போய் வசூல் செய்து தொகையை சிவகாசி முதலாளிக்கு அனுப்பி வைப்பது தொழில். மணமாகாதவர். குடி, சிகரெட், வெற்றிலைப் பாக்கு எந்தப் பழக்கமும் இல்லை. சீட்டாடும் கும்பலை அவர்கள் இருப்பதை அறியாதவர்போலக் கடப்பார். எவரிடமும் அதிகமாகப் பேசமாட்டார். கடன் கேட்பதற்காக எவரிடமும் நட்பு பாராட்டும் ‘உதவி இயக்குநர்’ கும்பல்கூட அவரை நெருங்குவது இல்லை. காலையில் பதினொரு மணிவரை அவர்

வெளியே வரமாட்டார். அதன் பிறகு குளித்து விபூதி, குங்குமம் அணிந்து வெள்ளைக் கதர்ச் சட்டை, தோள் துண்டு, கறுப்புப் பை ஆகியவற்றுடன் தலை குனிந்தபடி கிளம்புவார். போகிற வழியில் கஜா கடையில் இரண்டு பன், ஒரு டீ அல்லது மூன்று இட்லி, ஒரு டீ. அது மாதக் கணக்கு. கஜாவிடம் வழக்கமாக ஒருசில சொற்கள். தினத்தந்தியைப் புரட்டிப் பார்ப்பார். மாலையில் ஏழு ஏழரைக்கு வந்தால் உடனே அறைவாசலைச் சாத்திவிட்டு டேப்பில் பழைய சிவாஜி படப் பாடல்களைப் போடுவார். சத்தமாகவே இருக்கும். ஆனால் மேன்ஷனில் எச்சத்தமும் அப்படியே கடலில் நதி போலக் கரைந்துவிடும். அதன்பிறகு அவரைக் காலையில்தான் பார்க்க முடியும்.

நான் கடைசியாக வந்தவனாதலால் எனக்குக் கிடைத்தது உதவி இயக்குநர்கள்கூடச் சீண்டாத அறை. வரிசையாக எட்டு கக்கூஸ்களின் அருகை மாடிப்படியின் அடியில். அதற்கே நானூறு ரூபாய். கக்கூஸ்களை சிவனம்மா காலையில் ஒரு முறை வந்து ஐந்து நிமிடத்தில் கழுவிப் போனால் பிறகு தண்ணீர் ஊற்றப்படுவதே இல்லை. காடுகரைகளில் ஒதுங்கிப் பழகிய ஜனங்களுக்கு அது தேவை என்று படவில்லை. நான்தான் சகிக்க முடியாமல் சில முறை தண்ணீர் விடுவேன். அதெல்லாம் ஆரம்ப காலத்தில். பிறகு எனக்கே பழகிவிட்டது. அது இல்லாவிட்டால் நிம்மதி இழப்பேனோ என்னவோ.

அண்ணாச்சி ஒரு நாள் இரவில் ஏழெட்டுத் தடவை என் அறைப் பக்கமாக கக்கூஸ் போனதைக் கவனித்தபிறகு நான் வெளியே வந்து ‘என்ன அண்ணாச்சி’ என்றேன். ‘ஒண்ணுமில்லை தம்பி’ என்று சாதாரணமாகச் சொல்லிவிட்டுப் போனார். மறுமுறை அவர் வந்தபோது ‘வயிறு சரியில்லையா? மாத்திர வைச்சிருக்கேன்...’ என்றேன். ‘வேண்டாம்’ என்றார்.

மறுநாள் நான் அவர் அறையைத் தட்டி வயிறு சரியாகிவிட்டதா என்று கேட்டேன். அவர் கதவை அரை இஞ்ச் திறந்து சரியாகிவிட்டது என்று சொல்லிச் சாத்திவிட்டார். நான் அதை எதிர்பார்த்திருந்ததனால் புண்படவில்லை. ஆனால் மெல்ல மெல்ல எனக்கு ஓர் ஆர்வம் ஏற்பட்டது. அண்ணாச்சிக்கு என்னவோ ஒரு ரகசியம் இருக்கிறது, அதை அறிந்தாக வேண்டும் என்று.

உதவி இயக்குநரான எழில்வேந்தன் என்ற மாணிக்கம் சொன்னான், அண்ணாச்சி ஒரு ‘பொட்டை’ என்று. அவரால் பெண்களை நெருங்க முடியாது; ஆகவே சும்மா படங்கள் பார்த்து ரசிக்கிறார்; அதனால்தான் எவரையும் சேர்ப்பதில்லை. அவரை அவன் ஒருமுறை சிந்தாதிரிப்பேட்டையில் ஒரு புத்தகக் கடையில் பார்த்தானாம். பருவம், மதனமாளிகை, மூக்குத்தி, தாகம் போன்ற இதழ்களை அவர் வாங்கிக்கொண்டிருந்தார். அவர் நிரந்தர வாடிக்கையாளர் என்றானாம் கடைக்காரன். அவர் உள்ளே நீலப் படம் பார்க்கிறார், அதுதான் உண்மை என்று மாணிக்கம் சத்தியம் செய்தான்.

அண்ணாச்சியை நான் வேவு பார்க்க ஆரம்பித்தேன். அவர் வரும்போது பைக்குள் என்ன வைத்திருக்கிறார் என்று தெரியவில்லை. ஆனால் அவர் தன் அறைக்குள் டி.எம். சௌந்தரராஜனின் சிம்மக்குரல் நடுவே தனக்குள் பேசிக்கொள்வதைக் கேட்டேன். பேச்சு, அறைக்குள் வேறு எவரோ இருப்பதைப்போல சாதாரணமாக இருந்தது. உள்ளே எவரையோ அவர் ஒளித்து வைத்திருக்கிறார் என்று நானே எண்ணிவிட்டேன். ஆனால் உள்ளே போய்ப் பார்க்க முடியவில்லை. அண்ணாச்சியை என்னால் நெருங்க முடியவில்லை.

நெருங்க ஒரு வாய்ப்பு வந்தது. அண்ணாச்சிக்கு ஒரு நாள் மாரடைப்பு வந்தது. சாதாரண வாயுப்பிடிப்பு என்று கீழே போய் இஞ்சி முரைப்பா வாங்கியவர் அங்கேயே விழுந்துவிட்டார். ராயப்பேட்டை ஆஸ்பத்திரியில் போய்ப் பார்த்தேன். மெல்லிய தாக்குதல்தான்; நான்கு நாளில் போய்விடலாம் என்றார் டாக்டர். அண்ணாச்சி அப்படியே சோர்ந்து துவண்டுபோயிருந்தார். நான் கூடவே இருந்து பார்த்துக்கொண்டேன். ‘நீ உன் வேலையைப் பாரு… எனக்கு ஒண்ணுமில்லை’ என்றார் அண்ணாச்சி. நான் கேட்கவில்லை.

பேச்சுவாக்கில் அவருக்கு உற்றார் உறவினர் யாராவது இருக்கிறார்களா என்றேன். எவரும் இல்லை என்றார். பிறகு திடீரென்று ஒரு வேகம் ஏற்பட்டு அவர் செத்தால் வங்கியில் இருக்கும் நாற்பதாயிரம் ரூபாயில் பாதியை உவரியில் ஒரு அம்மன் கோயிலுக்குக் கொடுக்கவேண்டும் என்றும், மிச்சத்தை நாடார் அறக்கட்டளையின் ஆதரவற்றோர் விடுதிக்கு அளிக்கவேண்டும் என்றும்

சொன்னார். சரி என்றேன். வேறு எதையோ சொல்ல வந்தார். நிறுத்திக்கொண்டார்.

மறுநாள் மிகவும் தயங்கியபடி என்னிடம் அவரது அறைக்குப் போய் அங்கே யாராவது இருக்கிறார்களா என்று பார்த்துவர முடியுமா என்று கேட்டார். நான் ஆச்சரியத்துடன் ‘பூட்டின அறைல்லா?’ என்றேன். அவர் ‘இல்ல, ஒண்ணுமில்ல... சும்மாதான் சொன்னேன்’ என்றார்.

நான் எதற்கும் இருக்கட்டும் என்று அவர் அறையைத் திறந்து பார்த்தேன். கனகச்சிதமாக அடுக்கப்பட்ட அறை. ஏராளமான பத்திரிக்கைகள், புத்தகங்கள், எல்லாம் காமம். டெபோனேர், ப்ளேபாய் படங்கள், சாணித் தாள்கள், குட்டிப் புத்தகங்கள். ஆனால் சிடி, சிடி பிளேயர் ஏதுமில்லை. அவருக்கு அச்சிட்டவற்றில்தான் மோகம். ஒரே ஒரு முருகன் படம். அவ்வளவுதான். வேறு ஒன்றுமில்லை.

ஆனால் நான் திரும்பி நடக்கும்போது ஒன்ற உறுத்தியது. என்ன அது என்று பிறகுதான் உணர்ந்தேன். அங்கே குட்டி மேஜைமீது அண்ணாச்சியின் கையெழுத்தில் ஒரு குறிப்பு இருந்தது. ‘தாம்பரம் போறேன். வர லேட்டாகும். சண்முகம் கடையை முடிச்சிட்டுத்தான் வருவேன். அனேகமா சாப்பிட்டுதான் வர மாதிரி இருக்கும்.’ யாருக்கு எழுதிய குறிப்பு? அதை அவர் ஒரு டம்ளரை எடை வைத்துக் கண்ணில் காணும்படியாக வைத்திருக்கிறார். அண்ணாச்சி அறைக்கு யாராவது ரகசியமாக வந்து போகிறார்களா?

நான் அந்தச் சந்தேகத்தை சுற்றி வளைத்து அவரிடமே கேட்டுவிட்டேன். அவர் முகம் மிகவும் சிவந்துவிட்டது. கண்களை மூடிக்கொண்டார்.

‘என்னமாம் தப்பாக் கேட்டுட்டா மன்னிச்சிருங்க அண்ணாச்சி...’ என்றேன்.

‘இல்லல்ல, நீ சரியாத்தான் கேட்டே... நானும் யாரிட்டயாவது இதைச் சொல்லணும்னுதான் இருந்தேன்...’ என்றார். பிறகு சற்றுத் தண்ணீர் வாங்கி குடித்துவிட்டு சொல்ல ஆரம்பித்தார்.

*

‘நான் இப்ப சொல்றத நீ கவனமாக் கேக்கணும் பாத்துக்க. எனக்கு மனசுக்கோ ஒடம்புக்கோ ஒரு சிக்கலும் இல்ல. பலரும் என்னைப்

பொட்டைன்னு சொல்றது உண்டு. அது எனக்குத் தெரியும். அது உண்மை இல்ல. எதுக்குச் சொல்றேன்னா எனக்கு ஒரு பிரச்சினையும் இல்லை'. அண்ணாச்சி சொன்னார். 'எட்டு வயசில நான் ஊரைவிட்டு வந்தேன். பீச்சில் கடலை வித்தேன். அப்பா திருட்டுக்கு ஜெயிலுக்குப் போனபிறவு அம்மாதான் எங்களை வளத்தது. நாங்க நாலு பேரு. ஒரு தம்பி, ரெண்டு தங்கச்சி. நான் சேத்துச் சேத்து வீட்டுக்கு அனுப்பின பைசாவும், அம்மா கூலி வேலை செய்த பைசாவுமாக் குடும்பம் நடந்தது. பிறவு சில்லறை வியாபாரங்கள் செய்தேன். ஒரு கடை நடத்தினேன். தம்பியைப் படிக்க வைச்சேன். தங்கச்சிகளைக் கெட்டிக் குடுத்தேன். எல்லாம் ஒரு மாதிரி செட்டிலாயிட்டாவ. அம்மா செத்தா. அப்ப வியாபாரம் விழுந்தது. நல்ல நஷ்டம். தம்பி, தங்கச்சிகள்கிட்ட உதவி கேட்டேன். போடான்னுட்டாவ. அத்து அலைஞ்சப்ப பழைய கஸ்டமர் ஒருத்தர் இந்த வேலையில் சேத்தார். செரீன்னு இருந்துட்டேன். ஆரோடயும் ஒட்டுமில்ல உறவுமில்ல. பெண்ணு கெட்டணும்னு தோணல்ல... அப்டியே போச்சு வாழ்க்கை...

'நான் அடிக்கடி சிந்தாதிரிப்பேட்டையில சில வீடுகளுக்குப் போறதுண்டு. குறைஞ்ச செலவில் ஒரு ராத்திரி இருந்திட்டு வரலாம். என்ன... குளிக்க மாட்டாளுக. வாயில வந்ததப் பேசுவாளுக. நமக்கென்ன, தாலி கெட்டவா போறம்? சங்கதி ஒரு சின்ன நமைச்சல்தானே... அப்ப ஒரு நாள் ஒரு சின்னப் பொண்ணைப் பார்த்தேன். பேரு சுமதி. அது புதுசுபோல. நல்லா அடிச்சு மெரட்டி எறக்கிவிட்டிருக்காவ. மேலெல்லாம் காயம். அழுதுகிட்டே இருந்தது. 'செரிம்மா, நீ போ. உன்னை நான் ஒண்ணும் செய்யல்ல' அப்டீன்னேன். 'நான் உங்ககூட வந்திடுறேன். எந்த வேல வேணுமானாலும் செய்வேன். என்னைய கூட்டீட்டு போங்க, இல்லாட்டி செத்திருவேன்'னுச்சு. நமக்கு அப்ப நல்ல வருமானமில்ல. மேன்ஷனிலே தங்கல். என்ன செய்ய, சொல்லு? அது செரியான ரவுடி ஏரியா. வெட்டுன்னாக்க வெட்டு, அப்டிப்பட்ட ஆளுக. செரி, நான் நாளைக்கு வர்றேன்னு ஒரு நூறு ரூபாயக் கையில வச்சிட்டு கௌம்பிட்டேன். ஒரு மாசம் அந்தப் பக்கமாப் போகல்ல.

'அப்றமா அங்க போனப்ப அவளப் பத்திக் கேக்கல்ல. கேட்டா சந்தேகப்படுவானுக. ஆனா கண்ணு தேடீட்டே இருந்திச்சு. அன்னைக்கு ஒரு கரும்பூதம். ஒண்ணும் செரியில்ல. நடுராத்திரியே கௌம்பிட்டேன். சார

மழையும் உண்டு. தெருவெளக்கு அந்தப் பக்கத்தில் எரியாது. அப்ப ஒரு சந்துல அவள பாத்தேன். மஞ்சள் கரிய போத்திட்டு நின்னுட்டிருந்தா. தூரத்தில பாக்கிறப்பவே அது அவதான்னு தெரிஞ்சிட்டுது. வெளக்கும் வெளிச்சமும் ஒண்ணுமில்ல. ஒரு உருவம்தான் தெரிஞ்சது. ஆனா மனசுக்குத் தெரிஞ்சுபோச்சு. அப்ப ஒரு மாதிரி நடுக்கம் மனசில வருமே, அது வந்துபோட்டுது.

‘வெரசா நடந்து பக்கத்தில போனா அங்க யாருமில்ல. ஒரு சந்து வழியா அந்தப் பக்கம் இருக்க கடைக்க நியான் வெளிச்சம் தரையில விழுந்து கெடக்கு. அதுதான் இப்டி தெரிஞ்சிருக்குன்னு நினைச்சேன். ஆனா அப்டி இல்ல. அவள நான் பாத்தேன். தெளிவான பொம்பிளயா. ஒரு நிமிசம் மனசு நடுங்கிப்போட்டு. சடசடன்னு நடந்தேன். அப்ப பின்னால அவ வார மாதிரி ஒரு தோணல். திரும்பிப் பாத்தா யாருமில்ல. ஆனா அவ பின்னால இருக்கா. அதைத் தெளிவா என்னால அறிய முடிஞ்சது. ரொம்பக் கிட்டக்க. ஒண்ணுண்டுடே, எனக்கு அவ வாறது பயத்தக் குடுக்கல்ல. நமக்கு வேண்டப்பட்டவங்க வந்த மாதிரித்தான். ஆனா ஒரு துக்கம். அவளப் பாக்க முடியலியேன்னு.

‘மேன்ஷன்லே ஏறி கதவைத் தெறந்து உள்ளே போனேன். அவ வாசலிலே நிக்கா. ‘உள்ள வா’ன்னேன். தயங்கி வந்தா. அவ காலெடுத்து வைக்கிறதக்கூட என்னால அறிய முடிஞ்சுதுன்னா பாத்துக்கோ. ‘ஒக்காரு’ன்னேன். ஒக்காந்தா. அப்டி ஆரம்பிச்சுது அவளோட பழக்கம்.

‘இதை ஆரிட்ட சொல்ல முடியும். நீயே சொல்லு? என்னால அவள அப்டித் தெளிவாட்டு அறிய முடியுது. ஆனா பாக்க முடியாது. ஆனாலும் எனக்குச் சந்தேகம். ஒருவேளை இதெல்லாம் எனக்குத் தோணலா இருக்குமோன்னு. அதனால அவ இல்லைன்னு நினைக்க ஆரம்பிச்சேன். எல்லாம் கற்பனைன்னு பாவனை செய்ஞ்சேன். ஆனா உள்ள மனசுக்கு அவ அங்க இருக்கான்னு நல்லா தெரிஞ்சிருந்தது. அந்த மேசை மாதிரி, சேர் மாதிரி அவ அங்க இருக்கா. என்னைப் பிரியமா பாத்திட்டிருக்கா. அவ முகத்தில எப்பவும் ஒரு துக்கம். சில சமயம் என்னைப் பாக்காம அவளே என்னமோ யோசிச்சிட்டு அப்டியே இருப்பா. நான் அவளை மெல்ல சுமதீன்னு கூப்பிட்டு ஆறுதலா

என்னமாம் சொன்னா அப்டியே மலர்ந்திருவா. வெட்கமாச் சிரிப்பா. சிரிக்க ஆரம்பிச்சா சின்னப் புள்ள மாதிரிதான். அவ வெக்கத்தப் பாக்கணும். ராத்திரியில நாங்க ரெண்டு பேரும் சேந்து படுப்போம். அவளுக்க மணத்தை என் மூக்கு அறியும். பேசிக் கொஞ்சி அப்டியே தூங்கினா கனவில அவ உடலோட வந்திருவா. கனவிலதான் எல்லாம்.

‘அப்டியும் எனக்குச் சில சமயம் சந்தேகம் வந்திரும், எனக்குத்தான் என்னமாம் சிக்கலான்னு, மனநோய் ஆரம்பிச்சிருக்கான்னு. பத்திரிகையில மனநோய் பத்தி வாற எல்லாத்தையும் படிச்சிருவேன். எல்லா டெஸ்டையும் நானே வைச்சுக்கிடுவேன். மத்த எல்லா விஷயத்தையும் கவனிச்சுப் பாத்தேன். எனக்கு ஒண்ணுமே இல்ல. அப்ப இது உண்மைதான், தோணல் இல்லை. அதுக்கு சில ஆதாரங்கள் இருக்கு. ஒரு வாட்டி நம்ம எட்டாம் நம்பர் ராமசாமிக்க மனைவி இங்க வந்து தங்கியிருந்தா தெரியுமா? அவளுக்க குழந்தை ஒண்ணு மாங்காத் தலை. பதினைஞ்சு பதினாறு வயசு இருக்கும். அதை விஜயால காட்டணும்ன வந்திருந்தா. அது நான் பாத்ரூமில இருக்கிறப்ப என் ரூம் பக்கமாப் போயிருக்கு. நான் வாரப்ப அது உள்ள பேசிட்டிருக்கு. ஆமடே, அவகூட சாதாரணமாப் பேசிட்டிருக்கு. சின்ன பிள்ளைக பெரியவங்க கொஞ்சினாப் பேசுமே அது மாதிரி. வெக்கப்படுது, கையை நீட்டுது. எனக்கு வேத்துப்போச்சுடே. அப்டியே ஒடிப்போய் நாலு நாள் கழிச்சுத்தான் வந்தேன். ஏன்னு சொல்றேன். இதெல்லாம் இப்டி இருந்தாலும் எல்லாம் நம்ம கற்பனைதான்னும் ஒரு மனசுக்குத் தோணிட்டிருந்தது. அதாண்டெ என் தைரியம். இப்ப அது அப்டி இல்லைன்னு ஆயிடிச்சு. அப்ப ஒண்ணும் என் கட்டுப்பாட்டில் இல்லை.

‘அதுக்குப் பிறவு பாத்தேன், நாய் பூனை எல்லாம் அவளைப் பாக்குது. எதுத்த வீட்டு ஸ்வீட்டி ஒருக்கா இங்கே வந்தது. அவளைப் பாத்துக் கத்திட்டே ஓடிட்டுது. பூனை ஓடுறதில்ல. அவ இருக்க திக்கைப் பார்த்து ஒரு மாதிரி நீட்டி கூவிட்டிருக்கும். வேற ஆளு பார்த்தா அங்க என்ன அப்டி இருக்குன்னு நினைப்பாங்க. அப்டி வெறிச்சுப் பாக்கும். மொள்ள நான் பழகிட்டேன். அவளுக்கு மல்லிகைப்பூ பிடிக்கும்னு தினம் வாங்கிட்டு வருவேன். அவ வந்தபிறகு என் வாழ்க்கையில ஒரு நிறைவு வந்திட்டுது. என் ரூமைப் பாத்தாலே தெரியும். முன்னாடி அது அப்டியே குப்பையும் கூளமுமா இருக்கும்.

இப்ப எல்லாத்துக்கும் ஒரு அடுக்கும் ஒழுங்கும் வந்தாச்சு. நான் சிந்தாதிரிப்பேட்டை பக்கமாப் போறதேயில்லை. ஆனா அந்தப் பத்திரிகை படிக்கிற பழக்கம் மட்டும் போகல்ல. அது வேண்டியிருக்கு தம்பி. அதில வாற மாதிரித்தான் அவ ராத்திரியிலே... அதான்.

‘இப்ப அட்டாக் வந்தபோச்சு. செரி, இனிமே இருக்கிற நாள் இருக்கிறேன். ஒண்ணும் நஷ்டமில்லை. வாழ்க்கையில இவகூட இருந்த இந்த ஆறு வருசமும் நல்லா நிறைஞ்சு வாழ்ந்திருக்கேன். ஒரு சண்டை சச்சரவு இல்லை. இவளை மாதிரி ஆம்பிளை மனசைப் புரிஞ்சுக்கிட்டு நடக்கிற பொண்ணுக வேற இல்ல. எல்லாத்திலயும் ஒரு பெண்மை... என்ன சொல்றது ஒரு... அப்றம் மத்த விஷயத்தில வேகம் உண்டு. ஆனா அதுவும் ஒரு மென்மையோட இருக்கும். நமக்கு அதில பூர்ண திருப்தி தம்பி... ஆனா நான் போனா அவ என்ன ஆவா? அவ இருக்க எடத்துக்கு நான் போவேனா? இல்ல இது ஒருவகையில எங்களோட பிரிவா? தெரியல்ல. அதான் என்னைப் போட்டுப் படுத்துது.

‘நான் செத்தா எனக்கு நீ ஒரு உதவி செய்யணும். எங்க ரெண்டு பேரையும் பேர் சொல்லி ராமேஸ்வரத்தில ஒரு பிண்டம் வைச்சுக் கடலிலே கரைக்கணும். உனக்கு நான் என் ஆஸ்தியில இருபதாயிரம் ரூபா எழுதி வைச்சிருக்கேன். செய்வியா?’

*

அன்றிரவு அண்ணாச்சிக்கு அடுத்த அட்டாக் வந்து அவர் இறந்து போனார். அது நடக்கும்போது நான் அவர்கூட இல்லை. அதற்கான காரணம் விசித்திரமானது. அண்ணாச்சி இரவில் எழுந்து உடனே நான் அவரது அறைக்குச் சென்று அவளை ஆஸ்பத்திரிக்கு வரும்படி சொல்லவேண்டும் என்றார். நான் தயங்க, அவர் கெஞ்சினார். நான் இரவில் இறங்கி ஒரு ஆட்டோ பிடித்து மேன்ஷனுக்கு ஓடிவந்து அவரது அறையைத் திறந்தேன். அதன் வெறுமை முதலில் என்னைத் தாக்கியது. அதன்பிறகு என் முதுகுத் தண்டைச் சில்லிட வைக்கும் ஓர் அச்சம். அங்கே எவரையும் என்னால் உணர முடியவில்லை. முற்றிலும் காலியான அறை. இருந்தாலும் நான் மெல்ல ‘அண்ணாச்சிக்கு ஹார்ட் அட்டாக். அவருக்கு உங்களப் பார்க்கணுமாம்’

என்றேன். அறையில் எதையுமே நான் உணரவில்லை. ஒரு கணம் கழித்து அவ்வெதிர்பார்ப்பு குறித்த வெட்கம் எனக்கு ஏற்பட்டது.

மீண்டும் தெருவில் இறங்கி ஆட்டோவிலேயே ஆஸ்பத்திரிக்கு வந்தேன். அண்ணாச்சி இறந்திருந்தார். அவர் முகத்தில் வலியோ அச்சமோ இல்லை. நிம்மதியான தூக்கம்தான் தெரிந்தது. நர்ஸ் அவருக்கு அடுத்த அட்டாக் வந்ததாகச் சொன்னாள். அவர் ‘வந்திட்டியா, வந்திட்டியா’ என்று கூவியிருக்கிறார்.

நர்ஸ் என்னிடம், ‘சுமதிங்கறது இவருக்கு யாரு?’ என்றாள். ‘அவரோட சம்சாரம். செத்துப் போய்ட்டாங்க’ என்றேன். ‘நெனைச்சேன்’ என்றாள்.

அன்றே மின்மயானத்தில் அண்ணாச்சி எரிந்தார். மேன்ஷன் ஆட்கள் சிலர் வந்திருந்தார்கள். அண்ணாச்சியின் உயிலை எனக்கு அவர் ஏற்கெனவே தந்திருந்தார். அவரது அறைக்காகச் சண்டை ஆரம்பித்தது. சிவராமன் சென்று கைப்பற்ற, மற்றவர்கள் அவரது புத்தகச் சேகரிப்பைப் பங்கு வைத்தார்கள். ஒரே கிளுகிளுப்பாக இருந்தது.

எனக்குச் சலிப்பாக இருந்தது. குளித்து உடை மாற்றிவிட்டு இரவில் தூங்கும்முன் குளித்து உடை மாற்றுவது என் வழக்கம் என் கட்டிலில் படுத்தேன். ஜன்னல்களை இறுக்கமாக அடைத்துக்கொண்டு விளக்கை அணைத்தேன். சிறிய டார்ச் ஒளியில் என் தகரப் பெட்டியைத் திறந்து பழைய மூக்குத்தி இதழை எடுத்தேன். அதன் எட்டாம் பக்கத்தில் மேலாடை இல்லாமல், இரு பக்கமும் மூக்குத்தியும் கல்தோடும் கழுத்தில் பாசிமணி மாலையும் மட்டும் அணிந்து சிரித்துப் பார்த்த கரிய பெண்ணின் வண்ணப் படத்தைச் சில கணங்கள் உற்றுக் கவனித்தேன். பின் மல்லாந்துகொண்டேன். இருளில் மூக்குத்தியின் மெல்லிய மினுமினுப்பைக் கண்டேன். வியர்வையும் கூந்தலின் எண்ணெய்ப் பிசுக்கும் மணத்தன. ‘என் ராசாவுக்கு என்ன களைப்பு? கோவமா?’ என்று அவள் கேட்டபோது மெல்லிய இதழ்கள் என் தோள்களை உரசின. எச்சிலின் மணம் கொண்ட முத்தம். ‘ஏன் எம்மேல கோவமா?’ நான் அவளை சட்டென்று இறுக அணைத்து ‘உம்மேல கோவமா... நீ இல்லாம என்ன மிச்சமிருக்கு எனக்கு?’ என்றேன். ‘அய்யோ போறுமே’ என்று அவள் சிரித்தாள்.

# 4. தம்பி

பெயர் எம். சரவணகுமார். எம்.ஏ., ஆங்கில இலக்கியம்; ஒரு தனியார் கல்லூரியில் வேலை; கரிய திடமான உடல். கன்னங்கரிய நறுக்கப்பட்ட மீசை. நான் மேஜைமீது முன்னால் சாய்ந்து அவனை உற்றுப் பார்த்தேன். அப்படிப் பார்க்கும்போது நோயாளிக்கு அது ஓர் ஆய்வுப் பார்வை என்று படக்கூடாது. ஆகவே மிகவும் பயின்று உருவாக்கிய ஒரு கனிவும் பரிவும் மிக்க சிரிப்பு என் முகத்தில் பதிக்கப்பட்டிருக்கச் செய்தேன். திடமான தோள்கள், திடமான கண்கள். அப்படிப்பட்ட மனிதர்களுக்கு உளச் சிக்கல் வருவது மிக மிக அபூர்வம். வந்தால் எளிதில் சமாளிக்கவும் முடியாது.

எளிமையாகச் சொல்லப்போனால் பிளவாளுமை (Schizophrenia). வழக்கமாக டாக்டர்கள் இதற்கு உடனே மூளையின் மின்ரசாயனச் செயல்பாடுகளைக் குறைக்கும் மாத்திரைகளை எழுதித் தந்துவிடுவார்கள். ஆறு மாதம் அல்லது ஒரு வருடம். அதற்குள் நோயாளியின் மொத்தச் சிந்தனை வேகமே பத்தில் ஒன்றாகக் குறைந்துவிடும். காய்கறிபோல ஆகிவிடுவான். இயல்பான சிந்தனைக்கே மூளைச் சக்தி போதாது என்ற நிலையில் உபரியான பிளவாளுமைச் செயல்பாட்டுக்கு எதுவும் எஞ்சாது. முக்கியமாக நோயாளியால் வீட்டில் எவருக்கும் தொல்லை இருக்காது. நம் ஊரில் பேய் பிடித்தாலும் சரி, மனம் தவறினாலும் சரி, ஆட்டம் போடவேண்டும். ஆட்டத்தை நிறுத்துபவன் வெற்றி பெற்றதாக எண்ணப்படுவான். ஆனால் நான் மாத்திரைகளை நம்புகிறவனல்ல. எனக்கு உளச் சிகிச்சையில் நம்பிக்கை இருந்தது.

'நீங்கள் உங்கள் பிரச்னையை என்னிடம் தெளிவாகச் சொல்லலாம். நான் இவ்விஷயத்தில் முறையான படிப்பு படித்தவன். இருபது வருடங்களாக

இத்துறையில் இருக்கிறேன். இதுவரை ஆயிரம் பேரையாவது முழுமையாகச் சரிசெய்திருப்பேன். ஆகவே கண்டிப்பாக உங்களுக்கு உன்னால் உதவ முடியும். ஆம், நான் உங்கள் ரட்சகன். இப்போது என்னைத்தவிர வேறு எவரும் உங்களுக்கு உதவ இயலாது. மேலும் நாம் இருவருமே படித்தவர்கள்...' என்றேன். ஆங்கிலத்திலேயே பேச ஆரம்பித்தமைக்கு இரண்டு காரணங்கள்; அவன் ஆங்கிலத்தில் பேசினால் உளறமாட்டான். அம்மொழி நாவுக்கு இன்னமும் சரியாகப் பழகாத காரணத்தால் யோசித்து நிதானமாகத்தான் பேசுவான். மேலும், ஆங்கிலம் இந்தியச் சூழலில் அறிவுபூர்வமாகப் பேசுவதான உணர்வையும் அளிக்கிறது.

'ஆமாம் டாக்டர். உங்களைப் பார்த்ததுமே எனக்கு முழு நம்பிக்கை வந்துவிட்டது' என்றான் சரவணன். 'உங்களிடம் நான் மனம்விட்டு பேச முடியும்.' அவன் தலையைப் பலமுறை கைகளால் வாரிக்கொண்டான். அது அவனுடைய பழக்கம் போலும். பொதுவாக, சுறுசுறுப்பான, லாகவமான அசைவுகள் கொண்ட இளைஞன்.

'ஆமாம். கண்டிப்பாக.'

'டாக்டர் உங்களுக்குப் பேய் நம்பிக்கை இருக்கிறதா?'

'நாம் நம்புவது இப்போது பிரச்னை அல்ல, அல்லவா?'

'ஆமாம். சரியாகச் சொன்னீர்கள். ஆம், நம்புவது பிரச்னையே இல்லை. இப்போது தொண்ணூற்றொன்பது சதவீதம் பேர் பேய்களை நம்புவது இல்லை. ஆனால் பேய்கள் அதைப் பொருட்படுத்துவதில்லை. நானே பேய்களில் இம்மிகூட நம்பிக்கை இல்லாதவன்தான். ஷேக்ஸ்பியர் நாடகங்களில் ஆவிகள் வரும்போது புன்னகை புரிவேன். மனிதனுக்கு ஆவிகள் தேவை. இல்லாவிட்டால் வாழ்க்கையிலிருந்து கட்டுக்கோப்பான கதைகளை உருவாக்க முடியாது என்று நினைப்பேன்...'

நான் ஷேக்ஸ்பியர் என்று என் நோட்டில் குறித்துக்கொண்டேன்.

'ஆனால், என்னை ஆவி வந்து பற்றிக்கொண்டது. என் நம்பிக்கையோ அவநம்பிக்கையோ அதற்கு ஒரு பொருட்டாகவே இல்லை...' அவன் முகம் மெல்ல மாற ஆரம்பித்தது.

‘முதலில் இது நடந்தது எப்போது?’

‘ஒன்றரை வருடம் முன்பு. போன டிசம்பர் இருபத்திரண்டாம் தேதி. அன்று நான் ஒரு சினிமா பார்க்கப் போனேன்...’

‘என்ன சினிமா?’

அவன் லேசாகப் புன்னகை செய்தான். ‘நீங்கள் நினைப்பதுபோல் பேய் சினிமா இல்லை. நல்ல படம். எ பியூட்டிஃபுல் மைண்ட்.’

‘ஆமாம், நல்ல படம்தான்.’

‘இரவில் என் அறையை நானே திறந்து உள்ளே சென்று படுத்துக்கொள்வது வழக்கம். நண்பர்களுடன் வெளியே சாப்பிடுவேன்.’

‘மது?’

‘இல்லை. எனக்கு அப்படி எந்தப் பழக்கமும் இல்லை.’

‘ரொம்ப நல்லது.’

‘நான் வீட்டை நெருங்கும்போது எங்கள் காம்புவுண்டுக்கு வெளியே ஒரு ஆள் இருட்டில் எனக்காகக் காத்து நிற்பதுபோல இருந்தது. யாராக இருக்கும் என்று நினைத்தபடியே அருகே சென்றேன். சற்றுக் கூனலான ஆள். மிக அருகே செல்லும்வரை அது ஆள் மாதிரித்தான் இருந்தது. நெருங்கிப் பார்த்தால் அது நிழல். என் வீட்டுமுன் நின்ற குரோட்டன்ஸ் செடியின் நிழல் சுவரில் விழுந்து கிடந்ததுதான் அது. நிழல் அப்படித் துல்லியான வடிவமாகத் தெரிந்தது, எனக்கு ஆச்சரியமாக இருந்தது. மனத்தின் படபடப்பு குறைய வெகு நேரமாயிற்று. கதவைத் திறந்து அறைக்குள் நுழைந்து மின்விளக்கைப் போட்டேன். அப்போது வாசலில் நிழலாடியது. அந்த ஆள். அப்போதுதான் மனம் அசைந்துவிட்டது. ‘யார்?’ என்று குழறியபடி எட்டிப் பார்த்தேன். அது நிழல்தான். என் அறை ஒளியில் நிழல் இடம் மாறியிருந்தது. சற்று ஆசுவாசம் கொண்டாலும்கூட மனம் படபடவென்றுதான் இருந்தது. கதவைச் சாத்தினேன். திரும்பினால் என் அறை மூலையில் அதே ஆள்... ஆ என்று அலறிவிட்டேன். வெளியே அப்பா, ‘என்ன குமார்?’ என்று கேட்டார். ஒன்றுமில்லை என்று

சொன்னேன். அது கொடியில் மாட்டிய என் சட்டையின் நிழல்தான் என்று தெரிந்தது...’

‘அந்த ஆளின் உருவத்தை அதற்குமுன் பார்த்திருக்கிறீர்களா?’

‘இல்லை.’

‘அன்று நீங்கள் நண்பர்களுடன் இதைப் பற்றி ஏதேனும் பேசினீர்களா? இதைப் போன்ற விஷயங்கள்?’

‘இல்லை. நான் உறுதியாகச் சொல்ல முடியும். காரணம் நானே இக்கேள்வியைப் பலமுறை கேட்டு யோசித்திருக்கிறேன்.’

‘சரி, சொல்லுங்கள்.’

‘நான் அன்று தூங்கிக்கொண்டிருந்தபோது விழிப்பு வந்தது. நள்ளிரவு தாண்டியிருக்கும். வழக்கமான இரவின் ஒலிகள். ஃபேன் சுற்றும் ஒலிகள். மனம் மெல்ல மிதந்து மேலே வருமே, அந்த நேரம். என் அருகே ஒருவன் உட்கார்ந்திருப்பதை உணர்ந்தேன். கண்ணுக்குத் தெரிய யாருமில்லை. ஆனால் அந்த உணர்வு தெளிவாக இருந்தது. இப்போது நீங்கள் என்னருகே உட்கார்ந்திருப்பதை என் மனம் உணர்ந்தபடியே இருக்கிறதே அதுபோல.’

‘பயந்தீர்களா?’

‘ரொம்ப நேரம் எனக்கு அது ஒரு கனவுபோலத்தான் இருந்தது. பிறகு பாய்ந்து எழுந்து விளக்கைப் போட்டேன். அறை காலி. உள்ளே பூட்டிய அறை. இருந்தாலும் இண்டு இடுக்கெல்லாம் சோதனை போட்டேன். யாரும் இல்லை. அவ்வுணர்வை விரட்ட எல்லா முயற்சிகளையும் எடுத்தேன். ஆனால் என் மனம் அவன் இருப்பதைத் தெளிவாக உணர்ந்தது. என் மனம் கலங்கிவிட்டது. வெளியே போய், திண்ணையில் படுத்தேன். அங்கே அந்த உணர்வு இல்லை. அரை மணி நேரம் அந்த உணர்வு என்ன என்று சிந்தித்தபடி படுத்திருந்தேன். பிறகு மீண்டும் என் அறைக்கு வந்தேன். உள்ளே காலெடுத்து வைத்தபோதே தெரிந்துவிட்டது. அவன் உள்ளே இருக்கிறான் என்று.’

‘பிறகு?’

‘அன்றிரவு திண்ணையிலேயே படுத்திருந்தேன். விடிகாலையில் தூங்கிவிட்டேன். காலையில் எழுந்தால் எல்லாம் கனவாகத் தோன்றியது. சிரிப்புகூட வந்தது. அறைக்குள் போனேன். அங்கே எந்த உணர்வும் இல்லை. மனம் செய்யும் மாயங்களை எண்ணி ஆச்சரியப்பட்டேன். ஆனால் அன்றிரவு நான் சாப்பிட்டுவிட்டு என் அறைக்குப் போய் அமர்ந்ததுமே அந்த அருகாமை உணர்ச்சியை அடைந்தேன். அவன் என் மிக அருகே இருந்தான். என்னை அவன் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். முதல் நாள் அறைக்குள்தான் அவனது இருப்புணர்வு இருந்தது. இப்போது மேலும் துல்லியமாக அவன் இருக்கும் இடம் தெரிந்தது. அதற்கு முதுகு காட்டி அமர்ந்திருந்தால் முதுகில் அவனது பார்வை உணர்ச்சியை உணர முடிந்தது.

‘...இந்த முறை எனக்கு ஒரு பிடிவாதம் ஏற்பட்டது. அந்த உணர்ச்சியைத் தெளிவாக ஆராய்ந்துவிடவேண்டும் என்ற எண்ணம். பலவிதமாகண் சோதனை செய்து பார்த்தேன். ஒரு மனிதனின் உடல் அங்கே இல்லை, அவ்வளவுதான். வேறு எல்லா உணர்ச்சிகளும் அப்படியேதான் இருந்தன. அவன் இருந்த இடம் வழியாக நடந்து போனேன். அவனைத் தாண்டும்போது அவன் எனக்கு விலகி இடம் கொடுப்பதை உணர்ந்தேன். எல்லாம் பிரமை, எல்லாம் பிரமை என்று நானே என் மனத்துக்குள் மந்திரம்போலச் சொல்லிக்கொள்ள ஆரம்பித்தேன். அதற்கு ஓரளவு பயனும் இருந்தது. அதையே மேலும் உக்கிரமாகச் செய்தேன். கண்களை மூடிக்கொண்டு தியானம் போல அவ்வரியைச் சொன்னேன். அன்று இரவு அவன் அறைக்குள் இல்லை என்ற உணர்வை அடைந்தேன். அப்பாடா என்று ஆறுதலும், மீண்டுவிட்டேன் என்று தெரிந்ததுமே எத்தனை அபத்தமான கற்பனை என்ற சிரிப்பும் ஏற்பட்டது...

‘...இரவில் ஒன்றுமில்லை; மறுநாள்கூட ஒன்றுமில்லை; மூன்றாவது நாள் நான் அவ்வறைக்குள் அமர்ந்து வாசித்துக் கொண்டிருந்தேன். பிடிவாதமாக அந்த அறைக்குள்ளேயே இருந்து பார்த்தேன். அப்படித்தான் அந்த வேண்டாத உணர்ச்சியை ஒழிக்க முடியும். பேனா எடுத்துப் புத்தகத்தில் அடையாளம் வைக்க எண்ணிக் கை நீட்டினேன். பேனா தூரத்தில் இருந்தது. அப்படியே விட்டுவிட்டு அவ்வரியை மீண்டும் படித்தேன். பேனாவை எடுக்க எண்ணிப் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு எழப்போனவன் அப்படியே குளிர்ந்து அமர்ந்துவிட்டேன். பேனா என் கையருகே இருந்தது... இருங்கள் நீங்கள்

சொல்ல வருவதைப் புரிந்துகொண்டேன். அது பிரமையாக இருக்கலாம்தான். நானே அறியாமல் எடுத்து அருகே வைத்திருக்கலாம். ஆனால் அதே சோதனையை நான் மீண்டும் நடத்தினேன். குறிப்புப் புத்தகத்தை எடுக்கக் கை நீட்டினேன். பிறகு வேண்டுமென்றே கண்களைத் திருப்பினேன். மீண்டும் பார்த்தபோது அது என்னருகே இருந்தது.

'...வியர்த்தபடி வெளியே ஓடினேன். கால் போனபடி சுற்றினேன். வெகுநேரம் எனக்கு எதுவுமே புரியவில்லை. மெல்ல மெல்லத் தர்க்க மனம் திரும்பி வந்தபோது எல்லாம் என் கற்பனை என்று தோன்றியது. மாலையில்தான் திரும்பி வந்தேன். அறைக்குள் போகவே பயமாக இருந்தது. திண்ணையிலேயே படுத்துக்கொண்டேன். எங்கள் தெரு அகலமானது. நல்ல காற்றும் வரும். களைத்திருந்ததனால் தூங்கிவிட்டேன். எதிர் வீட்டு நாய் என்னருகே கீழே படுத்திருந்தது. இரவில் என்னருகே யாரோ நிற்பதை உணர்ந்து கண் விழித்தேன். எழுந்து அமர்ந்தேன். அவன்தான். அவன் நிற்கும் உணர்வு. அவன் என்னருகே அமரும் உணர்வு. என் மார்பின்மீது பெரிய எடையை வைத்ததுபோல உணர்ந்தபடி அப்படியே அசையாமல் படுத்திருந்தேன்.

'...அப்போது கீழே நாய் கனவு கண்டதுபோல எழுந்தது. அதன் உடல் அப்படியே நடுங்கி வளைந்தது. தலையையும் கண்களையும் தாழ்த்தி காதுகளை மடித்து வாலை காலுக்கு நடுவே அடக்கி முனகியது. என்னருகே வெற்றிடத்தைப் பார்த்து மெல்லியதாக ஊளையிட்டது. அப்படியே அழுதபடி ஓடிவிட்டது. சிறிது நேரத்தில் மொத்தத் தெருவிலும் நாய்கள் ஊளையிட ஆரம்பித்தன. அதைக் கேட்டுப் பக்கத்துத் தெரு நாய்களும் ஊளையிட்டன. ஊளைச் சத்தம் கேட்டு அப்பாகூட எழுந்து 'என்னடா?' என்று கேட்டார். நான் அசையாமல் படுத்திருந்தேன். ஏனோ, கண்ணீர் மட்டும் கொட்டிக்கொண்டே இருந்தது.

'...மறுநாள் நான் அப்பாவிடம் சொல்லிக்கொண்டு என் நண்பனின் அறைக்குச் சென்று தங்கினேன். அவனிடம் ஒன்றும் சொல்லவில்லை. அப்பாவிடம் சண்டை என்று அவன் நினைத்திருக்கலாம். மூன்று நாள் அங்கே சந்தோஷமாக இருந்தேன். சினிமாவுக்குப் போனோம். சினிமா பற்றி அரட்டை அடித்தோம். நான்காம் நாள் காலையில் தூங்கிக்கொண்டிருந்தேன். என் பெயரைச் சொல்லி

யாரோ அழைத்தார்கள். ஆனால் குரலை நான் கேட்கவில்லை. கதவைத் திறந்தால் என் மார்பு அடைத்தது. அவன்தான். உருவமில்லாத இருப்பாக நின்றுகொண்டிருந்தான். நான் கதவை மூட முயன்றேன். ஆனால் கைகள் செயலற்றிருந்தன. பிறகு மூச்சைத் திரட்டி மூடுவதற்குள் உள்ளே வந்துவிட்டான். உரிமையாளரைப் பிரிந்து மீண்டும் சந்தித்தால் நாய்கள் கூத்தாடுமே, அதுபோல என்னைச் சுற்றி அவன் தாவினான். நான் கால்கள் நடுங்க நாற்காலியில் அமர்ந்தேன். அப்போது முதல்முறையாக அவனது விரல்களை என் கைகளில் உணர்ந்தேன். குளிர்ந்த விரல்கள். குளிர்பதனம் செய்யப்பட்ட மீன்கள்போல வழுவழுப்பான, சில்லிட்ட கைவிரல்கள். அவை என் கால்களையும் கைகளையும் மாறிமாறித் தொட்டன. பாமரேனியன் நாய் மூக்கை வைத்துத் தீண்டுவதுபோல, அவனது மூச்சுக் காற்றை என்மீது மிகத் துல்லியமாக உணர முடிந்தது.

'...நண்பன் எழுந்து என்னை ஆயிற்று என்று கேட்டான்? நான் ஒன்றும் சொல்லவில்லை. எல்லாம் பிரமை, எல்லாம் பிரமை, என் மனநிலையில் ஏதோ சிக்கல், இன்றே நல்ல உளவியலாளரைப் பார்க்கப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டேன். அப்போது நண்பன் கொட்டாவி விட்டபடி சாதாரணமாகக் கேட்டான், 'யார் வந்தது?' என்று. 'யாரும் இல்லை, ஏன் கேட்கிறாய்?' என்றேன் பதறிப்போய். அவனுக்கு ஆச்சரியம். நான் ஏதோ மறைக்கிறேன் என்று அவனுக்கு நினைப்பு. 'இல்லையே, நான் பார்த்தேனே?' என்றான் அவன். 'என்ன பார்த்தாய்?' என்றேன். 'நீ கதவைத் திறப்பதும் வெளியே யாரோ நிற்பதும் தெரிந்தது. யார் என்று தெரியவில்லை; ஒரு அசைவு; நான் சரியாகக் கவனிக்கவில்லை; அப்படியே தூங்கிவிட்டேன்.' அதன்பிறகு நான் எதுவும் கேட்கவில்லை.

'...அதன்பிறகு இவன் என்னை விடவேயில்லை. நான் இவனிடமிருந்து தப்ப முடியவில்லை. என்கூடவே மௌனமாக வருவான். என் தலைமயிரைக் கோதுவான். கைகளைத் தொடுவான். பல அனுபவங்கள். ஒருமுறை நான் பிரமைபிடித்துச் சாலையைக் கடக்கும்போது ஒரு லாரியில் அடிபடப் பார்த்தேன். என் கையைப் பிடித்து இழுத்து சாலையோரம் போட்டான் இவன். அதன்பிறகு மிகுந்த உணர்ச்சிப் பரவசத்தோடு என்னை முத்தமிட ஆரம்பித்தான். அழுகிறான் என்று பட்டது. அவனை என்னால் தவிர்க்கவே

முடியவில்லை. அவனை நான் வெறுத்தேன். அருவருத்தேன். அவனைத் துரத்துவதற்கு நான் சாவது மட்டுமே வழி என்று நினைத்து மேம்பாலத்தின் விளிம்பு வரைகூடப் போய்விட்டேன். அவனை என்னால் தாங்கவே முடியவில்லை. பல டாக்டர்களிடம் போய்விட்டேன். அவர்கள் எனக்கு 'பிளவாளுமைச் சிக்கல்' என்று மருந்து தருகிறார்கள். மாத்திரைகளைச் சாப்பிட்டால் அவனும் நானும் அசையாமல் நாள்கணக்காகச் சேர்ந்தே உட்கார்ந்திருப்போம், அவ்வளவுதான்.'

'சரவணகுமார், இரண்டு கேள்விகள். ஒன்று, ஏன் அதை அவன் என்று சொல்கிறீர்கள்?'

அவன் தயங்கிப் பெருமூச்சு விட்டான். 'அவன் என்னை நெருங்கியபோதே அது எனக்குத் தெரிந்தது. ஆனால் சில நாள்கள் கழித்துத்தான் உண்மையில் அதை நானே தெளிவாக உணர்ந்தேன். அது என் அண்ணாதான்...'

'இறந்துவிட்டானா?'

'ஆமாம். சின்ன வயதிலேயே. எனக்கு எட்டு வயது அப்போது. அவனுக்குப் பன்னிரண்டு. அவன் மூளை வளராத ஒரு மனிதன்... மங்கோலாய்டு...'

'அவன்மீது பிரியம் வைத்திருந்தீர்களா?'

அவன் முகம் அப்படி விகாரமாகியதைக் கண்டு நானே அதிர்ச்சி அடைந்தேன். 'இல்லை, நான் அவனை வெறுத்தேன். வெறுப்பு என்றால் சாதாரண வெறுப்பல்ல. இரவும் பகலும் அவனைப் பற்றி வெறுப்புடன் நினைத்தபடியே இருப்பேன். என் உடம்பெல்லாம் வெறுப்பில் எரியும்.'

'ஆரோக்கியமானவனா?'

'ஆமாம். அவன் நன்றாக நடப்பான். ஓடுவான். பலசாலி. அவனுக்கு வெறி வந்தால் இரண்டு பேர் சேர்ந்தால்தான் பிடித்து நிறுத்த முடியும். மிகமிகக் குரூபியானவன். மண்டை ஒரு பக்கமாகச் சப்பி ஒரு கண் வெளியே பிதுங்கி இருக்கும். தடித்த உதடுகளிலிருந்து எப்போதும் எச்சில் வழியும். கண்களில் பீளை; வாயில் பெரிய மஞ்சள் நிறப் பற்கள். அதைவிட அவனிடம் ஒரு நாற்றம் உண்டு; மோசமான நாற்றம்; அழுகிய புண்போல, செத்த மிருகத்தின் ஊன்போல ஒரு குமட்டும் நாற்றம்...'

‘பேசுவானா?’

‘சில சொற்கள். அம்மா, அப்பா, மீனு, சோறு இந்தமாதிரி. பிறகு அடிக்கடி ஒரு விசித்திரமான முனகலை எழுப்புவான். அதைவிட அசிங்கமான ஒரு சிரிப்பு உண்டு. இப்போதுகூட அந்தச் சிரிப்பை என்னால் கேட்க முடிகிறது. உலகிலேயே அசிங்கமான ஒலி அதுதான்.’

‘சரவணகுமார், ஏன் நீங்கள் அவனை வெறுத்தீர்கள்?’

‘தெரியவில்லை. அவனை வைத்து என்னைப் பிற சிறுவர்கள் ஏளனம் செய்தார்கள். அது காரணமாக இருக்கலாம். அம்மா அவன்மீது உயிரையே வைத்திருந்தாள். அவன் இறந்த மறு மாதமே அவளும் இறந்தாள். இரவும் பகலும் அம்மா அவன் நினைப்பாகவே இருப்பாள். அதனால்கூட இருக்கலாம். ஆனால் எத்தனை வெறுத்தாலும் அவனை என்னால் தவிர்க்க முடியாது. அவனை நான் விளையாடக் கூட்டிக்கொண்டு போகவேண்டும் என்று அம்மா கட்டாயப்படுத்துவாள். அவனும் என்னைவிட்டு நீங்கமாட்டான். அவனிடமிருந்து தப்பிக்க நான் ஓடுவேன். மரத்தில் ஏறுவேன். விடவே மாட்டான்.’

‘அவனுக்கு உங்களைப் பிடிக்குமா?’

அவன் தலை தணிந்தது. பெருமூச்சுடன் ‘ஆமாம். ரொம்ப ரொம்பப் பிடிக்கும் என்று நினைக்கிறேன். அதனால்தான் அவன் என்னை விடாமல் கூடவே இருக்கிறான். என்னை ‘ம்ம்ம்பி’ என்று கூப்பிடுவான். அப்போது முகமெல்லாம் சிரிப்பாக இருக்கும். அவனுக்கு எது கிடைத்தாலும் எனக்குக் கொடுப்பான். நான் அவன் தொட்டதைத் தின்னமாட்டேன். ஆனாலும் நேராக என்னிடம் கொண்டுவந்துவிடுவான். நான் அவனைப் போட்டு அடிப்பேன். மண்ணை வாரி வீசுவேன். தள்ளிவிடுவேன். என்ன செய்தாலும் ஒரு சிரிப்பு. ‘ம்ம்ம்பி’ என்று ஒரு குரல்.’ அவன் தன் தலையை அறைந்தான். ‘பெரிய சித்திரவதை. அவனுக்குச் சமயங்களில் வெறி ஏறும். பிடித்து வைத்துக்கொண்டு ‘குமார் ஓடிவா’ என்று என்னைக் கூப்பிடுவார்கள். நான் போகமாட்டேன். இழுத்துப் போவார்கள். நான் போய் ‘டேய் செந்தில், நிப்பாட்டுடா’ என்றால் அப்படியே சாதாரணமாகிவிடுவான். சிரித்தபடி ‘ம்ம்ம்பி’ என்பான்.’

‘அவனை அப்படி வெறுத்தது பற்றிய குற்ற உணர்ச்சி இருக்கிறதா உங்களுக்கு?’

‘நீங்கள் சொல்ல வருவது புரிகிறது. அதனால் எனக்கு இந்தப் பிளவாளுமை உருவாகியிருக்கலாம் என்று. அப்படியல்ல. அவனை நான் தெளிவாக உணர்கிறேன்.’

‘சரவணகுமார், ஏன் இது பிளவாளுமையாக இருக்கக்கூடாது?’

‘அப்படி இருந்தால் நான் மட்டுமேதானே இதை உணர வேண்டும்?’ ஆனால் என்னருகே இருக்கும் பிறருக்கும் அவனை உணர முடிகிறது. நான் ஒருநாள் ஒரு ஓட்டலுக்குப் போய் குடும்ப அறைக்குள் உட்கார்ந்தேன். சர்வர் இரு தட்டுகளைக் கொண்டு வைத்தான். எனக்குப் புரியவில்லை. தோசை சொன்னேன். ‘இரண்டு பேருக்குமே தோசையா?’ என்றான். ‘நான் ஒரு ஆள்தான்’ என்றேன். ‘அப்படியானால் கைகழுவப் போனவர்?’ என்றான். ‘யாருமில்லையே’ என்றேன். ‘நீங்கள் இரண்டு பேராக வருவதுபோல இருந்ததே?’ என்றான். கைகழுவும் இடத்தைப் போய்ப் பார்த்துவிட்டு குழப்பமாகப் போனான். அதைவிட...’

‘அதைவிட?’

‘...என்னருகே அவனது குரலைப் பிறர் கேட்டிருக்கிறார்கள். நான் அவன் குரலைக் கேட்க ஆரம்பித்து ஒரு வருடம் ஆகிறது. உளச் சிக்கல் உள்ளவர்கள் குரல்களைக் கேட்பது சாதாரணம்தான். ‘ம்ம்ம்பி’ என்று ஓயாமல் கூப்பிடுவான். சிரிப்பான். ஆனால் என்னருகே வந்த என் அப்பாவின் நண்பர்கள் எல்லாம் அக்குரலைக் கேட்டு அரண்டிருக்கிறார்கள்.’

‘நீங்களே அப்படிப் பேசியிருக்கலாம் இல்லையா?’

‘என் வாய் அசையவில்லை. நானே அக்குரலைக் கேட்டு நடுங்கிப் போயிருப்பேன். அப்போது.’

*

‘சிக்கலான விஷயம்தான்’ என்றார் டாக்டர் சிவசண்முகம் டேப்பை நிறுத்தியபடி. ‘ஆனால் கண்டிப்பாகப் பிளவாளுமைதான். நோயாளி

அதிபுத்திசாலி. கற்பனை மிக்கவன். ஆகவே பிரச்னையும் மிகச் சிக்கலாக உள்ளது.'

'நீங்கள் உங்கள் விளக்கங்களைச் சொல்லியபடி வாருங்கள் டாக்டர். என் அணுகுமுறை சரியா என்று பார்க்கிறேன்.'

'மங்கோலாய்டு குழந்தை, அது பிறந்த குடும்பங்களில் ஆழமான உளச் சிக்கல்களை உருவாக்குகிறது' என்றார் சிவசண்முகம். 'குறிப்பாக நம் குடும்பங்கள் உக்கிரமான உணர்ச்சிகளினால் ஆனவை. குழந்தையின் அம்மா மிக நீண்ட காலம் அதை ஒரு கைக்குழந்தைபோலவே பராமரிக்கிறாள். ஆகவே அவளது உளச்சக்தி முழுக்க அதற்காகச் செலவிடப்படுகிறது. காலப்போக்கில் அவள் வேறு எதையுமே அறியாதவளாக ஆகிறாள். குடும்பமே அக்குழந்தையைச் சுற்றி விருப்பும் வெறுப்புமாகக் கட்டப்படுகிறது. மங்கோலாய்டுகள் ஹார்மோன் மாற்றங்களின்போது நரம்பு அதிர்ச்சிகளுக்கு ஆளாகின்றன. ஆகவே அவை அபூர்வமாகவே முப்பது வயதைத் தாண்டுகின்றன. அவற்றின் மரணம் பல வகையான அதிர்ச்சிகளைக் குடும்பத்தில் உருவாக்குகிறது. வெற்றிடம், குற்ற உணர்ச்சி.

'...இங்கே அந்த அம்மா செந்தில் அல்லாமல் வேறு உலகமே இல்லாமல் வாழ்ந்திருப்பாள். ஆகவே சரவணன், கோபமும் வெறுப்பும் கொண்டிருக்கிறான். செந்தில் இறந்தபோது அம்மாவும் சேர்ந்து இறக்கவே, சரவணன் அதிர்ச்சி அடைந்திருக்கிறான். குறறவுணர்ச்சி அவனை வதைத்திருக்கிறது. அடக்கி வைக்கப்பட்ட அவ்வுணர்ச்சி ஒரு நாள் நிழலைப் பார்த்து பயந்தபோது வெடித்துவிட்டது. சரவணனின் ஆழ்மனம் இரண்டாகப் பிளந்துவிட்டது. ஒன்று சரணவன். இன்னொன்று செந்தில். செந்தில் செய்கிற அனைத்தையும் செய்பவன் சரவணன்தான். ஆனால் சரவணன் அதை அறிவது இல்லை. நடப்பதைக் கண்டு அது அஞ்சுகிறது.'

'சரி, முதல் விஷயம், நாய்...'

'நாய்கள் மனிதர்களின் உடல் மொழியை மிக மிகக் கூர்ந்து கவனிப்பவை. சரவணனின் உடலசைவுகளைக் கண்டு நாய் குழம்பிப் போய்விட்டது. அவன் வேறு யாரோ என அது எண்ணியிருக்கலாம். அவன் பார்க்கும் இடத்தில் யாருமே இல்லை என்பதைக் கண்டு அது அஞ்சியிருக்கலாம். அவனது

நண்பர்கள், ஓட்டல் சர்வர் அனைவருமே இப்படி அவனது உடல் மொழியைக் கண்டு குழம்பியர்வர்கள்தான். அந்த உடல் மொழி அத்தனை தத்ரூபமாக இருக்கும். காரணம் அது நடிப்பல்ல. மனத்தின் இயல்பான செயல்பாடு.'

'சரி, குரல்?'

'இங்குதான் இந்த விஷயம் சிக்கலாகிறது. பிளவாளுமை நோயாளி எப்போதுமே புத்திசாலியாகத்தான் இருப்பான். அத்துடன் அந்த மற்ற ஆளுமையை நம்பவும், பிறருக்கு நம்ப வைக்கவும் அவனை அறியாமலேயே விரும்பி உக்கிரமாக முயல்கிறான். அவனது ஆழ்மனம் அப்போது அதற்குச் சாத்தியமான எல்லாத் திறன்களையும் கையாள்கிறது. அக்குரல்கள் கண்டிப்பாக சரவணகுமாரின் தொண்டை உருவாக்குபவை. ஆனால் அவனது உதடுகள் அசைந்திருக்காது. உதடு அசையாமல் பேசும் கலையான வென்ட்ரிலாக்கிசம் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். சிறு வயதில் எப்போதோ சரவணன் அக்கலை நிகழ்ச்சி ஒன்றைக் கண்டிருக்கலாம். அவன் அதைக் கற்காவிட்டாலும் அவன் ஆழ்மனம் அதை உள்வாங்கியிருக்கலாம். இப்போது அது கைகொடுக்கிறது. தெரியுமா, என் நோயாளி ஒருவர் சாதாரண கூலித் தொழிலாளி. ஆனால் பிளவாளுமை ஏற்பட்டபோது இன்னொரு மனம் சரளமாக உயர்தர ஆங்கிலம் பேசியது. அந்த ஆங்கிலத்தைச் சிறு வயதில் ஏதோ அமெரிக்கப் பாதிரி பேசி அவர் சில நாட்கள் கேட்டிருக்கிறார்... மனத்தின் திறன்கள் கடல் போன்றவை...'

நான் பெருமூச்சுடன் 'ஆம்' என்றேன். 'என் ஊகங்களும் இதேபோன்றவைதான்.'

'அவனுக்குத் தொடர்ச்சியாக உரையாடல் சிகிச்சை கொடுக்க வேண்டும்...'

'இல்லை. அது ஆளுமைப்பிளவு என்பதை அவனை நம்ப வைக்க முடியாது. காரணம் அதற்கு எதிரான எல்லா நியாயங்களும் அவனிடம் இருக்கின்றன. ஆளுமைப் பிளவு பற்றிக் குறைந்தது இரு நூல்களை அவன் படித்திருக்கலாம். அதை ஆவி என்றே எடுத்துக்கொண்டு சிகிச்சை செய்வதே நல்லது' என்றேன்.

*

நான் சரவணகுமாரின் அறையை நெருங்கியபோது, நர்ஸ் பீதி அடைந்த முகத்துடன் வெளியே நின்றிருந்தாள்.

‘ஏன் இங்க நிக்கறே? அவன் கூடவே உள்ள இருக்கணும்னு தானே உங்கிட்டே சொன்னேன்?’ என்றேன் கோபத்துடன். சரவணகுமார் அன்று காலைதான் சிக்கல் சற்று அதிகமாகி அனுமதிக்கப்பட்டிருந்தான்.

‘இல்ல டாக்டர்...’ என்றாள் அவள் நடுங்கியபடி.

நான் அப்போதுதான் அக்குரலைக் கேட்டேன். ‘ம்ம்ம்பி... ம்ம்பி பா... ஓடி பா...’ ஒரு கணம் என் நடுமுதுகே சிலிர்த்துவிட்டது. அக்குரல் முற்றிலும் புதிய குரல். மிக மந்தமான ஒரு மூளையால் எழுப்பப்படும் குரல்; கேவல் ஒலிகள்.

‘உள்ள யாருமே இல்ல டாக்டர்’ என்றாள் நர்ஸ் பீதியுடன்.

உள்ளே நுழைந்தேன். குரல் நின்றது. சரவணகுமார் நல்ல ஆழமான தூக்கத்தில் இருந்தான். அருகே போய் அவனைப் பார்த்தேன். பெருமூச்சுடன் ரிப்போர்ட்டுகளைப் பார்த்தேன்.

திரும்பும்போது அச்சிரிப்பொலி கேட்டது. மந்த புத்திகள் மட்டுமே எழுப்பக்கூடிய ஒலி. சட்டென்று திரும்பிப் பார்த்தேன். சரவணகுமார் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தான். அவனையே உற்றுப் பார்த்தேன்.

சட்டென்று ‘ம்மா... ப்பா... ம்ம்பி... மம்மு பேணும்...’ என்ற மழலைக் குரல் கேட்டது; சரவணகுமாரிடமிருந்துதான். ஆனால் அவனது வாய் அசையவில்லை. உலர்ந்து ஒட்டியிருந்த உதடுகள் பிரியவில்லை. தூக்க மூச்சு தாளம் தவறவும் இல்லை. ஆனால் தொண்டை அசைந்தது. வென்ட்ரிலாக்விஸ்டுகள் வித்தை காட்டும்போது குரல்வளை அப்படி அசைவதைக் கண்டிருக்கிறேன்.

நர்ஸிடம் ‘நீ இங்கேயே இரு...’ என்றேன். அவள் அழப்போனாள். ‘துணைக்கு ராஜனை வரச் சொல்றேன்’ என்றேன்.

சரவணகுமார் என் கைகளை எட்டிப் பற்றினான். ‘டாக்டர் என்னால முடியல... ப்ளீஸ் இதிலேர்ந்து மீட்டிருங்க... எந்நேரமும் அவன் என்கூட இருந்திட்டே இருக்கான். தடவுறான். முத்தம் குடுக்கிறான்; மூச்சு விடுகிறான். ப்ளீஸ்

டாக்டர்... என்னால அவனைத் தாங்கவே முடியல்ல...' குரல் கம்மி விசும்பி விசும்பி அழ ஆரம்பித்தான்.

அவன் அழுது முடிக்க நான் காத்திருந்தேன். பிறகு 'சரவணன், நான் சொல்றத நீங்க நல்லாக் கேக்கணும். செந்திலோட பிரச்னை என்னான்னு...'

'அப்பன்னா இது ஸ்கிசோஃப்ரினியா இல்லியா?'

'இல்ல. உங்ககூட இருக்கிறது செந்தில்தான். நான் டாக்டர்கள்ட்டப் பேசியாச்சு.'

சரவணகுமார் பெருமூச்சு விட்டான்.

நான் ஆங்கிலத்தில் தொடர்ந்தேன். 'அவனுடைய பிரச்னை என்னவென்று நீங்கள் புரிந்துகொள்ளவேண்டும் சரவணன். அவன் உங்களை உயிர்போல நேசித்தவன். அவனை மாதிரிப் பிறவிகள் அன்பைக் காட்டினால் அது முழு அன்பாகத்தான் இருக்கும். சுயநலமோ, பயமோ இருக்காது. அவன் உங்கள் கூடவே இருந்தான். நீங்கள் அவன்மேல் அன்பு காட்டவில்லை.'

'அவனை நான் வெறுக்கிறேன். வெறுக்கிறேன். அவனை நினைத்தாலே அருவருப்பில் உடம்பு கூசுகிறது. அவன் என்னைத் தொடுவதை என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை...'

'பார்த்தீர்களா? திரும்பக் கிடைக்காத பிரியம்தான் செந்திலின் பிரச்னை. அதற்காகத்தான் அவன் உங்கள்கூடவே இருந்தான். அடி வாங்கினான். அப்படியெல்லாம் செய்தால் நீங்கள் அன்பாக இருக்கலாம் என்று நினைத்தான். இப்போது அவன் உங்கள் கூடவே இருக்கிறான். உங்களுக்குடு குற்றேவல் செய்கிறான். அவனது தவிப்பை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும்.'

'நான் என்ன செய்யவேண்டும்?'

'நீங்கள் அவனை நேசிக்கவேண்டும்.'

'முடியாது...' என்று சரவணன் வீறிட்டான். வேகத்தில் அப்படியே எழுந்து பிறகு அமர்ந்தான். 'இல்லை, அது மட்டும் என்னால் முடியாது. கண்டிப்பாக முடியாது. அவனை நான் வெறுக்கிறேன். அருவருப்பான அந்தப் பிறவி...

அவனது குமட்டும் நாற்றம்...' இருமுறை வாந்திபோல உலுக்கி கண்கலங்கி 'இல்லை, முடியாது' என்றான்.

'யோசித்துப் பாருங்கள் சரவணன். அவன் செய்த தப்பு என்ன?'

'வேண்டாம். அவனை என்னால் நேசிக்க முடியாது. நான் செத்தாலும் சரி.'

'நீங்கள் சாகத்தான் வேண்டியிருக்கும்.'

'டாக்டர்!'

'ஆமாம், அது உண்மை. அவன் பொறுமை இழந்தால் உங்களை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். நீங்கள் அவன் கையில் இருக்கிறீர்கள். உங்களுக்கு எந்தப் பாதுகாப்பும் இல்லை.'

சரவணகுமார் பயந்துவிட்டான். 'நான் என்ன செய்வது?'

'அவனை நேசியுங்கள். அவனிடம் அன்பாகப் பேசுங்கள். அவனை 'அண்ணா' என்று கூப்பிடுங்கள். அவன் உங்களைத் தொடும்போது அருவருப்பும் கோபமும் கொள்ளாதீர்கள். முடிந்தால் அவனைத் திருப்பித் தொட முயலுங்கள். நீங்கள் அவன்மீது அன்பாக இருப்பதை அவன் உணரட்டும்...'

'அப்படியானால் அவன் திரும்பச் செல்வானா?'

'ஆமாம். அவனது ஆசை நிறைவேறும்போது அவன் திரும்பித்தானே ஆகவேண்டும்? அதுதானே இயற்கையின் விதி?'

'என்னால் முடியாது டாக்டர். நான் அவனை அந்த அளவுக்கு வெறுக்கிறேன்... ஒரு கணம்கூட நான் அவனை மனிதனாக எண்ணியது இல்லை.'

'முயலுங்கள்... வேறு வழியே இல்லை.... மேலும் இது ஒரு பிராய்ச்சித்தம்கூட....'

அவன் அதிர்ந்து எழுந்து, 'பிராய்ச்சித்தமா, எதற்கு?' என்றான்.

'நீங்கள் அவனைக் கிணற்றில் தள்ளிவிட்டதற்கு...'

வலிப்பு வந்தவன்போல, உடல் உதற அவன் நாற்காலியில் விழுந்துவிட்டான்.

'நான் எல்லாவற்றையும் தோண்டித் துருவி அறிந்துகொண்டேன். உங்கள் அம்மாவுக்கு இது தெரியும். அவர்களுக்குத் தெரியும் என்பதும் உங்களுக்குத் தெரியும்.'

சரவணன் திடீரென்று பெரும் கதறலுடன் அழ ஆரம்பித்தான். வெகுநேரம் அழுது மெல்ல விசும்பி ஓய்ந்தான்.

'நான் ஏன் அப்படிச் செய்தேன் என்று தெரியவில்லை. அவன் கிணற்றில் எட்டிப் பார்த்தான். ஒரு நிமிஷம் என் சமநிலை போய்விட்டது. காலைத் தூக்கித் தள்ளிவிட்டு ஓடி வந்துவிட்டேன்.' ஆழமான அமைதியுடன் சரவணன் சொன்னான். 'அவனது பிணம் வீட்டுக்கு வந்தபோது நான் சுவரோடு சாய்ந்து நின்று நடுங்கினேன். என்னால் அழவே முடியவில்லை. பலரும் என்னைச் சமாதானம் செய்தார்கள். மாமா ஒருவர் எனக்கு விஸ்கி தந்து தூங்க வைத்தார். அம்மா, அதன்பிறகு படுக்கையை விட்டு எழவோ, பேசவோ இல்லை. பல நாள் தயங்கியபிறகு ஒருநாள் அவள் அருகே போனேன். என்னை அவள் பார்த்ததுமே தெரிந்துவிட்டது, அவளுக்கு எல்லாம் தெரியும் என்று...'

'நீங்கள் செந்திலை நேசியுங்கள். உங்கள் அம்மாவுக்கும் அது பிடிக்கும்.'

'ஆம்' என்றான் சரவணன், பெருமூச்சுடன்.

*

அடுத்த ஒரு வாரம் நான் சரவணன்கூடவே இருந்தேன். அவன் அடைந்த உக்கிரமான வதையை உடனிருந்து கவனித்தேன். அவனால் செந்திலை நேசிப்பதற்கு முடியவில்லை. 'மலம் தின்னப் பழகிக்கொள்வதுபோல இருக்கிறது' என்று அவன் சொன்னபோது நானே அயர்ந்துபோனேன். ஆனால் மனித மனத்தை எதற்கும் பழகச் செய்ய முடியும். மெல்ல மெல்ல சரவணன் செந்திலை நெருங்க ஆரம்பித்தான்.

தனிமையில் இருக்கையில், 'அண்ணா, நீ என் செல்லம், என் தங்கம்' என்று மீண்டும் மீண்டும் கொஞ்சச் சொன்னேன். செயற்கையாகக் கொஞ்சினால்கூட மெல்ல மெல்ல மனம் அதைப் பற்றிக்கொள்ள ஆரம்பித்துவிடும். ஆனால் முன்னகர்வது மிகவும் சிரமமானதாகவே இருந்தது. இரண்டு நாள் அதைச்

செய்யும் சரவணன், மூன்றாம் நாள் முடியவில்லை என்று கதறுவான். மீண்டும் அதைச் செய்யச் சொல்வேன்.

செந்தில், சரவணனில் இருக்கும்போது நான் அவனருகே அமர்ந்து பேசுவேன். ‘செந்தில், சரவணனுக்கு உன்மேல் பிரியம். உன்னை அவன் ‘செல்லமே’ என்கிறான். நீ நல்ல குழந்தை. சரவணனுக்கு உன்னைப் பிடித்திருக்கிறது. சரவணன் உனக்கு முத்தம் கொடுப்பான். அந்த மழலைக் குரலையும் குழறல் சிரிப்பையும் கேட்கையில் எனக்கே, என் சொற்கள் நான் செந்திலிடம்தான் சொல்கிறேன் என்று படும்.

மெல்ல மெல்ல மாறுதல்கள் தென்பட ஆரம்பித்தன. சரவணனின் முகத்தில் தெளிவு ஏற்பட்டது. செந்தில் கூடவேதான் இருக்கிறான். ஆனால் அவனை அந்த அளவுக்கு வெறுக்காததால் அது இப்போது தாங்கவே முடியாத நரகமாக இல்லை என்று சரவணன் சொன்னான். அவனது நாற்றம் மட்டும்தான் சிறிய அருவருப்பை அளிக்கிறது. ஆனால் அதுவும் முன்போல இல்லை.

‘பழகுங்கள். செந்தில் மெல்ல உங்கள்மீது சலிப்பு கொள்வான். உங்கள் பிரியம் உறுதியானபிறகு அவனுக்கு வேறு விஷயங்களில் ஆர்வம் திரும்பிவிடும்’ என்றேன். ‘அண்ணா, அண்ணா’ என்று மீண்டும் மீண்டும் அவனைக் கூப்பிடச் சொல்லி அதற்குப் பயிற்சி அளித்தேன். இரவில் தனிமையில் சரவணன் மீண்டும் மீண்டும் அப்படி அழைப்பதை நான் ரகசியமாகப் போய்ப் பார்த்து வந்தேன்.

எட்டு வாரங்களில் ஏற்பட்ட மாறுதல் எனக்கே ஆச்சரியம் அளித்தது. டாக்டர் சிவசண்முகம், ‘அது ஒரு சாதனை’ என்றார். சரவணனின் முகமும் உடலும் நன்றாகப் பொலிவு கொண்டன. தீராத தயக்கமும் துக்கமும் போயிற்று. செந்தில் தன்னுடன் இல்லை எனபதை நன்றாக உணர முடிகிறது என்றான். அவன் இல்லையா என்பதை உறுதி செய்துகொள்ள மீண்டும் மீண்டும் முயன்றும் அவனை உணரமுடியவில்லை என்றும் சொன்னான். ஒருநாள் இரவில் தனியாக வெளியே போய்வந்தான். இருட்டிலும் தனிமையிலும் செந்தில் கூடவே இருக்கும் உணர்வு வருகிறதா என்று பார்த்ததாகவும், இல்லை என்றும் சொன்னான்.

அவனை டிஸ்சார்ஜ் செய்வதைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தேன். ஆறு மாதம் அவன் தொடர்ந்து அவதானிப்பில் இருக்க வேண்டும். மாத்திரைகளைச் சாப்பிடவேண்டும். அவனிடம் அது பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்போது செந்திலை அவனால் அப்போது நேசிக்க முடிகிறதா? என்றேன்.

ஆழமான அமைதிக்குப் பிறகு சரவணன் ‘சொல்ல முடியவில்லை டாக்டர். எனக்கு இப்போது அவன்மீது கோபமோ, அருவருப்போ, வருத்தமோ இல்லை. அவனை நினைக்கும்போது, அப்பாடா இனிமேல் ஒன்றுமில்லை, போய்விட்டான் என்றுதான் தோன்றுகிறது. அவ்வளவுதான் அன்பு... அன்பு இல்லை என்றுதான் நினைக்கிறேன். என்னால் முடியவில்லை’ என்றான். பிறகு ‘ஒரு மங்கோலாய்டு நமக்கு மகனாகப் பிறக்கலாம். நம் அப்பாவாக இருக்கலாம். நம் சகோதரனாக இருக்கக்கூடாது...’ என்றான்.

‘ஏன்?’

‘எப்படி அதைச் சொல்லுவேன்... அவன் குரூபி. என்னையும் அவனையும் ஒப்பிடவே முடியாது. ஆனால் எனக்கு உள்ளூரத் தெரியும், அவனும் நானும் ஒன்று என்று.’

‘புரியவில்லை.’

‘நான் ஒரு படம் என்று வைத்துக்கொள்வோம். அதே படத்தை நன்றாகக் கசக்கி விரித்ததுபோலத்தான் அவன். அவனது ரூபத் தோற்றத்துக்கு உள்ளே என்னுடைய முகமும் உடலும் ஒளிந்திருந்தது. அவன் பேசும்போதும் நடக்கும்போதும் என்னை ஏளனம் செய்வதுபோல இருந்தது. என்னை அவமதிப்பதுபோல. இருங்கள்; அவமதிப்பது அவனல்ல; வேறு யாரோ? அல்லது, வேறு எதுவோ? கடவுள் அல்லது இயற்கை...’

நான் மெல்ல ‘ஆம், அத்துடன் அவனது களங்கமற்ற பிரியம். அதுவும் உங்களை அவமதிப்பதுபோலத்தான்’ என்றேன்.

அவன் சற்று அயர்ந்துவிட்டான். மெல்லச் சமனடைந்து, ‘உண்மை. அவனது இயல்பு என்ன மோசமான தந்திரக்காரனாகவும் குரூரமானவனாகவும் எனக்குக் காட்டியது’ என்றான். பெருமூச்சு விட்டபடி, ‘டாக்டர், நேற்று முழுக்க

இதைத்தான் நினைத்துக் கொண்டிருந்தேன். ஏன் இப்படிப்பட்ட பிறவிகள் பிறந்து நம்மீது இப்படிக் கனக்கவேண்டும்? இதற்கெல்லாம் என்ன பொருள்?'

'மனித வாழ்க்கைக்கே என்ன பொருள்?' என்றேன்.

சிரித்தபடி 'சரிதான்' என்றான்.

*

அன்றிரவு நர்ஸ் என்னை ஃபோனில் கூப்பிட்டாள். பாதி அலறலாக 'டாக்டர் சரவணன்... சீக்கிரம் ஓடிவாங்க' என்றாள்.

நான் சரவணன் அறையை அடைந்தபோது உள்ளே உக்கிரமாக உறுமிக் குழறும் செந்திலின் குரல் கேட்டது. அத்தனை கோபமாக அக்குரலை நான் கேட்டதேயில்லை. 'நீ க்க்கெட்ட ம்ம்மீ... நீ க்க்க்கெட்டட ம்ம்மீ' என்று அது வீறிட்டது.

அறைக்குள் சரவணன் பற்களைக் கிட்டித்தபடி நெளிந்து கொண்டிருந்தான். கைகால்கள் வலிப்புபோல முறுக்கி நின்றன.

நான் அவனைத் தட்டி உசுப்பினேன். 'சரவணன், சரவணன்... இங்க பாருங்க... சரவணன்.'

அவன் அறுபட்டு விழுவதுபோல விழித்தெழுந்தான். என்னைச் சிவந்த கண்களால் உற்றுப் பார்த்தான். சட்டென்று என் கைகளைத் தாவிப் பற்றி, 'டாக்டர்... டாக்டர் என்னைக் காப்பாத்துங்க... செந்தில்...' என்றான்.

'என்ன ஆச்சு?'

'செந்தில் செந்தில் என்னை...'

'அண்ணான்னு சொல்லுங்க... அன்பாப் பேசுங்க...'

சட்டென்று சரவணனின் முகத்தில் வந்த உக்கிரமான வெறுப்பை நான் என்றுமே மறக்கமாட்டேன். 'அன்பாவா? அவன்கிட்டயா?' என அவன் ஆவேசமாக எழுந்தான். 'நான் அவனை வெறுக்கிறேன். இனிமே என்னால நடிக்க முடியாது. அவனை நான் வெறுக்கிறேன். அவனை நெனைச்சாலே அருவருப்பா இருக்கு... வெறுக்கிறேன்; வெறுக்கிறேன்...'

விலுக்கென்று உடம்பு உதற, பின்னால் சரிந்து விழுந்து உடலை ஒருமுறை உலுக்கி அப்படியே தளர்ந்தான்.

‘சிஸ்டர் ஆக்ஸிஜன்.. சீக்கிரம்’ என்றேன்.

சரவணன் வாயோரம் சிறிதளவு ரத்தம். கண்கள் வெறித்திருந்தன. ஸ்டெதாஸ்கோப்பை மார்பில் வைத்தேன். இறந்திருந்தான்.

நம்ப முடியாமல் மீண்டும் நாடியையும் இதயத்தையும் பார்த்தேன். ஆம் மார்பு நின்றுவிட்டது. உளநோயாளிகளால் அபூர்வமாகச் சிலர் உச்சக்கட்ட மன உக்கிரத்தில் இதயம் நின்று இறக்கக்கூடும்.

பெருமூச்சுடன் அவன் கண்களை மூடிவிட்டு எழுந்தேன். ‘சிஸ்டர், அவன் அப்பாவுக்குச் சொல்லிடு. ஆறுமுகத்தை வரச் சொல்லு’ என்று நர்ஸிடம் சொன்னேன். அவள் பீதியுடன் தலையாட்டிவிட்டு வெளியேறினாள். நான் அறையின் கழுவு தொட்டியில் கைகளைக் கழுவிவிட்டு முகம் துடைக்கும்போது என் உடலைக் குலுங்கி உதறச் செய்தபடி எழுந்த செந்திலின் மந்தச் சிரிப்பொலியை ஒரு கணம் கேட்டேன்.

உயிர்மை, ஏப்ரல் 2005

## 5. யட்சி

[1] சின்னப் பெண்ணாக இருந்தபோது அம்மா யட்சியைப் பார்த்திருக்கிறாள். சின்ன வயதில் என்னை மடியில் போட்டுக் கொண்டு கதை சொல்லும்போது அவளே சொல்லியிருக்கிறாள். தோட்டத்து நெல்லி மரத்தின் நிலாநிழல் வாசல் வழியாக உள்ளே பரப்பிய வலையில் நானும் அவளும் தனித்திருந்தோம். காற்றில் வலை அலைவுற்றது. வெகு தொலைவில் திற்பரப்பு அருவி சீறிக்கொண்டிருந்த ஒலி.

‘யட்சி அழகா, அம்மா?’

‘பின்னே? ரொம்ப ரொம்ப அழகு. அழகுனு சொன்னாப் போறுமோ? பெண்ணழகே அவதான்னு வை…’

‘உன்னை மாதிரியா அம்மா?’

‘போடா.’

தலையைத் தட்டிய கை அப்படியே வருட ஆரம்பித்தது. தொழுவில் சிவப்பிப் பசு சடசடவென்று கல்தளம்மீது கால்மாற்றியது.

எத்தனை அழகான பெண்ணாக இருந்தாலும் வாழ்வின் ஒரு பருவத்தில் மட்டும்தான் அழகாக இருக்க முடியும். அப்பருவத்தில்கூடச் சில தருணங்களில்தான் அவள் அழகு முழுமையாக வெளிப்படும். அத்தருணத்தில்கூட சில கோணங்களில் சில அசைவுகளில்தான் அவள் அழகின் உச்சம் நிகழ்கிறது. ஒவ்வொரு அழகிக்கும் அவள் ஓர் உச்சமுனையைத் தொடும் ஒரு கணம் வாழ்வில் உண்டு. ஒரே ஒரு கணம். அவ்வளவுதான். அந்தக் கணங்களையே நீட்டி முடிவற்ற காலமாக்கினால் அதில் வாழ்பவள் யட்சி அம்மா சொன்னாள்.

‘நீ எப்ப அம்மா அப்படி அழகா இருந்தே?’

அருகே ஒரு பெருந்தழல் சட்டென்று எண்ணெய் பட்டு எழுந்தாடி அணைந்ததுபோல அம்மா முகத்தில் ஓர் உக்கிரம் படிந்து மறைந்தது. நான் அவளை அப்போது மிக அஞ்சினேன். அவள்மீது ஒண்டிக்கொண்டு அந்த பயத்தை வென்றேன். என் அம்மாவேதான். ஆமாம். திடமாக, மென்மையாக அருகே இருக்கும் அறிமுகம் மிக்க உடல்.

‘அம்மா.’

‘ஏண்டா?’

‘ஏன் எல்லாரும் யட்சியைப் பாத்துப் பயப்படறங்க? அவதான் அழகா இருக்காளே?’

‘அழகா இருந்தா பயப்படாம இருப்பாங்களா?’

‘ஏம்மா?’

‘போ. போய்ப் படு. பனி விழுது…’

‘உன் அம்மாவே ஒரு யட்சியில்லா?’ பெரியம்மா சொன்னாள் பிறகு. ‘அப்பல்லாம் இப்ப மாதிரி இல்ல. நாங்கள்லாம் பயந்து பயந்து சாவோம். அப்பா பெருந்திண்ணையில் இருந்தா பனைவிசிறிச் சத்தம் கேக்கும். அப்ப அந்தச் சத்தம் மட்டும்தான் வீட்டில் கேக்கும். சின்ன வயசில நான் அப்பாவைப் பாத்ததே இல்லை தெரியுமா? கதவிடுக்கு வழியாப் பாத்து பாத்து அவருக்க முதுகும் புறந்தலையும் மட்டும்தான் எனக்குத் தெரியும். உன் அம்மா அப்பிடியா? நான் நான்னு நிப்பா. படமெடுத்த பாம்பு மாதிரில்லா தலை திருப்புவா. வேணும்னா வேணும். வேண்டாம்னு ஆராவது சொன்னா சொல்றவங்களைக் கொல்லணும். அப்படி ஒரு பிடிவாதம். அப்பத்தான் வெல்வெட் துணி வந்தது. ஜம்பர் தைக்கணும்னு கேட்டா. ‘ஆமா, வெல்வெல்ட்டும் வெளிச்சமும். போடி வெவஸ்தகெட்ட குடியால்ல போச்சு’னு அப்பா சொல்லிட்டார். சரசரன்னு போயி தேங்காப் புரையில உக்காந்திட்டா. ‘வேணும்னா வந்து சாப்பிடுவா. விடுடீ’னு அப்பா சொல்லிட்டார். எங்கம்மா பயந்துபோய் உள்ள உக்காந்து அழுதா. அத்தை மட்டும் போயி ‘வாடி செம்பகம்… வெளையாடாதே… நான் உனக்கு எப்படியாவது வாங்கித்

தாரேன்’னு சொல்லி காலைப் பிடிச்சா. அப்படியே உக்காந்திருக்கா, முடிப்புரை பகவதி மாதிரி முடியைப் பிரிச்சுப் போட்டு... மஷனுப் பார்வை இல்ல. இருட்டிப் போச்சு. ‘மக்கா உள்ள வாடீ... இருட்டு வந்தாச்சு’னு அம்மா கண்ணீர் விட்டா. அசையணுமே. அப்படி ஒரு இருப்பு. மண்விளக்கு ஏத்தி வெச்சு அத்தை காவலுக்கு இருந்தா. காலம்பற அப்பா தொழுத்து பாக்க வந்தார். இவ இருக்கிற இருப்பைப் பார்த்தார். கோவம் வந்தா அவரு சொடலைமாடன் பூசாரி மாதிரி ஆராசனை கேறி ஆடுவார். ‘கள்ள நீலி’ன்னு கத்திக்கிட்டு அரிவாளைத் தூக்கிட்டு துள்ளிச் சாடி வந்தார். அத்தையும் அம்மையும் ஓடிப்போய் காலில் விழுந்தாங்க. ஆளுக்கொரு எத்து. நேரா தேங்காப் புரையில ஏறி ‘சாவுடீ’னு ஒரே வெட்டு. விரக்கடை வித்தியாசப்பட்டு வெட்டு தூணில பட்டுது. இவ ஒரு இமை அசைக்கணுமே. அப்படியே இருக்கா. அப்பாவுக்கு சங்கு பதறிப்போச்சு. கையும் காலும் கெடந்து துடிக்குது. அப்படியே சிவந்த கண்ணைத் திருப்பி ஒரு பார்வை பாத்தா. ‘அம்மா பகவதி தேவி’னு கத்திக்கிட்டு வெளியே ஓடிப்போய் திண்ணையில விழுந்தவரு. எட்டு நாள் ஒரே பொலம்பல். பிறவு அவளை ஏறிட்டுப் பார்க்கமாட்டார். கேட்டா கேட்டது கிடைக்கும்... அப்படி இருந்தா... யட்சியில்லா அவ? செம்பக மரத்து யட்சிக்கு தங்கச்சில்லா?’

செம்பக மரத்து யட்சி, அம்மாவின் குடும்ப வீட்டின் அருகே நீலகண்டசாமிக் கோயில் குளத்துக்கும் அவர்களுடைய தோட்டத்துக்கும் நடுவே நின்ற பெரிய செண்பக மரத்தின் அடியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்தது. கல்பீடம்மீது கல்லால் செய்யப்பட்ட சிறு விளக்கு. அதுதான் பிரதிஷ்டை. ஆவணி மாதம் ஆயில்யம் நட்சத்திரத்தில் பலியும் பூஜையும் உண்டு. மற்ற நாட்கள் முழுக்க சருகு மூடி, காற்றில் இலைகள் கீறும் ஒலியோடு தனிமையில கிடக்கும் கல்வடிங்கள்.

எனக்கு இரண்டாவதாகப் பெண் குழந்தை பிறந்தபோது குலதெய்வக் கோயிலில் மொட்டை போட்டுக் காது குத்தி, உடனே யட்சிக்கும் ஒரு பலி போட்டுவிடலாம் என்று சண்முக மாமா சொன்னார். ‘அன்று சருகுகளையெல்லாம் அள்ளி விலக்கி யட்சிபீடம் சுத்தம் செய்யப்பட்டிருந்தது. தேங்காய் எண்ணெய் விட்டு தீபத்தை ஏற்றியபோது கரிய கூந்தலைக் காற்றில் சுழற்றி யட்சி நின்றாடுவதுபோலத்தான் இருந்தது. காது வலியை மறந்து கனகா வாழைப்பழத்தைத் தின்றபடி விழித்துப் பார்த்தது.

‘பண்டு நம்ம மூத்த பாட்டா ஒருத்தர் திருவனந்தபுரம் தாண்டி ஏவாரத்துக்கப் போனப்ப... ஒரு காட்டில பாறைமேல கைப்பொதியை வெச்சார். அதுல பொன்னிருந்தது. பாறையில குடியிருந்த வனயட்சி பொன்னுக்கு ஆசைப்பட்டுக் கூடவே வந்துட்டா. இங்கே வந்து ஒரே அட்டகாசம். பசுவையும் கன்னையும் பயமுறுத்துறது. ராத்திரி வழிநடக்கிறவங்களைக் குழப்பிச் சுழற்றியடிச்சு சுடுகாட்டில் கொண்டுபோய் விடுறது... மந்திரவாதி வந்து பாத்து யட்சி வந்திருக்க விஷயத்தைச் சொன்னாரு. பவுனு குடுத்து நிறையுமா? பத்து பவுன் வெச்சு கும்பிட்டா யட்சி பத்து நூறு பவுன் கேப்பாளே? பின்ன, பொன்னிருக்க இடத்தில் பூவுனு ஒரு சொல்லுண்டில்லா? அதனால் இங்க ஒரு தங்கச் செம்பக மரத்தில யட்சியை ஆவாகனம் பண்ணி பிரதிஷ்டை செய்தாச்சு. தங்கச் செம்பகப் பூவைப் பாத்துப் பொன்னுனு நினைச்சு யட்சியும் இங்கே இருந்துபோட்டா.’

பூசாரி பொங்கல் படைத்து, கமுகம் பூவும் அரளிப்பூ மாலையும் சார்த்தி, யட்சிக்குப் பூசை செய்தார். சுடர் படபடத்தது. காற்றில் பொற்காசுகள்போலச் செண்பக மலர்கள் உதிர்ந்தன. மாமா ஒரு துளி பொங்கலை எடுத்து கனகுவின் வாயில் வைத்தார். அவள் பழத்தை நழுவவிட்டு மாமாவின் கையைப் பிடித்தாள். வாய் கொழகொழவென்று ஒழுகியது.

‘பெண் பிள்ளைன்னாக்க அதுக்கு ஒரு யட்சி கிருபை வேணும் பாத்துக்க. அது ஒரு பெலமாக்கும். கண்ணில் ஒரு தீ இருக்கும்...’ மாமா சொன்னார். ‘உனக்கு அம்மை வந்து நின்னு செய்ய வேண்டிய பூசை. அவ இந்த வீட்டுப் படியெறங்கி வருஷம் முப்பதாவுது... அவ சொன்னா சொன்னதுதான். வேளிமலை மறிஞ்சாலும் நெனைச்ச நெனைப்பு மறியமாட்டா...’

அதைப் பற்றி அம்மா சொன்னதில்லை. ஆனால், பிற அத்தனை பேரும் ஏதோ ஒரு தருணத்தில் சொல்லியிருக்கிறார்கள். அம்மாவின் இளைய அண்ணா இசக்கிமுத்துப் பிள்ளை சர்வேயராக கேரளத்து மலையோரத்துக் கிராமம் ஒன்றுக்குப் போனார். அங்கேயே அவருக்கு கம்யூனிஸ்டு உறவு ஏற்பட்டது. ஊருக்குத் திரும்பி முழுநேர கம்யூனிஸ்டுப் பிரசாரகர் ஆனார். அம்மா அவரது சீடப்பெண் மாதிரி. அவர் படித்த புத்தகங்களையெல்லாம் அம்மாவும் படிப்பாள். அவர் பேசும்போது கதவோரம் நின்று இரு சுடர்கள்போலக் கண்கள் ஒளிரக்

கேட்டிருப்பாள். கட்சி தடை செய்யப்பட்டபோது பல முக்கியத் தோழர்கள் அவர்கள் வீட்டில் வந்து தலைமறைவாகத் தங்கியிருந்தார்கள். அண்ணாவின் நடவடிக்கைகள் பற்றி அவரது அப்பாவுக்கு ஒன்றுமே தெரியாது. சரியான கிராமத்து மனிதர். வருபவர்கள் அண்ணாவின் நண்பர்கள் என்றே நம்பியிருந்தார்.

இரவில் சாய்ப்பு அறையில் அவர்கள் சிமினி விளக்கை வைத்துக் கொண்டு விடிய விடியப் பேசுவார்கள். சாய்ப்பை ஒட்டி உள்ளறை இருந்தது. அதன் சன்னலில் ஒரு சிறு துளை. இருட்டும் ஒட்டடையும் எலிகளும் கரப்பாம்பூச்சிகளும் நிரம்பிய அந்த இடுங்கிய அறைக்குள் இரவு முழுக்க நின்றபடி அம்மா கேட்டுக் கொண்டிருப்பாள். போலீஸ் கெடுபிடிகள் அதிகரித்தபோது அவர்கள் முகாமை மாற்றிக்கொண்டார்கள். விரிந்து பரந்த பல கிலோமீட்டர் பரப்பை நிரப்பிய மரவள்ளிக் கிழங்குத் தோட்டத்தின் நடுவேயுள்ள சிறிய ஓலைக் குடிலுக்கு. அங்கு குடில் இருப்பதை மிக நெருங்கினால் மட்டுமே பார்க்க முடியும்.

அன்று மாலை இ.எம்.எஸ். [2] வருவதாக அம்மாவிடம் அண்ணா சொன்னார். அவர் மூன்று நாள் ஊரில் தலைமறைவாக இருக்கப் போகிறார். அம்மா அவர் எழுதிய எதையுமே படித்தது இல்லை. அவரது படத்தையும் பார்த்ததில்லை. ஆனால், எல்லா விவாதங்களிலும் அந்த மூன்று எழுத்துக்கள் உச்சரிக்கப்பட்டன. மதிப்புடன், பிரமிப்புடன், ஆவேசத்துடன்.

அன்றிரவு அம்மா வீட்டை விட்டு இறங்கி, கோயிலைத் தாண்டி, ஆற்றில் இறங்கி, மறுபக்கம் சென்று, மனித சஞ்சாரமே இல்லாத காட்டுப் பாதையில் நடந்து, மரவள்ளிக் கிழங்குத் தோட்டத்தில் நடந்து இ.எம்.எஸ். இருந்த குடிலை அடைந்தாள். உள்ளே தூக்கிக் கட்டிய மரக் கட்டில்மீது இ.எம்.எஸ். அமர்ந்திருந்தார். இருளில் அவர் காலடியில் ஏழெட்டுத் தொண்டர்கள் அமர்ந்திருந்தனர். கண் பழகியபிறகே அவரது குறுகிய உடலையும் இரட்டை மண்டையையும் அம்மா அடையாளம் கண்டாள். மெல்லிய குரலில் திக்கித் திக்கி அவர் பேசிக் கொண்டிருந்தார். உலகப் போருக்குப்பிறகு உலக வரலாற்றின் திசை எப்படி மாறிவிட்டது என்றும், வரும் யுகத்தில் உழைப்பு

எப்படி ஓர் அடிப்படைச் சக்தியாக மாறி அரசியலை ஆட்டிப் படைக்கும் என்றும்.

விடியும்வரை குடிசைக்கு வெளியே நின்று கேட்டுவிட்டு அம்மா திரும்பினாள். திரும்பும்போது வழி தவறிவிட்டாள். மரவள்ளி இலைகளின் கடலுக்குள் பல மணி நேரம் அலைந்தாள். விடிந்து ஒளி வந்தபிறகு அவளை பனை ஏறச் சென்றவர்கள் கண்டுபிடித்துக் கொண்டுவந்து சேர்த்தார்கள். அது யட்சியின் வேலை என்று அம்மாவின் அப்பாவும் அம்மாவும் பிறரும் நம்பினர். அம்மாவின் அத்தைக்கும் குட்டித் தம்பியாக இருந்த சண்முக மாமாவுக்கும் மட்டுமே விஷயம் தெரிந்திருந்தது. அந்த மாதமே அம்மாவின் திருமணம் நடந்தது. அதை ஒரு கட்டாயக் கல்யாணம் என்று வீட்டுக்கு வெளியே எவரும் அறியவில்லை. அறிந்தாலும் ஒன்றும் பிரச்னை இல்லை. அன்று எல்லாக் கல்யாணங்களும் கட்டாயக் கல்யாணங்கள்தாம். அம்மாவின் அம்மா உத்திரத்தில் சுருக்கைக் கட்டி கழுத்தில் மாட்டிக்கொண்டு நிற்பதை கதவிடுக்கு வழியாகப் பார்த்து அம்மா கத்தினாள். கதவை உடைத்துத் திறந்து உள்ளே போய் அம்மா அவள் காலைப் பிடித்துக் கதறியபடி கல்யாணத்துக்குச் சம்மதித்தாள். ஆனால், அந்த வஞ்சத்தை அம்மா மறக்கவில்லை. தன் அம்மாவும் அப்பாவும் இறந்தபோது மட்டும்தான் பிறந்த வீட்டுக்கு வந்தாள்.

போகும்போது மட்டும் எப்படி வழி தெரிந்தது என்று சண்முகம் மாமா கேட்டபோது, யட்சி வழிகாட்டிக் கூட்டிச் சென்றதாக அம்மா சொன்னாளாம். வெகு நாள் அவரும் அதை நம்பியிருக்கிறார். அம்மா சொல்வது அத்தனை தத்ரூபமாக இருக்கும். எப்போது முதலில் யட்சியைப் பார்த்தாள் என்று நான் கேட்டேன். நீலகண்டசாமி கோயிலில் நாடகம் பார்க்கப் போனபோது என்றாள்.

வருடம்தோறும் நீலகண்டசாமி கோயிலில் பாட்டும் நடனமும்தான் இருக்கும். அன்று வள்ளியூர் சிவசண்முகம் குழுவினரின் ஸ்பெஷல் நாடகம் ‘தட்சயாகம்’ போட்டிருந்தார்கள். ஊரே திரண்டு நாடகம் பார்க்கப் போயிற்று. அம்மாவின் அப்பா பெண்களையெல்லாம் வீட்டுக்குள் தள்ளி வெளியே பூட்டிவிட்டார். அவருக்கு நாடகம் பிடிக்காது. நாடகமென்ன, எந்தக் கலையுமே பிடிக்காது. நாடகம் தொடங்க நள்ளிரவாகிவிட்டது. அம்மா மச்சுக்கு ஏறி ஓட்டுக்

கூரையைப் பிரித்து வெளியேறி, நடந்து, புளியமரக் கிளையில் தொற்றி ஏறி, இறங்கி கோயிலைப் பார்க்கச் சென்றாள். குளத்துக்கு இந்தப் பக்கம் அவர்களுடைய தோட்டத்துக்குள் நின்ற கூழைப்பலா மரத்தில் ஏறி, ஒரு கிளையில் அமர்ந்து, நாடகம் பார்த்தாள். அப்போது பக்கத்தில் செண்பக மரத்தின் கிளையில் ஓர் அழகிய இளம்பெண் இருப்பதைப் பார்த்தாள். அது செண்பக யட்சி. யட்சியின் தலைமயிர் கருமையான நீரோடைபோலப் பளபளத்து வழிந்து வெகு நீளத்துக்கு காற்றில் பறந்தது. செண்பகத் தளிர்களினாலான ஆடை அணிந்திருந்தாள். வாயில் இரு வீரப் பற்கள் இருந்தன.

‘அழகுனு சொன்னே?’ என்றேன்.

‘ஆமாடா, ரொம்ப அழகான பொண்ணுக்கு இரண்டு வீரப்பல் இருந்தா இன்னும் அழகுதான்...’ அம்மா சொன்னாள். யட்சி அம்மாவிடம் பேரைக் கேட்டாள். பெயர் பிடித்திருந்தது. அம்மா யட்சியிடம் அவள் எங்கெல்லாம் போயிருக்கிறாள் என்று கேட்டாள். யட்சி போகாத இடமே இல்லை. நட்சத்திரங்களுக்கு இடையே மிக மிக இருண்ட ஒரு கடல் அலையடிக்கிறது. அதில் அவள் நீந்தியிருக்கிறாள். நிலவில் முகம் பார்த்துப் பொட்டு போட்டிருக்கிறாள். ஏழு கடல்களுக்கு அப்பால் இருக்கும் பொன்னாலான மலைமீது இருக்கும் செம்மணியாலான பாறைமீது படுத்துத் தூங்கியிருக்கிறாள். உருகிய உலோகங்கள் தீ போல ஓடும் பாதாள நதியைப் பார்த்திருக்கிறாள். அதிகாலைப் புற்களிலும் பூக்களிலும் படர்ந்திருக்கும் பனித்துளிகளை மட்டுமே யட்சி அருந்துவாள். செண்பகப் பூக்களில் ஊறும் முதல் தேனையும்.

அம்மா எங்கெல்லாம் போயிருக்கிறாள் என்று யட்சி கேட்டாள். அம்மா எங்குமே போனதில்லை. சமையலறை, குளம், வீட்டுத் தோட்டம், மீண்டும் சமையலறை. அதைக் கேட்டபோது யட்சியின் கண்கள் காற்றுப் பட்ட கனல்போல எரிந்தன. வாயில் வீரப் பல் ஒளிவிட்டது. யட்சி, நாடகத்தைச் சுட்டிக்காட்டினாள். அந்த நாடகத்தைப் பார்க்கத்தான் அவள் வந்தாள். அது அவளுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே அவள் வேறு ஒரு நாடகத்தைப் பார்ப்பதாகச் சொன்னாள். பலா மரத்தின் உச்சிக்கு அவள் அம்மாவைக்

கூட்டிச் சென்றாள். அங்கிருந்து பார்த்தபோது கோயில் குளம் ஒரு பெரிய கண்ணாடிபோலத் தெரிந்தது. அதில் அதே நாடகம் தலைகீழாகத் தெரிந்தது. அங்கிருந்து பார்த்தபோது அந்நாடகம் மிக வேடிக்கையாக இருந்தது. அதில் தாட்சாயணி தன் நெற்றிக் கண்ணைத் திறந்து சிவனை எரித்துச் சாம்பலாக்கினாள். யட்சியும் அம்மாவும் இரவு முழுக்கச் சிரித்தார்கள்.

அம்மாவுக்கு கண்ணில் முதல் ஆபரேஷன் முடிந்ததுமே படிக்கும் பழக்கம் போய்விட்டது. அதற்கும் வெகுகாலம் முன்பே அம்மா பேசுவது மிகவும் குறைந்துவிட்டிருந்தது. மணிக்கணக்கில் படிக்காமல் புத்தகத்துடன் உட்கார்ந்திருப்பாள். அம்மாவிடம் கூடும் அந்த மௌனம் மிகவும் பயமுறுத்துவது. அப்பா இருந்தவரை அந்த மௌனத்தைக் கண்டு பொறுமையிழப்பார். கத்துவார், புலம்புவார். ஆனால் ஒன்றும் செய்ய முடியாது. நாட்கணக்கில் அந்த மௌனம் நீளும். பிறகு பனிக்கட்டி உடைவது போலக் கலகலவென்று உடையும். கண் சரியாகத் தெரியாமல் ஆனபிறகு அந்த மௌனம் மாசக்கணக்கில் விரிய ஆரம்பித்தது. கனகு மட்டும்தான் அப்போது அம்மாவை நெருங்க முடியும். பாட்டி கவனிக்கிறாளா இல்லையா என்று கவலைப்படாமல் சளசளவென்று பேசிக்கொண்டிருப்பாள். பேசிப் பேசி இருவரும் ஒன்றாக ஆகிவிடுவதுபோல இருக்கும். உடலின் ஓர் உறுப்பு இன்னோர் உறுப்புடன் பேசிக்கொண்டிருப்பதுபோல.

டாக்டர் வீட்டிலிருந்து திரும்பிக்கொண்டிருந்தோம். பஸ் இறங்கும்போது வெயில் சாய ஆரம்பித்திருந்தாலும் சூடு அடங்கவில்லை. அம்மா கண்மீது கையை வைத்துப் பாதையைப் பார்த்தாள். நான் கனகுவின் பிடிவாதம் பற்றி அவளிடம் அவ்வளவு நேரம் சொல்லிக்கொண்டிருந்தேன். ஒரே பெண். பதினேழு வயதில் தன்னந்தனியாக லக்னோவுக்குப் படிக்கப் போகிறேன் என்கிறாள். எங்கள் பதைப்புகளை அவளால் புரிந்துகொள்ளவே முடியவில்லை. சிரிக்கிறாள். எது பேசினாலும் ஒரே சிரிப்பு. உலகமே வேடிக்கைகளால் நிரம்பியிருப்பதுபோல. ‘அவள் வாயிலே யட்சி பிரசாதம் வெச்சிருக்கப்பிடாது. சொன்ன பேச்சு கேக்க மாட்டா… எதுக்கெடுத்தாலும் ஒரு கலீர் சிரிப்பு… நீயாவது பேசிப் பாத்து ஒரு நல்ல புத்தி சொல்லு’ என்றேன். அம்மா அதைக் கேட்டதாகவே தெரியவில்லை.

‘ரொம்ப வெயிலா இருக்கேடா’ என்றாள் அம்மா.

‘பக்கம்தானே. அஞ்சு நிமிஷத்தில் போயிடலாம்’ என்றேன். சலிப்பாக இருந்தது. அம்மாவுக்கு இப்போதெல்லாம் தன் உடல் அவஸ்தைகள் தவிர வேறு நினைப்புகளே இல்லை.

ஒரு பாக்கெட் சிகரெட் வாங்கலாம் என்று நான் கடைப் பக்கம் திரும்பியபோதுதான் அந்த போஸ்டரைப் பார்த்தேன். அப்போதுதான் மாலை நாளிதழுக்காக ஒட்டியிருந்தான். ஓடிப் போய் ஒரு பிரதி வாங்கி கை நடுங்க விரித்துப் படித்தேன். முதல் பத்திக்கு மேல் படிக்க முடியவில்லை.

ரோட்டைத் தாண்டி மறுபக்கம் வந்து அம்மாவிடம் உரக்க, ‘அம்மா அம்மா...’ என்றேன். ‘இ.எம்.எஸ். இறந்துட்டார்...’

‘யாரு?’

‘இ.எம்.எஸ். இன்னைக்கு மத்தியான்னம்.’

‘ம்’ அம்மா திரும்பி மண் பாதையைப் பார்த்து, ‘ஒரே வெயிலா கொளுத்துதே’ என்றாள்.

என் மனத்தில் அக்கணம் சொற்களே இல்லை.

பின்பக்கம் பைக் ஒலி கேட்டு பின்னால் நகர்ந்து ஒதுங்கி வழி விட்டேன். பெரிய எஸ்டி பைக் மீது கனகு. சிரித்தபடி, ‘ஏறிக்க பாட்டி’ என்றாள்.

‘யார்துடீ இது?’

‘மனோகர் மாமாவோடது. ஏறு பாட்டி.’

‘எறங்குடி கீழ... எரும மாதிரி இருக்கு வண்டி.’

‘போப்பா... நீ ஏறு பாட்டி.’

அம்மா அதன்பின் ஏறிக்கொண்டாள். ‘அப்பா நீங்க முன்னாடி ஏறிக்கிறீங்களா?’

‘கனகு, பாத்து...’

‘சும்மா பயப்படாதீங்கப்பா.’

பைக் புகை கக்கி முன்னால் பாய்ந்து போயிற்று. கனகுவின் குட்டைத் தலைமயிர் தீபோலக் கொழுந்து பரப்பிப் பறந்தது.

ஆனந்த விகடன் தீபாவளி மலர், 2005

# 6. ஏழுநிலைப் பந்தல்

சிவில் எஞ்சினியருக்குப் படித்தவன் என்றாலும் பந்தல் அலங்காரம்தான் என் தொழில். குலத்தொழில் இல்லை என்றாலும் குறைந்தது மூன்று தலைமுறையாக இதைச் செய்துவருகிறோம். என் தாத்தா அக்காலத்தில் மகாராஜாவின் முறை ஜெபத்துக்காகப் பந்தல் போட்டு பட்டும் வளையும் [1] வாங்கியவர். அது இப்போதும் என்னிடம் இருக்கிறது. ஆகவே இந்தப் பிராந்தி யத்தில் ஒரு நற்பெயர். இக்காலகட்டத்தில் கல்யாணப் பந்தல்கள் போடுவது குறைவு. ஆனால் சின்னச் சின்ன முத்தாலம்மன்களும் மாடன்களும் கொடை விழாக்கள் பெற ஆரம்பித்தபிறகு வருடத்தில் பாதி மாதம் எனக்கு குறைவு இல்லாமல் நிகழ்ச்சி இருக்கும். மழைக்காலம் முழுக்க ஓய்வு. அப்போது நான் வாழை நடவில் இறங்கிவிடுவேன்.

பெரிய கல்யாணங்களுக்குத்தான் ஏழுநிலைப் பந்தல் கட்டுவது. கல்யாணப் பந்தலைக் கோவில்களுக்குப் போடுவது இல்லை. அப்பாவோடு பந்தல் வேலைக்குப் போன நாட்களில் திற்பரப்பில் ஒரு மாடம்பி [2] வீட்டில் ஏழுநிலைப் பந்தல் போட்டோம். பிறகு இதுவரை அப்படி ஒரு வேலை வரவில்லை. ஆகவேதான் கீழ்மூலைக்காடு என்ற ஊரிலிருந்து ஏழுநிலைப் பந்தல் கட்ட ஆள் தேடி வந்தபோது எனக்குச் சற்று சந்தேகமாக இருந்தது. விசாரித்தபோது அது ஆலஞ்சோலை மலையடிவாரத்து ஊர் என்று தெரிந்தது. ஆகவே முக்கால் பங்குப் பணம் முன்கூட்டியே கேட்டு வாங்கினேன்.

கீழ்மூலைக்காட்டில் செல்லம் எஸ்டேட் உரிமையாளர் குமாரசாமி நாடாரின் பெண்ணுக்குத்தான் கல்யாணம். அவருக்கு ஏழுநிலைப் பந்தலில் முத்து விதானம் அமைத்து தன் மகளுக்குக் கல்யாணம் நடத்த வேண்டும் என்று ஆசை. சின்ன வயதில் அவர் அப்படி ஒரு கல்யாணத்துக்குச் சாப்பிடப் போய்

இழுத்து வெளியே போடப்பட்டிருக்கிறாராம், சொன்னார்கள். கிராம்பு விவசாயம் பணமாகக் கொட்டிக்கொண்டிருந்தால் ஏழுநிலை என்ன, எழுபது நிலை கட்டலாம்.

மூங்கிலும் ஓலையும் அங்கேயே சுளு விலைக்குக் கிடைக்கும் என்று அறிந்தேன். கயிறும் பந்தல் துணியும் அலங்கார வஸ்துக்களும் மட்டும் ஒரு டெம்போ நிறையக் கொண்டுபோய்ச் சேர்த்தேன். பத்து நாள் முன்னதாகவே நாங்கள் இருபத்திமூன்று பேர் அங்கே போய்விட்டோம். சமையல் பாத்திரங்கள், பாய் தலைகாணி சகிதம். குடிசை கட்டித் தங்கிக்கொண்டு வேலை ஆரம்பித்தோம். எனக்குச் சற்று உதறல்தான். ஏழுநிலைப் பந்தலுக்கு மூங்கிலில் மேலே மேலேயாக ஏழு அடுக்குக் கட்டு தேவை. கணக்கு சரியாக இல்லாவிட்டால் குடை சாய்ந்துவிடும். ஊரில் வீசும் காற்றுகளை நன்றாக அவதானித்துக் கட்டவேண்டும்.

கீழடுக்கில் ஈசான மூலையில் பம்பரக்குண்டு கட்டிய நூலைத் தொங்கவிட்டு, கோணம் பார்த்துக்கொண்டே கட்டினேன். நாலாவது அடுக்குக்குப் போனபோது பந்தல் சற்று சரிந்ததை தூக்குக்குண்டு காட்டியது. வெறும் கண்ணால் சரிவைப் பார்க்க முடியாது. கம்பி வைத்து இறுக்கி தாங்குகொழுவும், இரண்டு சார்த்துகொழுவும் கொடுத்து நிமிர்த்தினேன். ஆனால் அரை மணி நேரத்தில் மீண்டும் சரிந்துவிட்டது. போட்ட பந்தலைப் பிரிந்தால் அமங்கலம். பந்தல் சரிந்தால் தொழிலே போயிற்று. ஏன் இதை ஒப்புக்கொண்டோம் என்ற கலக்கம் வந்துவிட்டது. நாகராஜ சாமியை நினைத்துக்கொண்டு நான்கு பக்கமும் இழுகயிறு கொடுத்துடு கட்டினேன். அரை மணி நேரத்தில் கயிறு பட் பட் என்று வெடித்து அறுந்துவிட்டது. கம்பி போட்டுக் கட்டினேன். அதுவும் சரிந்துவிட்டது. பந்தலின் சரிவு இப்போது கண்ணுக்குத் தெரிந்தது.

வேடிக்கை பார்க்க ஆட்கள் வந்தார்கள். நான் ஓரமாகண் சோர்ந்து அமர்ந்துவிட்டேன். கூட்டத்தில் ஒருவன் என்னிடம் ‘கைப்பள்ளி [3] யே நம்ம சங்கரன் மூத்தாசாரியக் கூப்பிட்டுக் காட்டப்பிடாதா?’ என்றான்.

‘இது ஆசாரிப் பணியில்ல மக்கா…’ என்றேன்.

‘மூத்தாசாரி கணக்கில் கிண்ணனாக்கும். வயசு கொறெ ஆச்சு. ஆனா கண்ணும் மனசும் கிறுத்தியம். விளிச்சோண்டு வரட்டா? பொகையிலைக்கும் கருப்பட்டிக்கும் பைசா குடுத்தாப் போறும்...’

நம்பிக்கை இல்லாமல் ‘செரி, பாக்கலாம்’ என்றேன்.

மூத்தாசாரி ஒரு காலத்தில் ஆறடிக்கும் மேலே உயரமான மனிதராக இருந்திருக்கவேண்டும். நல்ல நிறமும் கனமான தாடையும் கொண்ட ஒரு காலத்திய அழகர். தலையில் நரைத்த குடுமி. பூணூல். உடம்பு சுக்குபோலக் காய்ந்து வற்றி இருந்தது. உள்ளே ரத்தமோ ஈரமோ இல்லை என்று தோன்றுமளவுக்கு, கண்கள் வெள்ளாரங்கல்போல இருந்தன.

வந்தபடியே பந்தலை ஏறிட்டுப் பார்த்தார். ‘மூணுக்கு அரை பாகம் ஏந்தல்’ என்றார். எனக்கு ஆச்சரியத்தில் சொல் நின்றுவிட்டது. அத்தனை நேரம் சிக்கலாகக் கணக்குப் போட்டு நான் அதைக் கண்டுபிடித்திருந்தேன்.

‘என்னவாக்கும் கணக்கு தப்பு ஆசாரியே?’ என்றேன்.

‘கணக்கில தெற்றில்ல. இந்த ஊறு காற்று ரெண்டு திக்கு சுற்றியடிக்குத காற்றாக்கும். மேக்க மூணு மலை ஏண் கோணிச்சு இருக்குல்லா... ’

எனக்கு ஆறுதல் ஏற்பட்டது. ‘அதுக்கு இப்ப என்ன செய்யுதது?’

‘பந்தலைக் கொஞ்சம் விரிச்சுக் கெட்டணு. ஒரு குட்டிப் பந்தலை அந்தால கெட்டி அதை இதோட சேத்தாப் போறும். இங்க காற்று தள்ளும்பம் அந்தப் பந்தலில் அடிக்குத காற்று ஏந்திக்கிடும்.’

ஒரு கணம் எனக்குப் புரியவில்லை. ஆசாரி தரையில் கோடு போட ஆரம்பித்ததுமே புரிந்துவிட்டது. அப்படியே கைகூப்பிவிட்டேன். அத்தனை பெரிய குருநாதன். ஒரு தட்டில் ரூபாயும் பழங்களும் வெற்றிலையும் வைத்து வணங்கினேன். ஆசாரிக்குக் கண்கலங்கி விட்டது.

‘ஆசாரிக்கு என்ன வயசாச்சு?’ என்றேன்.

‘அதாச்சு, தொண்ணூறுக்கும் மேல.’

‘இங்க ஆரு கூடயாக்கும் தாமஸம்?’

‘எனக்கு ஆருமில்ல. கோவிலில உள்ள தெக்கேப்பொர நான் கெட்டினதாக்கும். எழுபது வருசம் முன்ன. அதில இருக்க பெரசரண்டு ஏமான் சொல்லியிருக்காரு. ஊருக்குள்ள பலரும் சோறு தருவாவ. நமக்கு ஒரு நேரம் கஞ்சி உண்டெங்கி போறுமில்லா…’

ஆசாரி பந்தல் கட்டும் நாள் முழுக்க என்னுடன் தங்கினார். பெரிய விஷயங்கள் முழுக்க எளிமையான தீர்வுகள் கொண்டவையே என்பதை அவர் மூலம்தான் அறிந்தேன். அவருடன் ஒப்பிடுகையில் என் பொறியியல் கல்லூரிப் பேராசிரியர்கள் எல்லாம் கத்துக்குட்டிகள். ஆசாரி ஒரு பாயில் வெற்றிலைப் பாக்கும் செம்பில் மோரும் கருப்பட்டியுமாக உட்கார்ந்திருக்க, நாங்கள் பந்தலை எழுப்பினோம். எட்டாம் நாள் முத்து அலங்காரம் நடந்துகொண்டிருந்தது. நான் என் மனத்தில் இருந்த ஆவலை மெல்ல எழுப்பினேன்.

‘இங்க கிடக்குததுக்கு ஆசாரி எனக்குக்கூட வரணும். நான் தெய்வம் போல வைச்சுக் கும்பிடுதேன்.’

‘போட்டு மக்கா. நுப்பது வருசம் இப்டியே போச்சு… இனி ஒண்ணோ ரெண்டோ வருசம்… அது இப்டியே போட்டு…’

‘அதுக்கில்ல… இனி ஆசானை இப்டி இங்க விட்டுட்டுப் போனா எனக்கு மனசு ஆறுமா?’

‘நீ நல்லவண்டே…’ என்றார் ஆசாரி. ‘உனக்கு எனக்க அனுக்கிரகம் உண்டுலே…’

‘அப்ப எனக்ககூட வரணும்…’

‘இந்த மண்ண விட்டு நான் வர மாட்டேண்டே. நான் இங்க சாகணும்…’

‘இங்க யாரு இருக்கா உங்களுக்கு?’

‘இங்க ஆருமில்ல. ஆனா நல்ல பல ஓர்மைகள் [4] இருக்கில்லா…’ ஆசாரி பெருமூச்சு விட்டார்.

‘ஆச்சி நினைப்போ?’

‘ஆமான்னு வை.’

‘அவங்க போயி பல வருசம் இருக்குமே...’

‘ஆமா.’

‘ஆசையா இருந்தியளோ?’

‘ஆமலெ. அவ ஆசாரிச்சி இல்ல. கொல்லத்தி. நான் எடைக்கா நடைக்கு வேலையாப் போனப்ப அவளைக் கண்டு ஆசைப்பட்டுக் கெட்டி கூட்டினேன். எனக்க ஆசாரிக்குடி எட்டும் சேந்து என்னைச் சாதிய விட்டு வெலக்கினாவ. ஆத்தோரம் குடிலு கெட்டி நாங்க ரெண்டாளும் இருந்தோம். ஒருத்தர ஒருத்தர் நிறைச்சுக்கிட்டு. மக்கா நல்ல சினேகம்னாக்க என்னலே? திற்பரப்பு அரவிக்க கீழ வச்ச சொம்புல்லா சினேகிச்சுத மனசு? அருவி விழுத வேகத்தில செம்பு பொங்கி ஒருக்காலும் அது நெறையாது. அதாக்கும்... ம்ம்ம் ஒரு நுள்ளு போயிலெ எடுடே.’

அதன்பிறகு அவர் பேசவில்லை.

*

மூன்றாம் நாள் பந்தல் எழுந்துவிட்டது. அன்று விடியற்காலையில் நான் சற்று விழித்தபோது ஆசாரி தூங்காமல் இருப்பதைப் பார்த்தேன்.

‘என்ன மூத்தாசாரியே?’ என்றேன்.

‘மக்கா, நீ என்ன தப்பா நினைக்கப்படாது... நான் இந்த ஊரை விட்டு வரப்பிடாது... அதாக்கும்’ என்றார்.

‘செரி, அதுக்கிப்ப என்னா? நான் உங்களுக்கு இங்க வேண்டிய ஏற்பாட்ட செய்யுதேன்... வாரம் ஒருக்கா வந்து பாக்குதேன்...’ என்றேன்.

‘நீ குருத்துவமுள்ள பயல்டே’ என்றார் ஆசாரி. பெரிய மூச்சுடன் ‘ஒரு கத கெடந்து துள்ளுது மனசில... ஒரு யட்சிக் கத... பல சமயமாட்டு கேட்ட கதைன்னு வை...’

‘சொல்லுங்க... கருக்கிருட்டு... தாழம்பூ மணம். யட்சிக் கத கேக்குத நேரமுல்லா?’

ஆசாரி பெருமூச்சு விட்டு வெற்றிலையைத் துப்பிவிட்டுச் சொல்ல ஆரம்பித்தார்.

*

நரிக்கோட்டு வீடுன்னாக்கும் பேரு. நல்ல உசந்த வம்சம். பழைய மகாராஜாக்களுக்க ரெத்தம் கொறெ உண்டுன்னு வை. அதில எளமொறத் தம்புரானுக்க பேரு கேசவப் பெருமாள். அந்த வம்சத்துக்கே நல்ல எலுமிச்சம்பழ நெறமும் உருட்டுத் தூணு மாதிரி தேகவாக்கும் உண்டு. கேசவன் ஆளு ஒரு மன்மதன்னு வை. அவனைப் பாத்து ஆசைப்படாத பெண் குட்டிக அன்னைக்கு ஊருக்குள்ள இல்ல. அவனை சம்பு ஆசாரீன்னு ஒருத்தர் வரைஞ்ச படம் இப்பமும் பழைய கோவிலுக்குள்ள கோபுர வளைப்பில் உண்டு. அப்பிடிப்பட்ட பேருகேட்ட அழகன்.

அந்த மாதிரி எட்டும் திகைஞ்ச அழகு ஆணுக்கானாலும் பெண்ணுக்கானாலும் வரப்பிடாது. வந்தா தெய்வங்க சும்மா விட்டுராது. இப்ப நல்ல பித்தளைப் பானை மாதிரி பூசணிக்காயி நம்ம தோட்டத்தில வெளைஞ்சா என்ன செய்யிதோம்? நேரா திருவனந்தபுரத்துக்கு கொண்டுட்டுப் போயி மகாராஜாவுக்குக் காணிக்கை வைக்குதோம் இல்லியா? அது மாதிரீன்னு வை.

கேசன் திற்பரப்பு திருவாதிரை உத்சவத்துக்குப் போயிட்டு கதகளி கண்டுட்டு கூட்டுகாரன்மார்கூடச் சேந்து ராத்திரி நிலாவில தெக்கன்காட்டு வழியா வந்திட்டிருந்தான். தெக்கன்காட்டு வழி இன்னைக்கு ஆளும் கோளுமாக் கெடக்கு. அன்னைக்கு திற்பரப்பு விட்டா பின்ன பொன்னுமனை வரை குற்றிக்காடும் பனைமரமும் மட்டும்தான். சாதாரணமா ஆளுகள் அந்த வழியா மத்தியான்னமும் ராத்திரியும் நடமாடுதது இல்ல. ஆனா ரெத்தம் எள ரெத்தமில்லா. கள்ளும் கொஞ்சம் மோந்தியிருப்பாவன்னு வை. பேசிட்டே வந்தாவ.

அந்த வழியில காளபைரவீண்ணு ஒரு யட்சி உண்டு. தெக்கன்காட்டில ஒரு பெரிய செம்மண் பொற்றை உண்டு. அதுக்கு மேல ஒரே ஒரு பனைமரம். பாத்தாலே தெரியும் யட்சிப் பனைன்னு. அப்டி ஒரு ஊற்றம், அப்படியொரு உயரம். அந்தக் கரும்பனை மேல அவளுக்க தங்கல். யட்சி அன்னைக்கு உலாத்துத நேரம். அவ ராக்குருவிபோல மாறிப் பறந்து குற்றிக்காட்டில்

அலையிறப்ப இவனைப் பாத்திட்டா. ஆசை கேறிப் போச்சு. அப்டியே சரீரம் சிலுத்துப்போனாளாம்.

சிரிப்புச் சத்தம் கேட்டு ஒரு கூட்டுக்காரன் நடுங்கிப்போயி ‘கேளுங்கடா யட்சி சிரிக்கா’ன்னு சொன்னான். மத்தவனுக ‘மடப்பயலா இருக்கியே, அது ராக்குருவில்லே’ன்னு சொல்லி குருவியக் காட்டினாங்க. குருவி அவங்க பின்னாலேயே சிரிச்சிட்டே வருது. அன்னைக்கு ஊர் எல்லைவரை வந்து யட்சி ஒரு மரத்தில தங்கிட்டா. ஊருக்குள்ள அம்மன் இருக்கதனால வர முடியாது அவளால.

மூணாம் நாள் கேசவன் விதைப்பு பாக்க வயலுக்கு போற நேரம் யட்சி எதிரில் வந்தா. தறவாட்டு நாயர் ஸ்திரீ மாதிரி முண்டு [5] ம் கச்சைமுறியும் சரிகை நொறியும் கட்டி காதில தக்கையும் மூக்கில் புல்லாக்கும் சரப்பொளி மாலையும் போட்டுட்டு வாறா. அப்டி ஒரு அழகான பெண்ணை அவன் அதுக்கு முன்னால பாத்ததே இல்லை. அவளைப் பாத்து பேச்சு இல்லாம ஆயி நின்னான். பிறகு உன் பேரு என்னான்னு கேட்டான். அவ வெட்கப்பட்டுக் கிட்டே பேரைச் சொன்னா. காளஸ்தலம்னு அவ வீட்டுப் பேரு. காளன் நாயர்னு அப்பா பேரு. அவ பேரு காளி. இங்க அம்மன் கோவிலிலே நோம்பிருக்க வந்தாளாம். பின்ன என்ன, கதை அப்டித்தான். கேசவன் அவமேல கிறுக்குப் பிடிச்சவனா ஆனான். மறுநாளும் அங்க போயி அவளைப் பாத்தான். என் வீட்டுக்கு வான்னு கூப்பிட்டான். நீங்க என் வீட்டுக்கு வந்து எங்க அப்பா அம்மாகிட்டே பேசிச் சம்மதம் வாங்குங்கன்னு யட்சி சொன்னா. கேசவனும் சரீன்னு சொன்னான்.

யட்சி அவளுக்க வீடு தெக்கன்காட்டுக்கு அந்தால ஒரு பொற்றை மேல உள்ள ஏழுநெலை மாளிகைன்னு சொன்னா. ‘அவருக்கு ஏழுமலைக்கு மாடம்பி ஸ்தானம் உண்டு. அவரை அப்டி சாதாரணமாப் பாக்க முடியாது. பூர்ண அமாவாசை அன்னைக்கு ராத்திரி அவர் குலதெய்வத்துக்குப் பூசை போட வருவார். அப்ப வந்தா அவரைப் பார்க்கலாம்னு சொன்னா. அப்பாவைப் பாத்து சொல்லி அனுமதி வாங்கின பிறகு உங்க வீட்டிலே சொன்னா போறும்’னு சொல்லிப்போட்டா.

இந்த மடையனும் யாரிட்டயும் சொல்லாம, கூட்டுக்காரனுகளையும் கூட்டாம, அம்மாவாசை அன்னைக்கு ராத்திரி அவளுக்கு ஒரு நகையும் அவ அப்பனுக்கு துரைகள் கொண்டுவார ஒர குப்பி பன்னீர்ச் சாராயமும் கொண்டுட்டுப் போனான். போகும்போதே இது நமக்குப் பழக்கமான மலைப்பாதையாக்குமே, இங்கு பொற்றை மேலே ஏழுநிலை மாடம் ஒண்ணும் இல்லையேன்னு நினைச்சிட்டே போனான். ஆனா பாதி வழி போகும்போது ஒரு செம்பக மரத்தடியில அவளைப் பாத்துட்டான். பூத்த கொன்றை மாதிரி அவ அப்டி நின்னுட்டிருக்கா. அழகுன்னா அப்டி ஒரு அழகு. எல்லாத்தையும் மறந்திட்டான். ஏன் ராத்திரியில நிக்கேன்னு கேட்டான். நீங்க வழி தவறப்பிடாதேன்னு நிக்கேன்னு சொன்னா. அப்டியே கண் கலங்கிட்டானாம். அவளைத் தொடப்போனா அவ சிரிச்சிட்டே இப்ப என்ன அவசரம் அப்பாகிட்டே கேளுங்கன்னு சொல்லியிருக்கா...

பொற்றை மேல ஒரு பெரிய ஏழு நிலைமாடம் பந்தமும் வெளக்குமா தகதகன்னு தெரிஞ்சிருக்கு. அதுதான் எனக்கு வீடு, வாங்கன்னு கூட்டீட்டுப் போயிருக்கா. படியெல்லாம் பவுன் போல மின்னுது. எங்க பாத்தாலும் ஐஸ்வரியம். இப்டி ஒரு மாளிகையை யாருமே இதுவரை சொல்லலியேன்னு நினைச்சிருக்கான். மனசில ஒரு சின்ன பதற்றம்.

அவ உள்ள கூட்டீட்டுப் போயி அவளுக்க அப்பனையும் அம்மையையும் காட்டியிருக்கா. ரெண்டாளும் அரண்மனைக்குள்ள பள்ளியறையில உக்காந்திருக்காங்க. அப்பாவும் அம்மையும் நல்ல கறுப்பு. ‘உன் அப்பனும் அம்மையும் ஏன் கறுப்பா இருக்காங்க?’ன்னு கேட்டிருக்கான். ‘கறுப்பு வெறகில சிவப்புத் தீ எரியப்பிடாதா?’ன்னு கேட்டு அவ சிரிச்சாளாம்.

பக்கத்தில போனவன் என்னமோ ஒரு யோசனை தோணி அவ அப்பா அம்மாவைக் கும்பிட சட்டுன்னு கீழே குனிஞ்சிருக்கான். அவ அப்பாவுக்க ரெண்டு காலிலயும் குளம்பு இருந்திருக்கு. அம்மாவுக்கு ரெண்டு காலும் பன்னிக்காலு. அலறிக்கிட்டே சாடி எந்திரிச்சானாம். அப்பா எருமை மாடன். அம்மா வராஹிணியம்மன். ரெண்டு பேரும் சுயரூபத்தில தெரிஞ்சாங்க. மாடனுக்குத் தலையில வளைஞ்ச எருமைக் கொம்பு. பெரிய எருமைக் காது,

எருமைக் கண்ணு. பன்னியம்மனுக்கு மூக்கு நீண்டு காது ரெண்டும் தொங்கி கீழ்த்தாடையில ரெண்டு வெள்ளித் தந்தம்.

கேசவன் அலறிக்கிட்டே திரும்பி ஓடினா எதுக்கால காளபைரவி நின்னுட்டிருக்கா. கரும்பனை வெடலி போல தேகம். வெடலிப் பனை ஓலை மாதிரி கூந்தல். பன்னருவா மாதிரி பல்லு. பயங்கரமாச் சிரிச்சிட்டு அவனைப் பிடிக்க வந்தாளாம். அவன் படியைப் பாத்து ஓடினா அங்க அப்டி ஒண்ணும் இல்ல. அவனிருக்க இடம் நல்ல உச்சிக் கரும்பனைக்க மேல.

அருவி விழுதது மாதிரி சிரிச்சிட்டு யட்சி அவனப் பிடிக்க வருதா. அவளுக்க ரெண்டு கையும் நிலைக்கள்ளி மாதிரி கிளை பிரிஞ்சி நாலாகி எட்டாகி பன்னிரண்டாகி விரிஞ்சிட்டே வருது. ஆனா பக்கத்தில வந்தாலும் பிடிக்க முடியல்ல. சங்கரன்கிட்டே அவனுக்க குடும்பத்தில குழந்தை பிறக்கும்போதே ஜெபிச்சு கெட்டுத தாயத்து இருக்கு இடுப்பில. யட்சி கண்ணிலேர்ந்து தீ பறக்குதாம். அதை அவுத்துப் போடுன்னு நிலைவிளிக்கா. வாயத் திறந்து முதலைப் பல்லைக் காட்டி பயமுறுத்துதா. ‘நீ இந்த பனைமேலேருந்து கீழே போக முடியாது. உன்னை விடமாட்டேன். எத்தனை வருசமானாலும் சரி. மரியாதையா தாயத்தைக் கழட்டு’ங்கிறா. இவன் மாட்டேங்கிறான்.

யட்சி அவனை ஒரு பனைவண்டா மாத்தி ஒரு நுங்குக்கு உள்ள வைச்சிட்டா. அவனுக்கு அது தெரியாது. ஒரு அறைக்குள்ள மாட்டிக்கிட்ட மாதிரித்தான் அவனுக்குத் தெரியுது. தாயத்தை அவுத்திருன்னு அவ. அவுக்க மாட்டேன்னு அவன். ஏழு நாள் தர்க்கம். அவ போடாத வேஷம் இல்ல, காட்டாத நாடகம் இல்ல. குலஸ்திரீ மாதிரி வந்து நின்னு கொஞ்சி மயக்கினா ஒரு நாள். முலையும் இடுப்புமா மோகினியா வந்து கண்ணுகாட்டி பசப்பினா ஒருநாள். மூணாம் நாள் மாலைமாலையா கண்ணீரு விட்டாள். அம்மையா வந்தா, சகோதரியா வந்தா. ஒண்ணும் நடக்கலை. இவன் ஆரு ஆளு? இவனுக்க சீவனுல்லா அதில இருக்கு?

எட்டாம் நாள் அவ வந்து சமாதானம் பேசினா. அவனை அவ விடமாட்டா. அவளால அவனை அடுக்கவும் முடியல்ல. முழுங்க தெரியாத தவளைய கவ்வின பாம்பு. ரெண்டும் சாவணும், அதாக்கும் விதி. என்ன செய்யலாம். அவ சொன்னா ‘ஒரு வழி இருக்கு. நீ என்கூட ஒரு வருஷம் குடும்பம் நடத்தணும்.

ஒரு வருஷமும் என்னை நீ மனசாலயும் உடம்பாலயும் சமாதானம் செய்யணும். ஒரு வருசம் நீ என்னைய சமாதானம் செய்தா உன்னை நான் விட்டிருவேன். நான் உனக்கு அடிமை. உன் சொல்லு கேட்டு நீ இருக்க எடத்தில இருப்பேன். ஒரு தடவை என் மனசு அடங்கல்லன்னா, செய்யல்லன்னா நான் உன்னைக் கீறித் திம்பேன். இதில எள்ளு போலக்கூடக் கள்ளம் சொல்லமாட்டேன். நான் சத்தியம் செய்தேன். நீ எனக்கு அந்த தாயத்தைக் குடுக்கணும், சம்மதமா?'ன்னு கேட்டா.

அவனுக்கும் வேற வழி தெரியல்ல. 'நீ சத்தியம் செய்யி'ன்னான். அவ மூச்சைப் பனம்பாளையில ஊதி தீயுண்டாக்கி அதை மூணு தடவை வலம் வந்து கையடிச்சு சத்தியம் செய்தா. அவன் பதிலுக்கு அந்த தாயத்தை அவ கழுத்தில கெட்டினான். அவ உடனே அழகான பெண்ணா மாறினா. ரெண்டாளும் வெளிப் பார்வைக்கு ரெண்டு வண்டாக்கும். ரெண்டாளும் இருக்க இடம் ஒரு நுங்கு. ஆனா அவன் அறியியது பளிங்கில செய்த மூணு அறையுள்ள அரண்மனையில அவகூட இருக்கதாட்டு.

என்ன இருந்தாலும் அவனுக்கு அவளை மனசுக்குள்ள பிடிக்கும்லா. சினேகிச்ச பொண்ணு. பார்க்க அம்பிடு ஒரு அழகு. ஒரு பெண்ணை சினேகிச்சு கைக்குள்ள வைச்சிருக்கது தோளும் திடமும் உள்ள ஆம்பிளைக்கு ஒரு பெரிய காரியமான்னு அவனுக்கு நெனைப்பு. அவளை எப்டி நெறைய வைக்கிறதுன்னுதான் எப்பவும் மனசில நினைப்பு. அவளுக்கும் அவன் மேல ஆசைல்லா. அவனும் நிறைஞ்ச ஆளு. அப்பம் ரெண்டாளுக்கும் வெளி லோகமே தெரியாது. அவன் கண்ணசைஞ்சா அவளுக்குப் புல்லரிக்கும்னாக்க பாத்துக்க...

நாளுக்கு நாப்பது வட்டம் அவன் அவளுக்க அழகைப் புகழ்ந்து பேசுவான். அவன் சொல்லுத ஒவ்வொரு சொல்லும் அவளை பூமரத்தில காத்து பட்ட மாதிரி சிலுக்க வைக்கும். நாலஞ்சு நாள் கழிஞ்சப்பம் அவனுக்குத் தெரிஞ்சுது அவளுக்க சந்தோஷம் கொஞ்சம் குறையுதுன்னுட்டு. காரணம் அவன் புகழுதது ஒரே மாதிரி இருக்கு. செரீன்னு அதை இன்னும் மாத்திச் சொன்னான். அவளுக்கு மறுபடியும் சந்தோஷம். அடுத்த வாரம் மாத்திச்

சொன்னான். இப்பிடிப் புதிசு புதிசா மாத்திட்டே இருந்தான். மனுஷனுக்கு பெண்ணைப் பத்தி பேசும்ப நாக்கு ஆயிரம், நினைப்பு மூவராயிரம்லா?

ரெண்டு மாசம் கழிஞ்சப்ப புதிசாட்டு சொல்ல ஒண்ணுமில்லன்னு தெரிஞ்சுது. உடனே அவளுக்ககூட கொஞ்சம் செல்லச் சண்டை போட்டான். என்னமாம் ஒண்ணும் ரெண்டும் பேசிச் சண்டை வந்திரும். 'என்னைத் தின்னுடீ, என்னைத் தின்னுடீ நீலி'ன்னு நெஞ்சைத் திறந்துட்டு முன்ன நிப்பான். அவளுக்குத் திங்க முடியுமா? கனி விளையல்ல இல்லியா? அவ மனசுடைஞ்சு போயி அழுவா. 'நான் உங்களுக்கு தாசில்லா, இப்டிச் சொல்லலாமா'ன்னு அழுவா. 'என்ன இருந்தாலும் நீ யட்சி, நான் மனுஷன்'னு இவன் சொல்லுவான். 'நான் இப்பமே யட்சிப் பதவிய விட்டுட்டு வந்திடுதேன்'னு அவ சொல்லுவா. அப்டியே போவும் பாத்துக்கோ. ரெண்டாளு மனசிலயும் சிரங்கு சொரியுத சோகம். அதுக்கு ஒரு புள்ளி இருக்கு. அங்க வந்ததும் இவன் போயி அவகிட்டே விழுவான். ரெண்டாளும் கெட்டிப்பிடிச்சு கொஞ்ச நேரம் கண்ணீரு விடுவாங்க. மனசும் கெடந்து இனிக்கும். பின்ன முத்தமும் கெட்டிப்பிடியும் எல்லாம். அப்டிக் கொஞ்ச நாள்.

ரெண்டுமாசம் கழிஞ்சா இந்த நாடகமே அலுத்துப்போச்சுன்னு அவனுக்குத் தெரிஞ்சுது. சண்டை தொடங்கினா சில சமயம் நீண்டு நீண்டு பெரிய சண்டை மாதிரி ஆயிடும். நாய் பொய்க்கடி கடிக்கும்பம் சில சமயம் செரியான கடிபெட்டு சண்டை தொடங்கிடுமில்லா, அது மாதிரி ஆயிடுமோன்னு பயந்தான். ஒருக்கா அவங்க சண்டை போட்டுட்டு இருக்கும்பம் ஒரு இமைக்கும் நேரத்தில அவமேல யட்சி சொரூபம் வந்து போறதைப் பாத்திட்டான். வாயில வீரப்பல்லு மின்னி மறைஞ்சுது. நடுங்கிட்டான். ஆகா, மாயையில இல்லா சிக்கிக் கெடக்கோம். இவ யட்சியில்லான்னு நினைச்சான். கொடலு கேறி வாயில அடைச்சுப் போட்டுது.

மறுநாள் ஒரு வழி தெரிஞ்சுது. அவகூட இருக்கும்பம் தன்னைச் சின்னப் பிள்ளையா நினைச்சுக்கிட்டான். 'நீ என் அம்மை!' என்னைக் கொல்லணும்னா கொல்லு'னனு சொல்லி முலை நடுவில முகம் பொத்திக்கிட்டான். அவளும் பிள்ளை மாதிரி அணைச்சுக்கிட்டா. பிறவு கொஞ்ச நாளைக்கு அது போறும்னாச்சு. அவ இவனை மகனை மாதிரி வெரட்டுததும் சீராட்டுததும்

இவன் அவளுக்க கிட்டக் கொஞ்சுறதும் மிஞ்சுறதுமா ரெண்டாளுக்கும் காலம் போற போக்கே தெரியல்ல.

கொஞ்ச நாளில அவனுக்கு ஒரு காரியம் தெரிஞ்சுபோச்சு. அம்மைன்னு சொல்லி அவளை அவன் தன்மேல ஏத்தி வைச்சுக்கிட்டான். அவகிட்ட அவன் கோவிச்சுக்கிட முடியாது. என்ன சொன்னாலும் அவ அவனைச் சின்னப் பிள்ளையாட்டு நினைச்சு அதட்டி பிறவு கெட்டிப்பிடிச்சு கொஞ்சி செரியாக்கிப் போடுவா. பிறவு கெவுனிச்சான். அவளுக்கு அவன்கூட இருக்கும்பம் நெனைப்பு வேற போறத. சேந்திரும்கும்ப அவ கண்ணில யட்சிக்க ஒளி வந்திட்டுப் போறத. அய்யோ சங்கதி கைமிஞ்சியில்லாப் போச்சு. இவ யட்சியில்லான்னு அவனுக்கு வெப்ராளமாயிப்போச்சு.

ஒரு நாளைக்கு அவ இவன்கூட இருக்கும்ப ஏங்கியும் மனசு நொந்தும் இருக்கதப் பாத்திட்டான். அவனுக்கு மனசில தீப்பிடிக்கப் போட்டு. அவ இவனுக்க நகத்தை வெட்டிக்கிட்டு இருக்கா. அப்ப ஒரு நகம் கொஞ்சம் பிய்ங்சுபோச்சு. ‘சீ நீலி’ன்னு சீறிட்டு எந்திரிச்சு அவளை தலைமுடியைச் சுத்திப் பிடிச்சு அடிச்சு நொறுக்கிட்டான். அவ அய்யோ அய்யோன்னு அலறித் துடிக்கா. அப்டியே விட்டுட்டு அவன் போய் உக்காந்திட்டான். இருந்து அழுதப்ப அவளுக்க மனசில ஒரு நிறைவு. இவன் போயி அவளைக் கெட்டிப்பிடிச்சு சமாதானம் செய்தான். ரெண்டாளுக்கும் கெட்டிப் பிடிச்சு அழுதப்ப ஒரு கனிஞ்ச சமாதானம். பிறகு இதாக்கும் போக்கு. அடியும் அழுகையும், பிறவு சமாதானமும். மனுஷ மனசுக்க கதை அப்டியாக்கும். என்ன?

அதுக்குப் பிறவு அவன் கண்டுகிட்டான், அவளை ஜெயிக்கிறதுக்கு உள்ள வழி என்னான்னா அவள உதாசீனம் செய்றதுதான்னுட்டு. அவள ஏறிட்டும் பாக்கமாட்டான். அவளைப் பத்தி நினைக்கமாட்டான். அவகூட அவனே போயி பேசமாட்டான். பேசினாலும் ஒத்த வரி, ரெட்ட வரி. அவளுக்கு அவனுக்க உதாசீனத்தைப் பொறுக்க முடியல்ல. பூலோக சுந்தரியா வந்து நிப்பா. கூப்பிட்டுக் கூப்பிட்டுக் கொஞ்சிப் பேசுவா. கண்ணீரு விட்டுட்டு அவனுக்காட்டுக் காத்து நிப்பா. அவ நிக்கது அவனுக்குத் தெரியும். செரி, இதுதான் இவளை விடாம இருக்கதுக்கு வழின்னு விடைப்பா இருப்பான். அவ ஏங்கி ஏங்கி அவனுக்க கிட்டப் பேசும்ப சில சமயம் ஒரு புன்னகை காட்டுவான். ஒரு நல்ல

சொல்லு சொல்லுவான். அப்டியே அவ பூத்துப்போவா. அவன் அவளைக் கும்பிட்டுக் கொண்டாடின நாளில்கூட அவ அப்டிப் பூத்துப் பொலிஞ்சதில்ல.

இப்டி முந்நூறு நாளாச்சு. எல்லாம் செரியாப் போறப்ப காலம் போற போக்கு கண்ணில் விழாதுல்லா? அதாக்குமே மனுஷ மனசுக்க ரீதி? நுங்குக்கு உள்ள அவன் ஒரு அறையில இருப்பான். அவ ஒரு அறையில இருப்பா. ரெண்டாளும் சந்திக்கிறது இன்னொரு அறையில. ஒரு நாளைக்கு இந்த மாதிரி அவனுக்க அறையிலேருந்து மத்த அறைக்குப் போறான். அவ வரல்ல. மத்த நாளில் அவனுக்க சத்தம் கேட்டாச் சாடி வந்துபோடுவா. இவன் நின்னான், நடந்தான், வரல்ல. செரி, இன்னைக்கு அவளுக்கு ஒரு நல்ல நாளாட்டு இருக்கட்டும்னு ஆசையோட அவ அறைக்குள்ள போனான்.

அறையில இருட்டு. அவ ஓரமா கால் முட்டில முகம் சேத்து உக்காந்துட்டு இருக்கா. தலைமுடி தரையெல்லாம் விரிஞ்சு நிறைஞ்சிருக்கு. வகிடு பவுன் கோடு மாதிரி தெரியுது. அவ நிழலு சுவரில் விழுந்து நிக்குது. அடுக்க போயி அவன் ‘காளீ’ன்னு கனிஞ்சு கூப்பிட்டான். அவ தலை நிமுத்தல்ல. மறுபடியும் கூப்பிட்டான். மெள்ளமாத் தொட்டுக் கூப்பிட்டான். அவ தலையை நிமுத்தினா. முகமில்ல. மண்டை ஓடு வெள்ளென சிரிச்சிட்டிருக்கு. கைகால் எல்லாம் வெள்ளெலும்பு. பின்னால ஒரு பயங்கரச் சிரிப்பு. திரும்பினா அவளுக்க நிழலு காளபைரவியா நின்னுட்டிருக்கு. ‘நாந்தான் நிஜம். அது என் நிழலு’ன்னு சொல்லி சிரிச்சுட்டுக் கை விரிச்சு அவனைப் பிடிக்க வருது. ‘எனக்கு இப்ப நிறைவில்ல. அடக்கு. உன்னால முடிஞ்சா என்ன அடக்கு’ன்னு சொல்லுதா.

அவன் ‘என்னைய விட்டுரு’ன்னு அழுதான். ‘இனி என்ன மிச்சம்? இனி என்ன மிச்சம்?’னாக்கும் அவ கேக்குதது. அவனுக்குத் தெரிஞ்சுபோட்டு இனி ஒண்ணும் மிச்சமில்ல. அம்பிடுதான்னுட்டு.

கெதிகெட்டு அவன் அலறுதான், தப்பி ஓடுதான். நுங்குக்குள்ள என்னத்த ஓட? சுத்திச் சுத்தி அவ முன்னாலத்தானே வரணும்? அவனை ஓட விட்டுப் பிடிக்கதில அவளுக்கும் ஒரு சந்தோஷம். எலியப் பூனை விட்டுப் பிடிச்சுத்தான் திங்கும். ‘குடுடா! உனக்க நெஞ்சைக் குடுடா’ன்னு கேக்குறா. இடி மாதிரிச் சத்தம் போடுதா. கருமேகம் மாதிரி சுத்திப்போட்டா. மின்னல் மாதிரி சிரிக்கா.

அவ எப்டிப்பட்டவன்னு அப்பத்தான் தெரியுது. அவளை அப்பபிடிச்சு நிப்பாட்ட பிரம்மா, விஷ்ணு, சிவனுக்கும் முடியாது.

அவன் களைச்சுப் போயி காலு தளந்து கீழெ விழுந்ததும் அவன் தொடை மேல காலைத் தூக்கி வைச்சு சவிட்டிப் பிடிச்சு கையை நீட்டினா. கையில ஓரோரு நகமும் ஒரு கூர்மையான கத்தி. அப்டியே நெஞ்சைப் பிளந்து அவனுக்க நெஞ்சுக் குருத்த பிய்ச்சு எடுத்து வாழைப்பழம் திங்குத மாதிரி சாற உறிஞ்சி உறிஞ்சித் திங்குதா அவ. அதை அவன் பாத்தான். அவ அவனுக்க நெஞ்சைப் பிளந்தப்ப அவனுக்கு அப்படி ஒரு சொகம். கண்ணெல்லாம் சொக்குது. அவ அவன் இருதயத்தத் திங்குறப்ப அவனுக்கு குட்டி முல குடிக்கிறப்ப அம்மைக்கு வாற மாதிரி ஒரு சொகம்.

அவனுக்க எல்லும் தலையோடும் யட்சிப்பனையடியில கெடக்குதத குறெ நாள் கழிஞ்சுத்தான் கண்டாவ. அவனுக்க துணியை வைச்சாக்கும் கண்டுபிடிச்சது. அதையெல்லாம் பொறுக்கி எடுத்துக் கொண்டுவந்து கர்மங்கள் செய்து எரிச்சாங்க.

ஆத்தோட்டத்தில போட்டாக்க அவனுக்க எல்லு என்ன செய்தாலும் தண்ணியில முங்கல்ல. சருகுசுள்ளி மாதிரி மெதக்கும். அதாக்கும் யட்சி தின்ன எல்லுக்க குணம். ஆத்மாவ உறிஞ்சிப் போடமாட்டாளா அவ? கரகாணாக் கடலில் போனாலும் ஆழத்தைக் காண முடியாம அது அலையில் தவிக்கும்லா? ஏது?

பண்டு முதல் கேட்ட கதையாக்கும். அந்தக் காலத்தில் இப்டி ஒரே கதைக. அது போட்டு. வெத்திலயுண்டா?

*

ஆசாரி மீண்டும் வெற்றிலை போட ஆரம்பித்தார்.

‘இப்பம் என்ன சட்டுன்னு ஒரு யட்சிக் கதை நினைப்பு?’

‘இல்ல மக்கா... இந்த ஏழுநெலைப் பந்தல் கண்டப்ப எனக்கு யட்சிக்க ஏழுநிலை மாடமாக்கும் நினைப்பு வந்தது. ஒரு மடத்தனம் போட்டு...’

‘நல்ல நினைப்பு, அமங்கலமா’ என்றேன்.

‘செரி, விடுடே, கெழட்டு சென்மமுல்லா...’

நான் கொல்லத்தி ஆச்சியைப் பற்றி அன்று காலை ஊர்க்காரன் ஒருவன் சொன்னதைப் பற்றி கேட்கலாம் என்று எண்ணினேன். கிழவரைப் புண்படுத்த விரும்பாததனால் அடக்கிக்கொண்டேன்.

ஓம்சக்தி, 2005

# 7. இரண்டாவது பெண்

பு ளியமரத்தடியில் சிவப்புச் சேலை கொடிபோலப் படபடத்துக் கை காட்டியது. லாரியை மெல்ல வேகம் குறைத்தேன். ஹெட்லைட் ஒளியில் அவளைப் பார்த்தேன். இளம் பெண்தான். அருகே குந்தி அமர்ந்த இன்னொருத்தி. எஞ்சினை நிறுத்திவிட்டு சாவியை எடுத்து உள்ளே அணிந்திருக்கும் காக்கிக் கால் சட்டைப் பைக்குள் போட்டேன். ஒரு பீடியைப் பற்ற வைத்தபடி எழுந்தேன்.

பெங்களூரில் சேர்ந்த புதிய கிளீனர் சங்கரபாண்டி 'அண்ணாச்சி... ஒதுக்குப் பொறமாட்டுல்லா இருக்கு?' என்றான். 'ம்' என்றபடி கீழே குதித்தேன். தரையில் கால் பட்டதும் சற்று நிலம் ஆடியது. நான் பிரேக்கையும் ஆக்ஸிலேட்டரையும் மிதிக்க ஆரம்பித்து தொடர்ச்சியாக இருபது மணி நேரம் ஆகிவிட்டது. கால்களை உதறியபடி நெருங்கினேன்.

'என்னட்டீ' என்றேன்.

'அண்ணாச்சி திருவேலியா?' என்றாள். கருமையான, உயரமான பெண். நல்ல எருமைக் கண்கள். ஆண்களுடையதுபோலத் திரண்ட புஜங்கள். வலிமையான தாடையும் தெளிவான பெரிய பற்களுமாக அம்மன் சிலை போல இருந்தாள்.

'நான் அதுக்கும் தெக்க. ஆரல்வாய்மொழிக்கு அந்தப் பக்கம். நாகர்கோவில்... கேள்விப்பட்டிருக்கியா?'

'பின்ன? இந்த வழியா போகாத ஆளுங்க உண்டா? சும்மா பாத்தாலே தெரிஞ்சிருமே.... வாங்க.'

'உம்பேரு என்னட்டி?'

‘மாதம்மா. எதுனா சாப்பிட்டிங்களா?’

‘அது கெடக்கே... ஏட்டி நீ சரக்கு ஏதும் வைச்சிருக்கியா?’

‘ஆ இருக்கு சரக்கு’ என்று சிரித்தாள்.

‘சேத்து வாங்கிக்க. இப்பல்லாம் உன்ன மாதிரி குஜிலிய, எல்லாமே வைச்சிருக்காளுக... அதாரு அம்மாவா?’

‘அத்தை.’

ஒரு கார் போன ஒளியில் அந்தக் கிழவியின் முகத்தைப் பார்த்தேன். படுபயங்கரமாக இருந்தது.

‘அம்மைக்கு என்னட்டி சீக்கு?’

‘ஸ்டவ்வு வெடிச்சிட்டுது... மூணு முத்திர ரம்மு குவாட்டர் பாட்டில் இருக்கு...’

‘சேத்து ரேட்டு சொல்லு.’

‘ரேட்டு என்ன ரேடடு, எல்லாம் நாமதானே... போட்டுக் குடுங்க...’ என்று சொல்லிச் சிரித்தாள்.

எனக்கு இந்த மாதிரி தாஜா செய்யும் பார்ட்டிகளைத் தெரியும். கடைசியில் வேறு முகம் வெளியே வரும். உறையிலிருந்து கத்தி மாதிரி.

‘கொஞ்சாத, கேட்டியா... மரியாதையா ரேட்டைச் சொல்லு...’ என்று அவள் புட்டத்தில் அடித்தேன்.

‘ஆசையா இருந்தா சும்மானாக்கூட வாங்க... இப்ப என்னா?’

கிழவி திடீரென கடூரமான ஆண்பிள்ளைக் குரலில் ‘இன்னாடீ கட்டினவ கெட்டான்னு கொஞ்சிக்கினு நிக்கிறே, துட்டைச் சொல்லி வாங்காம? கம்மனாட்டி’ என்றாள்.

‘பாத்தியா, நல்ல ஆளு வைச்சிருக்கே...’ என்றேன்.

‘அத்தை அந்த மாதிரி... நீங்க கண்டுக்காதீங்க.’

‘நீ என்ன ரேட்டு கேக்கிறே ஆயா?’ என்றேன்.

‘ஆயா ஒன்... எத்தனை வாட்டி இருப்பே?’

‘ஒங்கிட்டே சொல்லணுமா? வந்து ஒக்காந்து கணக்குப் போடு. மூஞ்சைப் பாரு...’ பீடியைத் துப்பிவிட்டு கைகளை மேலே தூக்கிச் சோம்பல் முறித்தேன்.

‘ஒரு வாட்டிக்கு அம்பது. குவாட்டருக்குத் தனியா. எனக்கு பத்து மாமூலு... ரைட்டா?’

‘செரி, எறங்கியாச்சு. ரேட்டு பேசின எவனாம் என்னைக்காம் வேண்டாம்னு வண்டி ஏறியிருப்பானா? உங்க காட்டு மழெ... ஏலெ பாண்டி, ரேடியேட்டருக்குத் தண்ணி விட்டு வைலே.’

‘ஒறை போடணும். அது கண்டிசனா சொல்லியாச்சு...’

நான் ஒன்றும் சொல்லவில்லை.

சாலையோரம் உடைமுள் அடர்ந்த காடு. அதனூடாக ஒரு ஒற்றையடிப் பாதை. அவள் என் கையைப் பற்றி ‘வாங்க’ என்று கூட்டிச் சென்றாள். நாள் அவளைச் சீண்ட, ‘த ச்சும்மா’ என்று பெண்டாட்டிபோல அதட்டிக் கொஞ்சினாள்.

அவளது தலைமயிரை அப்போதுதான் கவனித்தேன். ஹோசூர், தர்மபுரி வட்டாரத்திலேயே அழகான நீண்ட தலைமயிர் கிடையாது. சாணி போல வறண்டு மெலிந்து கிடக்கும். தண்ணீர் வாகு அப்படி. ஆனால் இது மலைப்பாம்பு கனத்துக்கு இடை வரை தொங்கியது.

எனக்கு மனம் படபடத்து, சிறிது மூச்சுத் திணறுவதுபோல இருந்தது.

புதர்கள் மண்டிய மண் அப்படியே மேலேறி ஒரு மலையாகியது. மலையெங்கும் சீரான இடைவெளியுடன் கருவேல மரங்கள் குடைகள்போல நின்றன. பன்னிரண்டாம் நிலவு எழுந்து மலை விளிம்பைத் தெளிவாகக் காட்டி நின்றது. மேகமில்லா தீப்பெட்டி நிற வானம். கருவேலங் குடைகளின் நிழல்களைக் காண முடிந்தது. இரவின் ரீங்காரம். காற்று அதிகமாக இல்லை.

ஒரு மரத்தடியில் பாயைச் சுருட்டி வைத்திருந்தாள்.

‘திறந்த வெளியா இருக்கே’ என்றேன்.

‘இங்க யாரும் வரமாட்டாங்க... காடு...’

அமர்ந்து ஒரு பீடியைப் பற்றவைத்தேன்.

‘அய, அந்தக் கொள்ளிய அத்தாண்ட போடு. இப்ப இன்னாத்துக்கு அது?’ என்றாள்.

‘சும்மா ஒரு ரிலாக்ஸா...’ என்று புகை விட்டேன். ‘ஏன், பீடிப் பொகை பிடிக்காதா?’

‘பிடிக்காம என்ன? ஆனா அது நெஞ்சை எரிச்சுப் போடும்னாங்க...’

‘என்னது, பொண்டாட்டி மாதிரில்லா பேசுறே?’

‘ஊட்ல யாரெல்லாம் இருக்காங்க?’

‘எட்டு பொண்டாட்டி, நாப்பத்தெட்டு புள்ளைங்க... போறுமா... என்னட்டி கேள்வில்லாம் கேட்டுட்டு?’

‘நீ பீடி பத்த வைச்சப்ப சும்மா கொஞ்ச நாழி பேசுவேன்னு தோணிச்சு... அப்டியும் செல பேரு இருக்காங்களே...’

‘ரைட்டுதான். சொல்லப்போனா பேச்சுதான் முக்கியமாத் தோணுது இப்பல்லாம்... வண்டியிலெ பேசுறதே இல்லியா... தாடை இறுகிப் போயிடுது...’

‘ரம் எடுக்கட்டா?’

‘கொண்டா.’

இடையிலிருந்து டிரிப்பிள் எக்ஸ் ரம் புட்டியை எடுத்து மூடியைத் திருகித் திறந்தாள்.

‘உன் தலைமுடி ரொம்ப நீளம்’ என்றேன். ‘பாக்கவே பயமாருக்கு பாம்பு மாதிரி.’

ஒரு லாரி செல்ல அவள் கண்களில் ஒளி மின்னி அணைந்தது. சிரித்தபடி ‘மச்சானுக்குப் பிடிச்சிருக்குபோல’ என்றாள்.

‘ஆமா, ஆனா எக்ஸ்டிரா ரூபா தாற அளவுக்குப் பிடிக்கல்ல’ என்றேன்.

‘ஆ... அப்டி போடு அருவாளே...’ என்று சிரித்தாள்.

ரம்மை ஒரு பழைய பிஸ்லேரி புட்டிக்குள் கால் பங்கு தண்ணீரில் விட்டுக் குலுக்கி என் கையில் தந்தாள். அப்படியே மூன்று மிடறு விழுங்கினேன்.

‘நீ ஒரு வா ஊத்துறியா?’

‘அய்யோடி.’

‘ஏன் பெரிய பத்தினிதான்... இந்தா...’

‘வேண்டாம்... நான் எப்பனாச்சும் பீர்தான் சாப்புடறது...’

‘கிழவி?’

‘அவ ஊத்துவா நாட்டுச் சரக்கு...’

‘அப்ப இது கஸ்டமர் சர்வீஸ்னு சொல்லு...’ நான் மேலும் குடித்தேன். ஒரு சில ஏப்பங்களுக்குப் பிறகு மெல்ல தளர்த்திக் கொண்டேன். மலையையே பார்த்தேன். நிலவொளியில் அதன் விரிந்த சரிவு கவர்ச்சிகரமான ஒரு பீதியை அளித்தது.

‘நீ அந்த மலைமேலே ஏறியிருக்கியா?’

‘ம்.’

‘எப்ப?’

‘என் வீடு அந்த மலை மேலத்தானே.’

‘அங்கயா? அங்கல்லாம் வீடு இருக்கா என்ன?’ என்றேன் ஆச்சரியத்துடன். அடுக்கடுக்காக மலைகளே தெரிந்தன.

‘ஏன் காட்டில குடியிருந்தா என்ன?’

லாரி ஒளியில் அவளது முகம் தீபாராதனை காட்டும்போது அம்மன் முகம் தெரிவதுபோலச் சிவப்பாக தெரிந்து அணைந்தது. அழகான பெண்தான். ஆனால் ஒரு முரட்டுத்தனமான, மிருகத்தனமான அழகு.

‘அங்க கிராமம் இருக்கா?’ என்றேன்.

‘ஒண்ணு ரெண்டு வீடு இருக்கு...’

‘என் வீடு மலையடிவாரத்திலதான்’ என்றேன். ‘வீடுன்னா இப்ப வீடு மட்டும்தான் இருக்கு… அம்மா அப்பா செத்திட்டாங்க. பெண்டாட்டியும் இப்ப இல்ல.’

‘இல்லைன்னா?’

‘செத்துட்டா.’

‘அடாடா, பிள்ளைய இல்லியா?’

‘இல்ல. கல்யாணமாயி மூணு மாசம்தான். அதுக்குள்ள…’

‘எப்டி?’

நான் நன்றாக நீட்டிப் படுத்துக்கொண்டேன். பெருமூச்சு விட்டேன். அவள் என்னருகே அமர்ந்து என் தலையை வருடினாள். ‘சொல்லணும்னு தோணினாச் சொல்லு… சும்மா காட்டுல ஒக்காந்திட்டிருக்கிறதுக்குக் கேக்கிறேனே…’

‘உனக்குப் பேயில நம்பிக்கை உண்டா?’

‘நானே பேய்தானே?’ என்று சிரித்தாள். லாரி ஒளியில் அவள் வாய்க்குள் சிவப்பு தெரிந்து அணைந்தது.

‘இது வெளையாட்டில… உண்மை. உண்மையிலே உனக்கு நம்பிக்கை உண்டா?’

‘ஆ, இன்னாத்த சொல்றது? நான் அத்தப் பாத்ததில்லை. இந்தக் காட்டிலதான் கருவாயி கன்னியம்மன் இருக்கான்னு சொல்லுவாங்க. அதனால பகலிலகூட யாரும் வாரதில்ல. நான் இதுக்குள்ள அலையாத எடமில்ல. ஒரு பேயும் எனக்கு முன்னாடி வந்தது இல்ல.’

நான் கண்களை மூடிக்கொண்டு இமைகளுக்குள் இருளைப் பார்த்தேன்.

*

என் பெண்டாட்டி பேரு பத்மம். கேரளத்தில் வெள்ளறடைன்னு ஒரு ஊரு அவளுக்கு. அவளுக்க தந்தையானுக்கு மரமறுக்கிற வேலை. பாத்து இஷ்டமாகிக் கூட்டிட்டு வந்தேன். பாக்க சினிமாக்காரி மாதிரி இருப்பா. ஊருக்குள்ள அவ வந்தப்ப பாதி பேரு திறந்த வாய மூடாம

நின்னுப்போட்டாங்க. எனக்கானா உலகத்தை ஜெயிச்ச சந்தோஷம். அவளுக்கு உன்னை மாதிரி நல்ல தலைமுடி. கருப்பா நெறைஞ்சு கிடைக்கும்.

அப்ப எனக்கு யாருமில்லை. அம்மையும் அப்பனும் போயிச் சேந்து எட்டு வருஷம் ஆச்சு. கிளீனரா அலைஞ்சு கஷ்டப்பட்டு லைஸன்ஸ் எடுத்து, கொல்லம், செங்கல்பட்டுன்ன ஓடீட்டு இருந்த நேரம். ஒரு ஆறு வருசம், போடாத ஆட்டமில்ல. செய்யாத்த ஒண்ணும் இல்ல. ஒருக்க செரி, அதெல்லாம் என்னத்துக்கு இப்ப? மனுஷன் துணிஞ்சா சிங்கம்புலி தோத்துப்போவும். அப்படிப்பட்ட ஒரு காலம். பிறவுதான் இவளைப் பாத்தது. ரோட்டில் விழுந்து கெடந்த குடிகாரத் தவப்பனத் தூக்க முடியாம காட்டு வழியில் நின்று அழுதா. தூக்கி லாரில போட்டு வீட்டுக்குக் கொண்டுபோயிச் சேத்தேன். அப்டியே சினேகமாயிப் போச்சு. அவளைப் பாத்தபிறவு வேற ஒருத்தியத் தல தூக்கிப் பாத்தது இல்ல.

அவ தலைமுடியும் கொஞ்சம் தூக்கின உதடும் என்னை அப்டியே பைத்தியமா வச்சிருந்தது. வீட்டை நல்லா எடுத்துக் கட்டி, சட்டி பானை வாங்கி ஒரே உற்சாகம்தான். ஆனா தாலியைக் கெட்டிக்கொண்டு வந்த அன்னைக்கு எனக்கு ஒரு காய்ச்சலு. அடிச்சுப் படுக்க வைச்சுப் போட்டுது ஒரு வாரம். என்னை கண்ணுக்கு மணிபோலப் பாத்துக்கிட்டா. அப்பம்தான் எனக்குத் தெரிஞ்சது, பெண் துணைன்னா என்னான்னு...

எட்டாம் நாளுக்கு சாயங்காலம் வீட்டில சுடுதண்ணி வைச்சுக் குளிச்சிட்டு அவளையும் கூட்டீட்டு ஒரு நடை சாஸ்தா கோவிலுக்குப் போய்ட்டு வந்தோம். மீன் வாங்கிக் குழம்பு வைச்சிருந்தா. நல்ல சாப்பாடு. பிறகு சிம்னியைத் தாழ்த்தி வைச்சிட்டு பாயைப் போட்டுத் தலைகாணியைப் போட்டா. நான் போயி இருந்ததும் கிட்ட வந்து நின்னா. நல்லா வேர்த்துட்டு நிக்கா. வேர்வை மணம் வருது. அவ வேர்வைக்கு ஈரமான கோடிவேட்டி மனம் உண்டு கேட்டியா? வெளியே தென்னை மரம் ஓலை அசையுத சத்தம். வான்னு கூப்பிட்டா, சும்மா காத்து மாதிரி குரல் வருது. மனசு அப்டிக் கெடந்து அடிச்சுது. அதெல்லாம் எனக்கு இப்ப நினைச்சாச் சிரிப்பா இருக்கு கேட்டியா? நான் காணாத்ததா? மனுஷன் மனசை என்ன சொல்ல? என்னால கையைத் தூக்க முடியல்ல.

அவளே வந்து சேந்து ஒக்காந்தா. பிடிச்சுப் பக்கத்தில உக்கார வைச்சேன். ஒண்ணும் ரெண்டும் பேசி சிரிச்சு தொட்டு அறிஞ்சு இருந்தோம்.

கொஞ்சம் நெருங்கின பிறகு எனக்கு படபடப்பு குறைஞ்சுது. அவ நிறைமேனியா இருந்தப்பப் பாத்தா அவ உடம்பு இறுக்கமா விறைப்பா இருக்கு. வேர்த்துக் கொட்டுது. உதடி துடிக்குது. என்னவோ மந்திரம் சொல்லுறமாதிரி சத்தமில்லாமச் சொல்லுதா. சரி, புதிய ஆளுல்லா, பயப்படுதான்னு நான் விளக்கை அணைச்சேன். 'பயப்படாதே பயப்படாதே'ன்னு சொல்லிட்டு நெருங்கினேன். எனக்கு அப்டி ஒரு படபடப்பு. மூச்சுகூட விட முடியல்ல. அவளுக்க மூச்சு எம் மேல வீசுது.

திடீர்னு ஒரு குரல். அவதான், ஆனா அவ குரல் இல்ல. நல்ல கனத்த ஆம்பிளைக் குரல். ஒரு கெட்ட வார்த்தை. 'ஆரு?'ன்னு கூவிட்டு சாடி எந்திரிச்சேன். விளக்கைக் கொளுத்த தீப்பெட்டியை எடுக்கப் போனேன். தீப்பெட்டி கிடைக்காம போட்டு துழாவுதேன். அந்தக் குரல் 'வாடா வாடா மக்கா' அப்டீன்னு கூப்பிட்டுது. அதில அப்டி ஒரு ஆசை. என்னமோ ஒரு மிருகம் மாதிரி. அவ என்னை ஏறிப் பிடிக்கா. கை எப்டி இருக்கு தெரியுமா? உருக்கு மாதிரி கனமான கை. 'வாடா வாடா வாடா' அப்டீன்னு அவ கெடந்து நெளியுதா. கடகடன்னு ஒரு பயங்கரமான சிரிப்பும் உண்டு.

தீப்பெட்டியை எடுத்து உரசிட்டேன். வெளிச்சத்தில பாத்தா ஒண்ணுமில்லை. வெளிச்சத்துக்கு முழங்கையை வைச்சுக் கண்ணை மூடீட்டு பாவமான பெண்ணாக் கெடக்கா. சிமினி வெளக்கைக் கொளுத்தினேன். 'என்ன? என்னட்டி ஆச்சு உனக்கு?'ன்னு கேட்டேன். 'ஒண்ணுமில்லியே? உங்களுக்கு என்ன ஆச்சு?'ண்ணு அவ கேக்கா. எந்திரிச்சு உக்காந்து அவகிட்டே பேசினேன். அவளுக்கு ஒண்ணுமே தெரியல்ல. எனக்கும் புரியல்ல. கனவு கண்டேனான்னு தோணிப் போச்சு. கஞ்சா அடிச்சா அப்டிப் பல எண்ணமும் வரும். எனக்கும் வந்திருக்கு. ஆனா... எனக்கு காய்ச்சல் இருக்குன்னு சொல்லிப் படுத்திட்டேன். ஆனா விளக்கை அணைக்கல்ல.

மறுநாளைக்கு எனக்கு ஒரே குழப்பம். காய்ச்சல் சரியா விடாம இருந்ததினால எனக்கு அப்டித் தோணியிருக்குமான்னு சந்தேகம். அன்னைக்கு ஒரு காரியம் செய்தேன். நேராப் போயி ஒரு நாலுகட்டை பேட்டரி லைட் வாங்கி

வைச்சுக்கிட்டேன். அன்னைக்கெல்லாம் அவகிட்டே பேசுறப்ப ரொம்பக் கவனமா அவளைப் பாத்திட்டே இருந்தேன். அவளுக்கு ஒண்ணுமே தெரியாது. கொஞ்சம் நடிப்பு இருந்தாக்கூட கண்ணில தெரிஞ்சிருக்குமே. அது மட்டுமில்ல, அவளுக்கு எங்கிட்டதான் என்னமோ பிரச்சினைங்கிற மாதிரி நினைப்பும் இருக்கு. செரி, அது பரவாயில்லைங்கிற மாதிரி பேசுறா.

அன்னைக்கு ராத்திரி நல்லாப் பேசினா. நான் வேணும்னே சீக்கிரமா விளக்கை அணைச்சேன். கவனிச்சிட்டே இருந்தேன். அவ அவளுக்க குரலில்தான் கொஞ்சிட்டிருக்கா. நான் நெருங்கினேன். அவ இருட்டுக்குள்ள என்கிட்டே பேசினா. முனகினா. அப்ப மெல்ல அந்தக் குரல். கொரவளையைப் பிடிச்சா கன்னுக்குட்டி என்ன சத்தம் போடும், அது மாதிரி ஒரு சத்தம். நான் அப்டியே குளுந்து வெறைச்சுப் போயிட்டேன். அவ ‘வாடா வாடா’ங்கிறா. நான் சட்டுன்னு விலகி தேடினா டார்ச் இல்ல. பதறிப்போயி அங்க இங்கன்னு துழாவி எடுத்து வெளிச்சத்தை அடிச்சேன். அவ பாயில இல்ல.

கை கெடந்து துள்ள வெளிச்சம் சாடுது. ரூம் முழுக்க அடிச்சுப் பாத்தேன். வெளிச்சம் தாவிப் போயி அவமேல பட்டா ஓரமா முட்டுல முகம் சேத்து இருக்கா. எப்ப அங்க போனா? ‘பத்மம் பத்மம்’னு கூப்பிட்டேன். அப்ப அவ ஒரு மூச்சு விட்டா. தகர டப்பாவைத் தரையில போட்டு இழுக்கிற மாதிரி மூச்சுச் சத்தம். கால் நடுங்க டார்ச்சை அடிச்சிட்டே பக்கத்தில போனேன். வெளிச்சம் ஆடுது. அது பத்மம் இல்லை. வேற யாரோ ஒரு நாப்பது வயசுப் பொம்பிளை.

சத்தமில்லாம அலறிட்டே வெளியே ஓடி வந்திட்டேன். முற்றத்தில் வந்து நின்னா, கையும் காலும் நடுங்குது. மூத்திரம் போயிருக்கேன்னு தெரியுது. ‘சாஸ்தாவே சாஸ்தாவே’ன்னு நெஞ்சில் கையை வைச்சு அழுதேன். பக்கத்து வீட்டு வராந்தாவில் போயிப் படுத்திட்டேன். படுக்கவும் முடியல்ல. எந்திரிச்சு உக்காந்தேன். மறுபடியும் படுத்தேன். நல்ல தடிச்ச பொம்பிளை, பெரிய ஒதடு. சப்பை மூக்கு. அம்மைத் தழும்பு. எங்கேயோ பாத்த மொகம்.

விடியக் காலையில கௌம்பி நேரா ஆத்துக்குப் போயிக் குளிச்சிட்டு சாஸ்தா கோயிலுக்குப் போனேன். தூக்கமில்லாம கொண்டு சொழட்டுது எனக்கு. ஆனா கர்ப்பூர ஆரத்தியில சாஸ்தாவைப் பாத்தப்ப ஒரு தெம்பு. எல்லாம் சரியாப் போயிரும்னு தோணுது. எங்க ஊரில் அதுக்கு முன்னால நாலஞ்சு கேஸுக்குப்

பேய் பிடிச்சிருக்கு. எல்லாம் செரியாகி நல்லாத்தான் இருக்காங்க. கொஞ்சம் விடிஞ்சதும் வீட்டுக்கு வந்தேன். வெயிலடிச்சா நம்ம மனசு வேற. அவ குளிச்சு ஈரத் தலைமுடியை நுனிமுடிச்சு போட்டுட்டு கெணத்துத் தண்ணி பிடிச்சிட்டு வாரா. என்னைப் பாத்ததும் கண்ணீரு விட்டிட்டா. தலை குனிஞ்சு உள்ள போனா.

நான் உள்ள போயி வேட்டியை மாத்தினேன். அவளைப் பாக்கிறப்ப நடந்தது எல்லாம் ஒரு கனவான்னு தோணிட்டுது. கருப்பட்டி காப்பி கொண்டுவந்து தந்தா. வாங்கிக் குடிச்சேன். அவகிட்டே ஒண்ணுமே பேசல்ல. திண்ணையில போயி இருந்தேன். பின்னால வந்து நின்னு மெல்ல ‘ஒண்ணும் அன்னியருக்குத் தெரிய வேண்டாம்... வீட்டில இருங்க’ன்னு சொன்னா.

நான் மெல்ல ‘ஒரு மந்திரவாதியைப் பாக்கணும்’னு சொன்னேன். ‘டாக்டரைப் பாக்கலாம்’னு அவ சொன்னா. ‘செரி, ரெண்டாளையும் பாப்பம்’னு நான் சொன்னேன். முதலில் மந்திரவாதிகிட்டே போனோம். மேலைசுனைக்கரை கருணாகரக் கணியார். அவர் இவளைப் பாத்ததுமே தெரிஞ்சுக்கிட்டார். என்னைத் தனியா கூட்டீட்டுப் போயி சொன்னார். அவமேல இருக்கது ஒரு பழைய பேய். தமிழத்திதான். இவ வந்த அன்னைக்குப் பிரதோஷம். அது தெரியாம நல்ல மத்தியான நேரத்தில இவ தனியாக் குளத்தில குளிக்கப் போயிருக்கா. குளப்படியில இருக்கிற பேயில ஒண்ணு மேல ஏறிட்டுது. என்னைக்கோ குளத்தில குதிச்சுச் செத்தவ. அடங்காமச் செத்தவளா இருக்கணும். ‘கெவனமா இருக்கணும். அவ உன்னை அணைஞ்சா உன் உசிருக்கு உத்தரவாதம் இல்லை’ன்னாரு கணியாரு.

டாக்டர் அவளுக்கு என்னமோ டிப்ரஷன்னு சொன்னார். மனது அதும் இதும் நினைச்சுக் கனம் கூடுறப்ப அப்படி ஆகுமாம். அப்பன் அம்மையை விட்டு என்கூட ஓடிவந்ததுனால அப்டி ஆயிருக்கலாமாம். இப்பிடி செஞ்சிட்டோமோன்னு நினைச்சிருப்பாளாம். அதனால என்கூட இருக்கது தப்பூன்னு தோணி இப்டி ஒரு எளக்கம் வந்திட்டதாம். சில சமயம் அவளுக்குச் சின்ன வயசிலேயே அப்டி ஒரு சிக்கல் இருக்க வாய்ப்பு இருக்குன்னு சொன்னார். மென்மையா, அன்பா, பொறுமையா இருன்னார். நானும் கொஞ்சம்

அவசரப்பட்டுட்டேனாம். செரீன்னு அவர் குடுத்த மாத்திரையையும் கொண்டுட்டு வந்தோம்.

கொஞ்ச நாள் விலகி இருந்தோம். அப்ப ஒரு பிரச்சினையும் இல்லை. ஆட்டுக்குட்டி போல சாதுவான பெண்ணாக்கும். மனசறிஞ்சு நடப்பா. ஆனா அவளை என்னால தொட முடியல்ல. அவ பக்கத்தில வந்தாலே அன்னைக்கு ராத்திரி பாத்த முகம் நினைப்புக்கு வந்திடும். அது யாரு? எங்க பாத்தது? ஒண்ணும் தெரியல்ல. அந்தப் பொம்பிளையைப் பத்தி வேற விதமாச் சொல்லி அவகிட்டே கேட்டேன். அவளுக்கு ஒண்ணுமே தெரியல்ல. கேக்கக் கேக்க நம்மளையே ஒரு மாதிரி பாக்க ஆரம்பிச்சா. அதும் டாக்டர் சொன்னார். இந்த மாதிரிப் பிரச்சினை உள்ள பெண்கள் அது தெரியாத சமயம் சராசரிக்கும் மேலா சாதுவா இருப்பாங்களாம். அப்டிச் சாதுவா இருக்கதனாலத்தான் பிரச்சினையே வருதாம். மனசிலே போட்டு அடக்கியிருப்பாங்க.

பின்ன டாக்டர் ஒரு காரியம் சொன்னார். சின்ன வயசிலே அவளுக்கு என்னமோ மோசமான அனுபவம் நடந்திருக்கு. தாயில்லாப் பொண்ணு. ஆரோ அவளை சீரழிச்சிட்டான். அதனால அவளுக்கு மத்த விஷயம்மேல ஒரு பயம். அதை அவளால தாங்க முடியல்ல. அதுக்காகத்தான் அவ மனசு அப்டி ஒரு கோலமும் எடுக்குது. கணியார் சொன்னது சின்ன வயசிலே ஆரோ செய்வினையும் செய்ஞ்சிருக்காங்கன்னாக்கும்.

கணியார் வந்து ஏழுநாள் பூசையும் பலியும் நடத்தினார். அதுக்கு ஒரு மூவாயிரம் செலவு. பின்ன டாக்டருக்கு. மந்திரவாதி மந்திரவாதம் செய்யும்பம் அவளுக்கு ஒரு குலுக்கமும் இல்லை. ‘கேட்டியா கெணேசா, இது பதிஞ்ச பேயாக்கும். இது சும்மா எறங்காது’ன்னு சொன்னார். நம்ம பொழைப்பு இருக்கெ. கேரளத்துக்கும் சேலத்துக்கும் ஒரு எட்டு டிரிப்பு போயிட்டு வந்தேன். டிரிப் அடிக்கிறப்ப யோசிச்சுப் பாத்தாச் சிரிப்பா இருக்கு. வீட்டில கெட்டின பெண்ணை வைச்சிட்டு என்ன எளவு இதுன்னு ஒரு நினைப்பு.

டிரிப்பு முடிஞ்சு நாகர்கோவிலில லாரிய விட்டிட்டு நடு ராத்திரியில வந்தேன். அய்யோ பாவம், தனியா என்ன செய்வா அப்படின்னு ஒரு நினைப்பு. லாரிக்காரனைக் கெட்டினா வேற வழி இல்லியே. படியேறிக் கதவைத் தட்டப் போனேன். உள்ள ஒரு சத்தம். என்ன சத்தம்னா, மத்த சத்தம்தான்.

பொண்ணுக்கு சூடு ஏறும்போ வார மூச்சும் எரைப்பும். ஆனா ஆண் சத்தம் இல்லை. கொஞ்ச நேரம் நின்னேன். மெல்ல, பக்கத்திலே நின்ன மாமரத்திலே ஏறிக் கூரையில படுத்து ஒரு ஓட்டை இழுத்து உள்ளே பாத்தேன். இன்னைக்குவரை அந்தக் காட்சியை நான் ஒரு செக்கண்டு நேரம் மறக்கல்லை.

உள்ள இருந்தது அந்தப் பொம்பளை. தடிச்ச நாப்பது வயதுக்காரி. உடம்பில ஒரு துண்டுத் துணி இல்ல. ரூமுக்குள்ள மூச்சிரைக்க சதையெல்லாம் குலுக்கீட்டு சுத்திச் சுத்தி வாரா. பசியெடுத்தாக் கூட்டுக்குள்ள சிங்கமும் புலியும் நடக்குமே, அது மாதிரி. எனக்கு மார்பு அடிச்ச அடியில கண்ணு மங்குத மாதிரி இருந்தது. அப்டியே ஒரு நிமிஷம் தளர்ந்து கிடந்தேன். பிறகு கண்ணைத் திறந்து பாத்தா உள்ள பத்மம்தான் கிடக்கா. சின்னப் பொண்ணு மாதிரி சுருண்டு தூங்குதா. தூக்கத்திலயும் சேலைய இடுக்கிக்கிட்டுக் கிடக்கா. எல்லாம் கனவான்னு தோணிப்போச்சு.

மெல்ல இறங்கி கொல்லைப் பக்கத்தை வெளியே பூட்டீட்டு கதவைத் தட்டினேன். மனசு அடிக்க அடி காதுக்குள்ள கேட்டுது. பத்மம் திறந்து என்னைப் பாத்ததும் கண்ணீரு விட்டிட்டா. நான் அவ முகத்தைப் பாக்காம உள்ள போய் வீட்டை நல்லாப் பாத்தேன். வீட்டுக்கு ரெண்டு வாசல்தான். கொல்லைப் பக்கம் நல்லாப் பூட்டித்தான் இருந்தது.

நாலு நாள் வீட்டில் இருந்தேன். நாலு நாளும் எனக்கு மனக் குழப்பம்னாக்க அப்டி ஒரு மனக்குழப்பம். யாரிட்ட போயிச் சொல்ல முடியும். ராத்திரி இருட்டினா எனக்குப் பயம். திண்ணையில் டார்ச் லைட்டோட படுத்துக்கிடுவேன். நாலாம் நாள் ராத்திரி நல்லா அசந்து தூங்கிட்டேன். பக்கத்தில் யாரோ படுத்திருக்க மாதிரி. காலைத் தூக்கிப் போடுற மாதிரி. கனவுன்னு நினைச்சு நான் அப்டியே கெடக்கேன். அந்தப் பொம்பிளைதான். அவ கண்ணுக்குள்ள ஒரு வெள்ளி மினுக்கம். 'மறந்துட்டியா மறந்துட்டியா?'ன்னு மூச்சிரைக்கக் கேக்கிறா. 'விட்டிருவேனா விட்டிருவேன்னா'ன்னு ஆவேசமாச் சொல்லிட்டே என் மேல ஏறிட்டா. நல்ல கனம் மார்மேல. அவ முகம் பக்கத்திலே வாறப்ப வாயில்ல இருந்து ஒரு நாத்தம். அந்த நாத்தத்தில முழிச்சிட்டேன். முழிச்சா அது கனவில்ல.

உண்மை. வாய் நாத்தம் குடலைச் சுருட்டுற மாதிரி. பன்னி வாய் மாதிரி. ‘போ போ’ன்னு நான் கத்தினேன். ‘என் கண்ணுல்ல, என் கண்ணுல்ல, கொஞ்ச நேரம், கொஞ்ச நேரம்’னு அவ கெஞ்சுதா. அப்ப ஒரு விஷயம் கவனிச்சேன். அந்த அதிபயங்கர நாத்தம் எனக்குத்தான் பிடிக்கல்ல, என் தேகத்துக்குப் பிடிச்சிருக்கு. அந்த நாத்தத்தை ரசிச்சு எனக்கு ஆசை கெளம்பியிருக்கு...

பிடி நழுவிப் போய்ட்டே இருக்கு. ஒரு செகண்டுக்குள்ள எப்டியோ வெளியே வந்திட்டேன். எப்பிடீண்ணு பிறவு பல தடவை நினைச்சிருக்கேன். அப்ப என செருப்பை பக்கத்தில வைச்சிருந்தேன். அதில என் கை பட்டுது. சட்டுன்னு எடுத்திட்டேன். படபடான்னு அவளை அடிக்க ஆரம்பிச்சேன். அடி பட்டதும் தீக்கொள்ளி பட்ட நாய் மாதிரி ஊளை போட்டுட்டு எந்திரிச்சு விலகினா. ‘ஓடுடீ ஓடுடீ’ன்னு சொல்லிட்டு நான் அடிக்கேன். பாய்ஞ்சு முற்றத்தில எறங்கினவ அப்டியே ஓடிப்போய்ட்டா. அவ போறத நான் பாக்கல்ல. ஆனா மனசு பாத்தது. இருட்டுக்குள்ள இருட்டு ஓடுததுபோல.

பயந்துபோய் வாசலைத் தட்டினேன். பத்மம் கதவைத் திறந்தா. அழகா குழந்தை மாதிரி இருந்தா. என்ன என்னன்னு கேட்டா. எனக்கு அப்டியே அழுகை வந்துட்டுது! அவளைக் கட்டிக்கிட்டு அழுதேன். ‘எல்லாம் சரியாப் போச்சு! போய்ட்டா போய்ட்டா’ன்னு சொன்னேன். அவளுக்கு ஒண்ணுமே தெரியல்ல. ‘சரி, நீ உள்ள போ, நான் இன்னைக்கு காவல் இருக்கேன்’னு சொன்னேன். ராத்திரி முழுக்கத் தூங்கல்லை.

மறுநாள் கணியாரைப் போய்ப் பாத்தேன். ‘மூதேவிக்குக் காவல் முதுசெருப்பு’ன்னு ஒரு சொல்லுமுறை இருக்குடான்னார். ‘செரியாப் போச்சுடே. நீ யோகக்காரண்டே’ண்ணு சொல்லி விபூதி போட்டுவிட்டார். நான் வீட்டுக்கு வந்தா பத்மம் இல்லை. குளத்துக்குக் குளிக்கப் போயிட்டா. எனக்க பகீர்னுட்டுது. அய்யோ சதிச்சாளேண்ணு குளத்துக்கு ஓடினேன். குளத்தில அந்நேரம் யாருமே இல்ல. நல்ல மத்தியான்னம். நீலத் தண்ணி நெளியுது. தூரத்திலைருந்து பாக்கேன், பத்மம் கழுத்தளவு தண்ணியில குளிச்சிட்டிருக்கா. நான் கையை ஆட்டிக் கூப்பிடப் பாத்தா, குரல் வரல்ல. மூச்சு வாங்க ஓடினேன். அவ பக்கத்தில ஒரு வாழைத் தண்டு மிதந்து ஆடுது. தலைமுடி தண்ணியில பரந்து கிடக்கு. நான் கையை ஆட்டி அவளைக்

கூப்பிட்டேன். அவ கேட்டுத் திரும்பி வாயில உள்ள தண்ணியத் துப்பிட்டு என்னான்னு கேட்டா? அப்பப் பாத்தா அந்த வாழைத்தண்டு ஒரு கைன்னு தெரிஞ்சுது. தடிச்ச பொம்பிளைக்க கை.

பத்மம் சட்டுன்னு தண்ணிக்குள்ள போய்ட்டா. நான் அய்யோ பத்மம்னு கூவிட்டே தண்ணியில சாடினேன். தண்ணியில முங்கிப் பாத்தேன். பத்மம் மட்டும் தண்ணிக்குள்ள முழுகிப் போறா. வாய் திறந்து கண்ணு முழிச்சு நிக்குது. கொப்புளம் கௌம்புது. நீந்திப் போய் அவ கையைப் பிடிச்சேன். அவளை இழுத்துட்டு கைகால் அடிச்சு மூச்சு முட்டி தண்ணி முழுங்கி நீந்தினேன். படி விளிம்பைப் பாத்திட்டேன். காலை வைச்சா தப்பிட்டேன். காலை வைச்சிட்டேன். நின்னுட்டு அவளைப் பெலமா இழுத்திட்டு திரும்பிப் பாத்தா அது பத்மத்துக்க கை இல்ல. அந்த தடிச்ச பொம்பிளைக்க கை.

அலறிட்டே அதை உதறிட்டு கரையில ஏறிட்டேன். நின்னு கதறி அழுதேன். ஊருக்குள்ள ஓடி ஆளைக் கூட்டிட்டு வந்தேன். எட்டாளு தண்ணியில குதிச்சுத் தேடினாங்க. பத்மத்துக்க பிணம்தான் கிட்டிச்சு. மார்பில கெட்டின சாரத்தை அவிழாம கெட்டியாப் பிடிச்சிருக்கா பாவி சண்டாளி.'

*

நான் கண்ணீருடன் சிறிது நேரம் அப்படியே படுத்திருந்தேன். நிலா இன்னும் மேலேறியிருந்தது.

லாரி ஹார்ன் அடித்தது.

'கிளி கூவுது. நேரமாவுது போல' என்று அவள் சிரித்தாள்.

அவள் வருத்தமாகவோ ஆறுதலாகவோ ஒன்றும் சொல்லவில்லை என்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. பெருமூச்சுடன் பீடியை எறிந்தேன்.

'சரி, இப்ப என்ன?' என்றாள்.

நான் ஒன்றும் புரியாமல் 'என்ன?' என்றேன்.

அவள் உடலைச் சற்று குலுக்கிச் சிரித்தாள்.

நான் சட்டென்று அவள் கூந்தலைப் பிடித்து இழுத்து என்னுடன் சேர்த்து இறுக்கிக்கொண்டேன். அவளுடைய உடல் கருங்கல் சிலைபோல உறுதியாக இருந்தது. மனம் அடைந்த உச்சகட்டப் பரபரப்பு என்னைப் பதற்றம் கொள்ளச் செய்தது. என் கையில் வாகாக நெளிந்தபடி ‘இந்தக் கதை நடந்த கதையா?’ என்றாள்.

‘நடக்காமலா சொல்றேன்?’ என்றேன். அவள் உடைகளை முரட்டுத்தனமாகக் களைந்துவிட்டிருந்தேன்.

‘அந்த தடிச்ச பொம்பிளை யாரு?’

‘அது எனக்கு இப்பவும் தெரியல்லை.’

‘தெரியல்லியா? நிஜம்மாவா?’

‘ஆமா’ என்றேன். அவளுடன் என் உடல் பிணைந்தது.

‘நிஜம்மாவே தெரியல்லியா?’

அவள் குரல் மாறியிருந்ததை உணர்ந்தேன். என் உடல் அப்படியே ஜில்லிட்டது. கைகால்கள் அசைவிழந்தன. சட்டென்று மெல்லிய நாற்றம் எழுந்தது. பன்றிவாய் நாற்றம். அவள் வாயிலிருந்துதான். அவளை இறுகப் பற்றினேன். அவள் ஏதோ கேட்க வாய் திறக்க, கடுமையான துர்நாற்றத்தை உணர்ந்தேன்.

நான் என் ஒரு கையால் வேட்டியை எடுத்துக்கொண்டு பாய்ந்தெழ அவள் என் கால்களைத் தன் கரங்களால் பற்றியபோது ஒரு லாரி சென்ற ஒளியில் அவள் முகத்தைக் கண்டேன். அந்த தடித்த பெண்தான்.

துள்ளி விலகிய என் காலில் ஒரு பாறாங்கல் இடற, தடுமாறிச் சரிந்து அமர்ந்து அதை எடுத்துக்கொண்டு எழுந்து அவள் தலையில் ஓங்கி அடித்தேன். ‘போடீ, போடீ... தொரத்திட்டா வாரே? ஓடு’ என்று மூச்சிரைக்கக் கூவினேன்.

பிறகு கல்லை வீசிவிட்டு தலையைக் கைகளில் பற்றிக்கொண்டு சிறிது நேரம் அமர்ந்திருந்தேன். ரத்தத்தின் வீச்சம் என் நாசியைத் தொட்டபோது உலுக்கி எழுந்தேன். அரை வெளிச்சத்தில் அவள் நிர்வாணமாக மண்ணில் கூந்தல்

விரியக் கிடந்தாள். கையில் அந்த பிஸ்லேரி பாட்டிலை இறுகப் பற்றியபடி இறந்திருந்தாள்.

நான் கைகளால் முகம் பற்றி, குமுறிக் குமுறி அழ ஆரம்பித்தேன்.

## 8. குரல்

‘என்ன நாய்?’ என்றார் டாக்டர்.

‘டாபர்மான்’ என்றேன்.

‘கஷ்டம்தான்...’ டாக்டர் சொன்னார். ‘டாபர்மான் பிஞ்ச்சர் என்று இந்தவகை நாய்களுக்கு பெயர். ஹிட்லரின் ஜெர்மனியால் உருவாக்கப்பட்ட நாய். உருவாக்கிய சூப்பர் மார்க்கெட் வாட்ச்மேனின் பெயரையே இதற்கும் போட்டிருக்கிறார்கள்... விசுவாசத்துக்கு என்றே வடிவமைக்கப்பட்ட நாய். ஒரே உரிமையாளர் கொண்டது என்பார்கள். இன்னொருவரை அது ஏற்றுக்கொள்ளாது. பெரும்பாலும் உரிமையாளர் இறந்ததும் இதுவும் சாப்பாட்டை நிறுத்திவிடும். பட்டினி கிடந்து சாகும்...’

‘ஆனால் சாப்பிடுகிறது...’ என்றேன்.

‘யார் சாப்பாடு கொடுக்கிறார்கள்?’

‘தோட்டக்காரன்தான். அவள் உடல்நலமில்லாமல் இருந்த நாட்களில் அவன்தான் சாப்பாடு போட்டுவந்தான்.’

‘நீங்கள்?’

‘நான் அதன் அருகே போவதே இல்லை.’

‘அதை ஒரு முறையாவது தொட்டிருக்கிறீர்களா?’

‘இல்லை. எனக்கு அதைக் கண்டாலே அருவருப்பு... அது ஒரு வீட்டு மிருகம் என்றே எனக்குத் தோன்றுவதில்லை... சிறுத்தையைப் பார்த்ததுபோல இருக்கும். அதன் கண்களிலும் சிறுத்தையைப் போன்ற ஒரு மங்கல் உண்டு... நம் நாட்டு நாய்களின் கண்களில் ஒரு வகை உயிர் தெரியுமே... நாம்

பார்த்தால் அது நம்மைப் பார்க்கும் உணர்வு ஏற்படுமே, அது ஏற்படாது. சிப்பிபோல விழிகள். என்னைப் பார்த்தால் வால் ஆட்டாது. அசையாது. மூக்கை மட்டும் மெல்லத் தூக்கும். அதன் அந்த கம்பீரமே எனக்கு வெறுப்பை உருவாக்கும்...'

'என்ன வயது?'

'இரண்டு...'

'நல்ல வயது. அவன் இப்போது ஒரு முதிர்ந்த இளைஞன்...' டாக்டர் சொன்னார். 'விதைநீக்கம் செய்தீர்களா?'

'இல்லை என்று நினைக்கிறேன். நான் அதைப் பற்றி அவளிடம் கேட்பதே இல்லை...'

டாக்டர் சற்று நேரம் அமைதியாக இருந்தார். பிறகு 'வேறு வழியில்லை' என்றார்.

'என்ன டாக்டர்?'

'அதைக் கொன்றுவிட வேண்டியதுதான்.'

'கொலையா?'

'ஆம். கருணைக் கொலை என்று வேண்டுமானால் சொல்லலாம். மிருகங்களை அப்படிக் கொல்ல சட்ட அனுமதி இருக்கிறது. ஒரு ஊசி. ஐந்து நிமிடத்தில் வலி இல்லாமல் இறந்துவிடும்...'

'இருந்தாலும்...'

'அதற்கு நாம் செய்யும் உயர்ந்தபட்ச உதவி இப்போது இதுதான்... அது இனிமேல் வாழாது. வாழ்ந்தாலும் அது மிகவும் கொடுமையான வாழ்க்கை. வேறு வழியில்லை... என் தொழிலில் வருடத்திற்குப் பத்து நாய்களையாவது இப்படிக் கொல்வதுண்டு. சென்ற வியாழக்கிழமைகூட ஒன்றைக் கொன்றேன். அதன் உரிமையாளர் லண்டனுக்கு மாறிச் செல்கிறேன் என்றார்...'

நான் விடை பெறும்போது சம்மதித்திருந்தேன். நேராக பாருக்குச் சென்று குடித்தேன். நள்ளிரவில் காரில் வீடு திரும்பினேன். தோட்டக்காரன் கதவைத்

திறந்தான். நான் காரை ஏற்றி நிறுத்தி கார் ஷெட்டை மூடிவிட்டு சாவியுடன் படிகளில் ஏறினேன். அவன் பின்னால் வந்து ‘இப்போதுதான் சாப்பிட்டது சாப்’ என்றேன்.

அவன் என்ன சொல்கிறான் என்று எனக்குப் புரிந்தது. ஆனால் நான் ஒன்றும் சொல்லவில்லை. படிகளில் ஏறி கதவைத் திறந்தேன். பெரிய வீடு ஆள் இல்லாமல் இருக்கையில் மேலும் பெரிது ஆகிவிடுகிறது. இருண்டு இருக்கையில் இன்னும் பெரிது ஆகிவிடுகிறது. சமீபத்தில் ஒருவர் இறந்த வீடு என்றால் பெரிது ஆகியபடியே செல்கிறது. ஹாலின் விளக்குகளைப் போட்டேன். சோஃபாவில் அப்படியே களைத்து அமர்ந்து டி.வி. ரிமோட்டை எடுத்து அழுத்தினேன். டி.வி. ஓடியது. ஏதோ பாடல். மாற்றினேன். மாற்றி மாற்றி நடனம் அலலது ஏதோ நிபுணரின் பேச்சு. அனிமல் பிளானெட்டில் நாய்கள். இது என்ன வகை என்று தெரியவில்லை. கரடிபோலக் கனமாக இருந்தது. மனிதக் கண்கள். அதை வைத்திருந்த வெள்ளைக்காரி அதன் பிடரியை வருடியபடியே பேசினாள். அது அடிக்கடி அவளை நக்கியது. கேமராவைச் சந்தேகமாகப் பார்த்துவிட்டு மோவாயை நாவால் வருடிக்கொண்டது. அது லாப்ரடார் ரெட்ரீவர் என்று தெரிந்தது.

மீண்டும் சானல் மாற்றினேன். அரபு டி.வி. வழியாக போகோ சென்று ஃபேஷன் வந்தேன். எலும்புக்கூடு போன்ற பெண்கள். ஒட்ட வைத்தது போன்ற மார்புகள் துள்ள... மீண்டும் நாய். இப்போது பெரிய நாய். க்ரேட் டேன். சோம்பலான சிங்கம்போல் இருந்தது. சாம்பல் நிற உடல். கரிய மோவாய். கனத்த தாடை பிளந்து தொங்கிய நீளமான நாக்கு. மீண்டும் ஃபேஷன்.

சலித்து எழுந்து உடைகளைக் கழற்றியபடி என் அறைக்குச் சென்றேன். உடைகளை மாற்றியபின் கட்டிலில் படுத்து மீண்டும் டி.வி. அப்போதும் நாய்கள். அப்போதும் வரிசையாக நடந்து வரும் கொக்குக்கால் பெண்கள். செல்போனை எடுத்து ஒற்றினேன்.

‘பிசாசை நினைத்தால் அருகே பிசாசு...’ என்று சாராவின் குரல் சிணுங்கியது. ‘இப்போது நேரம் என்ன தெரியுமா?’

நான் மெல்லப் படுக்கையில் சரிந்தபடி, ‘உன்னை நினைக்கும் நேரம்’ என்றேன். ‘நான் இப்போது படுக்கைக்கு வந்துவிட்டேன். மென்மையான

படுக்கை. அருமையான விரிப்புகள். நல்ல மணம். ஏஸி குளிர். நீ மட்டும்தான் இல்லை.'

'வரவா?'

'வா.'

'முப்பது நிமிடம்.'

'கரோல்பாக்கிலிருந்து வர அவ்வளவு நேரம் ஆகுமா? இப்போது போக்குவரத்தும் இருக்காது...'

'உனக்கென்ன, சொல்வாய்... நான் இப்போது படுக்கையில் இருக்கிறேன். எழுந்து உடை அணிந்து வரவேண்டாமா?'

'எதற்கு உடை? உடைக்கு இங்கே வேலையே இல்லை.'

'சீ.'

அரை மணி நேரத்தில் சாராவின் கார் என் வீட்டு வாசலில் கண்கள் ஒளிர நின்று உறுமியது. அவள் கார் வளைவு திரும்பியதும் டையூ பயங்கரமான குரலில் குரைக்கத் தொடங்கியது. அதன் குரல் கார்வை மிக்கது. துள்ளி அலறி, கூண்டுக்குள் சுற்றி வந்து குரைக்கும். டாபர்மான் நாய்கள் எப்போதும் எழுந்து நிற்கும் குணம் கொண்டவை. கம்பிகளைப் பற்றியபடி அது இப்போது நின்றுகொண்டிருக்கும். கண்கள் ஒளிவிடும்.

கதவைத் திறந்ததும் சாரா காதைப் பொத்தியபடி உள்ளே வந்தாள். கைப்பையை சோபாவில் வீசியபடி அமர்ந்தாள். 'அப்பப்பா! நாயா அது? பேய். குமார் நீ அதை ஒழித்துக்கட்டவேண்டும்...'

'டாக்டரிடம் சொல்லியிருக்கிறேன்.'

'என்ன சொன்னார்?'

'வெள்ளிக்கிழமை வருகிறார்... விஷ ஊசி போடுவார்.'

'ஏன்? துப்பாக்கியை எடுத்து சுட்டுத் தள்ளுவதற்கென்ன?'

'அது அத்தனை எளிதல்ல.'

‘ஏன்?’

‘அப்படித்தான்... அது முடியாது.’

‘அதுதான் ஏன்?’

‘துப்பாக்கி தருகிறேன். நீயே சுடு.’

‘குமார், நீ ஒரு கோழை.’

‘வாயை மூடு.’

‘ஆமாம், கோழை. இல்லாவிட்டால் பதினாறு வருடம் இப்படி காத்திருந்து வீணாய்ப் போயிருக்கமாட்டாள்.’

‘வாயை மூடுடி, வேசி.’

சாரா பாய்ந்து கைப்பையை எடுத்துக்கொண்டு கதவை நோக்கி ஆவேசமாகக் கிளம்பினாள். நான் பாய்ந்து அவளைப் பிடித்தேன். ‘சாரா, சாரா, நில். என்ன இது?’

‘வழியை விடு. நான் போகிறேன்.’

‘சாரா. தயவு செய்.’

‘நீ உள்ளூர என்ன நினைத்திருக்கிறாய் என்று தெரிகிறது. பேசாமல் வழிவிடு.’

‘இதற்காகவா நான் இத்தனை நாள் காத்திருந்தேன்’ என்று குரல் கம்மியது.

அவள் சற்றுத் தளர்ந்தாள். பெருமூச்சுடன் சோஃபாவில் அமர்ந்தாள். ‘எனக்குத் தலை வலிக்கிறது. அந்தச் சனியன் ஒரு நிமிடம்கூட நிறுத்துவதாகத் தெரியவில்லை.’

‘நாளை டாக்டர் அதன் கதையை முடிப்பார்.’

‘வெள்ளிக்கிழமை என்றாய்.’

‘நான் டாக்டரை நாளைக்கே வரச் சொல்கிறேன்.’

‘எப்படியாவது... சீக்கிரம். நாயா அது... ஏன் இப்படிக் குரைக்கிறது? என்ன ஆயிற்று அதற்கு?’

‘அதற்கு உன்னைப் பிடிக்கவில்லை.’

‘ஏன்?’

‘அது ரஜனியின் நாய்.’

‘உன்னையும்தான் பிடிக்கவில்லை.’

‘ஆமாம். அதற்கு அவள் மனம் நன்றாகத் தெரியும்.’

‘நாம் இனி அவளைப் பற்றிப் பேசவேண்டியதில்லை. வா’ என்று அவள் எழுந்தாள்.

நான் அவள் மார்புகளைப் பார்த்தேன். ‘நீ இப்போதெல்லாம் பெரிதாகியபடியே வருகிறாய்.’

‘சீ’ என்று அவள் என் கைகளை அடித்தாள்.

படுக்கை அறையில் எல்லா ஒலிகளும் அவிந்தன. ஏஸியின் உறுமல் மட்டும்.

அவளும் நானும் உடல்களாக இருந்தோம். அவள் என்னை அணைத்தபடி ‘இந்த மௌனம் ஒரு மாதிரி இருக்கிறது. நாம் ஜன்னலைத் திறந்து வைப்போம்.’

‘நாயின் குரல் கேட்குமே.’

‘கேட்கட்டும்.’

கதவைத் திறந்தேன். வெறி கொந்தளிக்கும் நாயின் குரைப்பு.

‘என்ன நாய் இது?’

‘டாபர்மான்.’

‘கடிக்குமா?’

‘இதைக் கொலைநாய் எனபார்கள். எழுந்து நின்று கழுத்தில் கடிக்கும்.’

சாரா விசித்திரமான குரலில் ‘கொல்லுமா?’ என்றாள்.

‘உலகம் முழுக்க அது கொலைகள் செய்திருக்கிறது.’

அவள் ‘அய்யோ’ என என்னை இறுக்கிக்கொண்டாள். மார்புகள் சூடாக, கனமாக இருந்தன. தோள்களில் புல்லரிப்பின் சொரசொரப்பு. அவளுக்கு எப்போது தீவிரம் எழும் என எனக்குத் தெரியும். அதை நான் திறம்படப் பெருக்கி அவளை உச்சம் நோக்கிக் கொண்டு சென்றேன்.

‘என்ன?’

‘ஏன்?’ என்றாள்.

‘நீயா அது?’

‘ஏன்?’

‘நீ நாய்போலக் குரைத்தாய்.’

‘நானா?’

‘ஆமாம். நாய்போல ஒரு முனகல், குரைப்பு... நீ உச்சம் அடைந்தபோது.’

‘உளறாதே’ என்றாள். திரும்பிப் படுத்தபடி ஒரு சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டாள். நிதானமாகப் புகையை ஊதியபடி படுத்திருந்தாள். நான் கழிவறை சென்று வந்தேன்.

‘நாம் இந்த நாயைக் கொல்லத்தான் வேண்டுமா?’

‘ஏன்?’

‘ஒன்றுமில்லை. இதன் குரல் எனக்குப் பிடித்திருக்கிறது.’

‘பிடித்திருக்கிறதா?’

‘ஆமாம். இது குரைக்கும்போதெல்லாம், நான் வெற்றி கொண்டிருக்கிறேன் என்று எனக்குத் தோன்றுகிறது.’

‘யாரை?’

அவள் பதில் சொல்லவில்லை. புகையைத் தட்டிபடி தனக்குள் புன்னகை செய்தாள். ‘இந்த குரைப்புக்கு ஒரு சக்தி இருக்கிறது.’

‘ஆம்.’

‘அடிவயிற்றை எக்கி... உயிரையெல்லாம் திரட்டி...’

‘என்ன சாப்பிடுகிறாய்?’

‘என்ன ஒரு ஆக்ரோஷம்! மனிதக் குரலால் இத்தகைய ஆக்ராஷத்தை எழுப்ப முடியாது.’

‘பீர் சாப்பிடுகிறாயா?’

‘வேண்டாம்.’

‘வைன்?’

‘வேண்டாம்.’

அவள் அதற்குமேல் சாப்பிடுவதில்லை. நான் ஒரு ஸ்காட்ச் ஊற்றிக்கொண்டேன். படுத்தபடியே மெல்ல உறிஞ்சினேன். ஸ்காட்ச் மென்மையானது. ஏப்பங்களைக் குமட்டலாக வெளியே அனுப்பாத ஒரே குடி. ஆனால் பெண்மை கொண்டது என்பாள் சாரா.

‘அவள் இதற்காகத்தான் இதை வளர்த்திருக்கக்கூடும்.’

‘எதற்காக?’ என்றேன் கவனமில்லாமல்.

‘இந்த அளவுக்கு வெறியை மனிதக் குரலால் எழுப்ப முடியுமா என்ன?’

நான் பெருமூச்சுடன் கோப்பையை மேஜைமீது வைத்தேன்.

‘இப்போதெல்லாம் நீ அதிகமாகக் குடிக்கிறாய்.’

‘ஆமாம்’ என்றேன்.

‘தூங்குவதற்கு மாத்திரை எடுத்துக்கொள்கிறாயா?’

‘ஒன்று. சில சமயம் ஒன்றரை.’

‘கெட்ட பழக்கம்.’

‘நிறையக் கெட்ட பழக்கங்கள்...’ தலையணை ஒன்றை கால் நடுவே வைத்துக்கொண்டேன்.

‘நீ எல்லாவற்றுக்கும் பயப்படுகிறாய்’ என்றாள் புது சிகரெட்டைப் பற்றவைத்தபடி.

‘ஆம். நான் அப்படித்தான்.’

‘சிறிய குற்றங்கள் வாழ்க்கையை விறுவிறுப்பாக்குகின்றன. சிறிய பாவங்கள் நம்மை உணர்ச்சிகரமானவர்கள் ஆக்குகின்றன.’

‘விளக்கை அணைக்கவா?’ என்றேன்.

‘தூக்கம் வருகிறதா?’

‘இல்லை. ஆனால் தூங்க முயலவேண்டும். நான் நேற்றும் தூங்கவில்லை.’

‘அணைத்துவிடு. இருளில் கேட்டால்தான் நாயின் குரலுக்கு அந்த உக்கிரம் கூடுகிறது.’

‘நான் இருளில் அவளைப் பார்த்தேன். அவள் சிகரெட் நுனி சிவப்பாக இருந்தது. கன்னத்தில் அதன் ஒளிச்சிதறல்.

‘நீ இன்று மிக வேகமாக இருந்தாய்’ என்றேன். ‘மூன்று உச்சங்கள்!’

‘ஏனென்றால் நான் உன்னைக் காதலிக்கிறேன்.’

‘நள்ளிரவு அன்பே’ என்றேன். கண்களை மூடிக்கொண்டேன். கடவுளே என்ன ஒரு உக்கிரம்! என்ன ஒரு வெறி! காதுகளை மூடிக்கொள்ளவேண்டும்போல் இருந்தது.

‘சாரா, ஜன்னல்களை மூடிவிடலாமா?’

‘ஏன்?’

‘சத்தம். டையூ ஒரு காட்டு மிருகம்போல. அடங்கவே அடங்காது.’

‘பரவாயில்லை.’

‘என்னால் தூங்க முடியாது.’

‘மாத்திரை போட்டுக்கொள்.’

‘உனக்குப் பைத்தியம்.’

‘இருக்கலாம். ஆனால் என் உணர்வுகளை உன்னால் புரிந்துகொள்ள முடியாது.’

நான் ஒன்றும் சொல்லாமல் எழுந்து மேஜையைத் திறந்து வேலியம் எடுத்து விழுங்கி நீர் அருந்தினேன். மீண்டும் வந்து படுத்துக்கொண்டேன். அவள் சிகரெட் பாக்கெட்டை எடுத்துத் தன்னருகே வைத்துக்கொண்டாள்.

‘நீ தூங்கப்போவதில்லையா, என்ன?’

‘தூக்கம் வராது என்று நினைக்கிறேன்.’

நான் கண்களை மூடினேன். அந்த இருண்ட, மென்மையான குகை திறந்தது. நான் அதில் மெல்ல நுழைந்தேன். பின் அதுவே செங்குத்தாகக் கீழே இறங்கியது. பிறகு ஒலியே இல்லாத ஒரு வெளியாக ஆகியது. நான் சென்றுகொண்டிருந்தேன். பிறகு என்னை இழந்தேன்.

கண்விழித்தபோது எல்லாம் இருட்டாக இருந்தது. ஒரு சிவப்பு ஒளித்துளி மட்டும் தெரிந்தது. அது என்ன? தூரத்தில் ஒரு நெருப்புக் குகை. அல்லது ரயிலின் முகப்பொளி. அது இரைச்சலுடன் நெருங்கி வந்தது. ரயில் ஒளியல்ல, நாயின் வெறிக் குரைப்பு.

எழுந்தேன். சாரா சிகரெட் புகைத்தபடி அமர்ந்திருந்தாள். எதிரே இருந்த இருளை உற்று நோக்கிக்கொண்டிருந்தாள்.

‘சாரா.’

அவள் திரும்பியபோது கண்கள் நாய்க் கண்களாகச் சுடர்விடக் கண்டேன். ‘ஆ’ என்று கூவியபடி எழுந்தேன்.

‘என்ன?’ என்று அவள் விளக்கைப் போட்டாள். தரையெல்லாம் சிகரெட். அருகே டீப்பாய் மீது ஸ்காட்ச் புட்டி, டம்ளர்கள். வெளியே நாயின் குரல்.

‘ஒன்றுமில்லை. குடித்தாயா?’

‘ஆமாம்.’

நான் டீப்பாயைப் பார்த்தேன். ‘நான்கு கோப்பைகளா? உனக்குப் பழக்கமே இல்லையே.’

‘எனக்கு ஒன்றுமே ஆகவில்லை. தூக்கம்கூட வரவில்லை.’

‘வேலியம் போடுகிறாயா?’

‘வேண்டாம்.’

‘டையூ வெறியில் துள்ளி திமிறிக் குரைத்துக்கொண்டிருந்தது. சாரா, ‘இதற்கெல்லாம் குரல் கம்மாதா?’ என்றாள்.

‘நாய்களுக்கு அப்படி ஆகுமா என்ன? தெரியவில்லை. எனக்கு நாய்களைப் பற்றித் தெரிந்ததே கொஞ்சம்.’

‘இத்தனை வெறி எதற்கு? ஒரு நாய்க்கு அப்படி என்ன புரிந்துவிடும்?’

‘டாபர்மான் அப்படித்தான். சமாதானமே ஆகாது. குரைத்து குரைத்துச் சாகும்.’

சாரா கீழே துழாவி சிகரெட் எச்சம் ஒன்றை எடுத்து பற்ற வைத்தாள். ‘உன்னிடம் சிகரெட் இருக்கிறதா?’

‘இல்லையே. நான் எங்கே சிகரெட் பிடிக்கிறேன்? உனக்குத் தெரியாதா என்ன?’

சாரா பெருமூச்சுடன் புகையை ஊதினாள்.

‘நல்லிரவு, மீண்டும்.’

‘ஆமாம். மீண்டும்.’

அது என்ன பதில் என எனக்குப் புரியவில்லை.

‘தூங்க முயற்சி செய்’ என்றேன்.

‘சரி.’

‘கண்களை மூடினால்தான் மது வேலை செய்யும்.’

‘தெரியும்’ என்றாள்.

நான் கண்களை மூடினேன். வேலியம் என்னைக் கரிய பசைபோல இழுத்துக் கட்டிலோடு ஒட்ட வைத்தது.

‘குமார்.’

நான் அதை எங்கோ கேட்டேன். டையூவின் குரல் என்னை அழைத்தது... 'குமார்.'

விழித்துக்கொண்டேன்.

'குமார், எனக்கு வேலியம் வேண்டும்.'

நான் எழுந்தபோது கால்கள் தள்ளாடின. தலை கனத்து கழுத்தைக் குழைய வைத்தது.

'வேலியம் இதற்குமுன் சாப்பிட்டிருக்கிறாயா?'

'ஆம்.'

'புட்டியைச் சரித்தேன். 'எத்தனை?'

'ஒன்று.'

'ஒன்று மிக அதிகம்... உனக்குப் பழக்கம் அதிகமில்லை என்றால்...'

'ஒன்று' என்றாள் கறாராக.

'சரி.' என் வாய் ரப்பர்போல இருந்தது. 'தண்ணீர் நிறையக் குடி.'

'அவள் மீண்டும் ஸ்காட்ச் ஊற்றிக்கொண்டாள்.

மதுவையும் மாத்திரையையும் சேர்க்கக்கூடாது.'

'வாயை மூடு' என்றாள வெட்டும் கத்திபோல.

'உனக்கு இதய பலவீனமோ ரத்த அழுத்தமோ இருந்தால் நேராக மேல் உலகம்தான்.'

'வாயை மூடு குமார்.'

'நரகம்தான் தெரியுமா?'

'வாயை மூடுடா ராஸ்கல்.'

அவள் மூச்சிரைப்பதைக் கேட்டேன். கழுத்து குழிந்து குழிந்து மேலேறியது. மாத்திரையை விழுங்கி மதுவை மடக் மடக் என்று குடித்தாள்.

நான் படுத்துக் கண்களை மூடிக்கொண்டேன். ஒளிப் புள்ளிகள் மிதந்து அலைவதைக் கண்டுகொண்டிருந்தேன்.

‘சீ இந்த நாய்! பிசாசு... இதற்கு ஓய்வே இல்லையா?’

‘நீதான் அதன் குரலை விரும்பினாய்... நான்கூட அதைப் பதிவு செய்து வைத்துக்கொண்டால் எப்போதுமே உன்னைக் கிளர்ச்சி அடைய வைக்கலாமே என்று நினைத்தேன்.’

‘நீ என்னைக் கிண்டல் செய்கிறாய்.’

‘சும்மாதான் சொன்னேன்.’

‘உனக்கு நான் ஒரு வேசி. கூப்பிட்டால் ஓடிவரும் கிழட்டு வேசி.’

‘தூங்கு. நீ நிலையில் இல்லை.’

‘நீ அப்படி நினைத்தால் அதை என்னிடம் சொல்லவேண்டும். அதுதான் உண்மை.’

‘சரி, சொல்கிறேன். நீ தூங்கு.’

‘நீ ஒரு கோழை.’

‘நன்றி’ என்று கண்களை மூடிக்கொண்டேன்.

‘அதற்கு என்ன பெயர் வைத்திருக்கிறாள் பார்த்தாயா? டையூ’ அவள் சிரித்தாள் ‘உனக்காகத்தான் அது.’

நான் அவளிடம் ஏதோ சொல்ல விரும்பினேன். சொல்ல முயல்வதற்குள் நழுவி நழுவி தூக்கத்துள் சரிந்தேன்.

பிறகு கண் விழித்தபோது சில்வண்டின் ஒலி மட்டுமே கேட்டுக் கொண்டிருந்தது. அமைதி. வெளியே பனி சொட்டும் ஒலி. நாய் குரைப்பதை நிறுத்திவிட்டது என்பதை உணர்ந்தேன். வியப்புடன் போர்வையைத் தள்ளிவிட்டு பார்த்தேன். என் எதிரே தரையில் இரு ஒளிரும் கண்கள்.

பதறி எழுந்து அமர்ந்தேன். எதிரே முன்னங்கால்களை ஊன்றி பின்கால்களை மடித்து டையூ அமர்ந்திருந்தது. பொம்மை போல.

நான் ‘சாரா’ என்றேன். என் குரல் கிசுகிசுப்பாக ஒலித்தது.

சாரா விசித்திரமான கோணத்தில் படுத்திருக்கிறாள் என்று அரைக்கண் பார்வையிலேயே பட்டது.

‘சாரா.’

நாய் அவளைத்தான் கூர்ந்து பார்க்கிறது என்று கண்டேன். கழுத்தில் சங்கிலி இல்லை.

என்ன செய்வதெனத் தெரியவில்லை. அசைந்தால் ஒருவேளை அது என்மீது பாய்ந்துவிடக்கூடும். ஆனால் ஏதாவது செய்தாக வேண்டும். மேஜைக்குள் என் துப்பாக்கி இருந்தது. மிக மெல்ல என் கையை நீட்டினேன். நெஞ்சு அடித்துக்கொள்வதையும் உடலே வியர்த்து மூடியிருப்பதையும் உணர்ந்தேன்.

மேஜை இழுப்பின் குமிழ் குளிர்ச்சியாகக் கையில் பட்டதும் ஆறுதல் ஏற்பட்டது.

டையூ என்னைப் பார்க்கவில்லை. அது சாராவையே நோக்கியிருந்தது.

துப்பாக்கியைத் தொட்டுவிட்டேன். கை வியர்த்திருந்தது. ஒரு கணம் விரல் நழுவியது. என்னை அறியாமல் பதறி, துழாவி, அதை எடுத்துவிட்டேன். அக்கணத்தில் பார்வை திசை திரும்பியது. மீண்டும் பார்த்தால் டையூ இல்லை.

பதற்றத்துடன் அறையைப் பார்த்தேன். மூடிய அறை. எங்கும் நாய்கள் இல்லை.

பிரமையா? ஆனால் நான் என் கண்களால் அதைத் துல்லியமாகப் பார்த்தேனே.

ஒரு கணம் மூளை உறைந்து நின்றது. பின் எழுந்தோடி விளக்கைப் போட்டேன்.

ஒளியில் அறை காலியாக இருந்தது. சன்னல் கம்பிகள் அப்படியே இருந்தன.

வெளியே டையூவின் ஊளை கேட்டது. விசித்திரமான ஊளை. அது அப்படி ஊளையிட்டு நான் கேட்டதே இல்லை. சோகம், பயம் எல்லாம் கலந்த ஊளை.

நான் திரும்பி ‘சாரா’ என்றேன்.

அவள் கிடந்த முறையில் ஒரு தவறு இருந்தது. மெல்ல அணுகினேன். அதற்குள் என் உள்ளம் எல்லாவற்றையும் ஊகித்து இதயம் படபடவென அடிக்க ஆரம்பித்திருந்தது.

சாரா இறந்திருந்தாள். வெளியே டையூ ஊளையிட்டபடியே இருந்தது.

## 9. ஐந்தாவது நபர்

பிளாஞ்செட் பார்க்க நான்கு பேர் தேவை. அவர்கள் ஏறத்தாழ சமமானவர்களாக இருக்கவேண்டும். சந்தேகம் கொண்டவர்கள் இருக்கலாம். ஆனால் மனரீதியாக எதிர்ப்பு காட்டுபவர்கள் இருக்கக்கூடாது. சோதிக்க முயல்பவர்களோ, கவனத்தை வேறு எங்கோ வைத்தபடி இருப்பவர்களோ இருக்கக்கூடாது. ஒன்று கவனித்திருக்கிறேன். மன அழுத்தம் கொண்டவர்களால் பிளாஞ்செட்டில் நன்றாகக் கலந்துகொள்ள முடிகிறது.

சண்முகமும் கணபதியும் கோலப்பனும் சேர்ந்து முதலில் வந்தார்கள். பிறகு சுரேஷ்.

‘ராஜாமணி எங்கேடா?’ என்றேன்.

‘வருவான். அவனை ஃபோனில் பிடிக்க முயலவில்லை மாஸ்டர்.’

நாங்கள் முதலில் டீ குடித்தபடி சற்று நேரம் பொதுவாகப் பேசிக்கொண்டிருந்தோம்.

‘ரொம்பக் குடிக்கிறானாடா இப்பல்லாம்?’ என்றேன்.

‘தெரியலை மாஸ்டர். ஆனா அவனுக்கு இப்ப வேற ஒரு டிராக் இருக்கு.’

‘இப்பவே நாம நாலுபேர் இருக்கோமே? உக்காந்திரலாம். அவன் வரானோ இல்லியோ’ என்றான் சண்முகம்.

‘வருவான்’ என்றேன். ‘அவனும் இருக்கட்டும்.’

‘குடிச்சிருந்தான்னா?’

நான் ஒன்றும் சொல்லவில்லை.

கதவு தட்டப்பட்டது. எனக்குத் தெரிந்தது, ராஜாமணிதான்.

அவன்தான். களைத்த முகம். தாடி, மீசை. ஆனால் குடித்திருக்கவில்லை.

‘வாடா’ என்றேன். ‘குடிச்சிட்டு அலையறியாமே? மீரான் சார் சொன்னார்.’

அவன் ஒன்றும் சொல்லவில்லை.

‘மாஸ்டர், பலகை வைக்கலாம்’ என்றான் கணபதி.

நான் ‘என்னடா?’ என்று ராஜாமணியைக் கேட்டேன்.

‘ம்.’

நான் பிளாஞ்செட் பலகையை எடுத்து வந்தேன். இளநீல நிறத்தில் வட்டமான பலகை. ஆங்கில எழுத்துகள் வரிசையாகப் பொறிக்கப்பட்ட கட்டங்கள் வட்டமாக அமைந்திருக்க நடுவே கருஞ்சிவப்பு நிறம் பூசப்பட்ட ஒரு சிறு வட்டம். கேள்விக்குறி, ஒன்று முதல் பத்து வரை எண்கள், ஆம், இல்லை அடையாளங்கள் ஆகியவை அக்கட்டங்களுக்கு உள்ளேயே இருந்தன.

பித்தளை டம்ளரைக் கவிழ்த்து நடுவே வட்டத்தில் வைத்தேன்.

கோலப்பனும் சண்முகமும் எதிர் எதிரே அமர்ந்து கொண்டனர். வலப்பக்கம் கணபதி அமர்ந்தான். நான் ராஜாமணியிடம், ‘நீ உக்காரு’ என்றேன்.

‘இல்ல.’

‘உக்காருடா.’

அவன் அமர்ந்துகொண்டான்.

‘தொடங்கலாமா’ என்றேன். நான் அவர்களுக்குப் பின்னால் இருட்டில் ஒரு உயரமான ஸ்டூலில் அமர்ந்துகொண்டேன்.

அனைவரும் தலையாட்டினர்.

கதவுகளை மூடிக்கொண்டோம். இருளில் ஒரு மெழுகுவர்த்தியை மட்டும் ஏற்றினோம். புற ஒலிகள் ஏதும் காதில் விழவில்லை. ‘மெல்ல உடலைத் தளர்த்துவோம். நம் தசைகள் தளரவேண்டும். மனம் தளரவேண்டும். முதலில் நம் கவலைகளைத் தள்ளிவைப்போம். கவலைப்படும் நாம் அல்ல இங்கே

இருப்பது. இங்கிருக்கும் நாம் வேறு. இங்கே நமக்குக் கவலைகள் இல்லை. பயங்கள் இல்லை. இங்கே நமக்குப் பொறுப்புகள் இல்லை.’

என் குரல் மட்டுமே ஒலித்தது. ‘நம் மனம் சுதந்தரமாக இருக்கிறது. எந்தவிதமான கட்டுகளும் இல்லை. நம் உடல் சுதந்தரமாக இருக்கிறது. எந்தவிதமான கட்டுகளும் இல்லை. முதலில் நம் கை விரல்கள். அவற்றைத் தளரவிடுவோம். எந்தவிதமான கட்டுகளும் இல்லை. பிறகு கைகள். இதோ நம் தோள்களைத் தளரவிடுகிறோம். அவற்றைத் தளரவிடுவோம். எந்தவிதமான கட்டுகளும் இல்லை. மெல்ல மெல்ல நம் மார்பு தளர்கிறது. நம் கால்களை இதமாகத் தளர விடுகிறோம். எந்தவிதமான கட்டுகளும் இல்லை. கால் விரல்களைத் தளர விடுகிறோம். நம் முகம் தளர்கிறது. முகத்தசைகள் சரிகின்றன. அவற்றைத் தளரவிடுவோம். எந்தவிதமான கட்டுகளும் இல்லை. நாம் உறங்கிக்கொண்டிருக்கிறோம். ஆனால் நாம் விழித்திருக்கிறோம். நாம் இதோ இங்கே பிளாஞ்செட்முன் அமர்ந்திருக்கிறோம். நமக்கு எந்தவிதமான கட்டுகளும் இல்லை.’

பிளாஞ்செட்முன் அமர்ந்த நால்வரும் உடல் தளர்ந்து கண்கள் நிலைகுத்த அமர்ந்திருந்தனர்.

‘இந்த மையத்தையே நோக்குவோம். நாம் வேறு எதையும் நோக்குவதில்லை. இந்த மையத்தையே நினைப்போம். நாம் வேறு எதையும் நினைப்பதே இல்லை. இந்த மையம்தான் நம் மனம். வேறு எங்கும் நம் மனம் இல்லை.’

நான் ஒரு சுவிட்சை அழுத்த, மெல்ல இனிய இசை மீள மீள ஒரே மாதிரி ஒலிக்கத் தொடங்கியது. அனைவரும் உறக்கத்திற்குரிய சீரான மூச்சுகளுடன் இருந்தோம்.

‘மெல்ல அதைத் தொடுவோம்’ என்றேன்.

மூவரும் அதைத் தொட்டனர்.

‘மென்மையாகத் தொடவேண்டும். மிக மென்மையாக. நாம் தொடுவது நம் மனத்துக்கு மட்டுமே தெரியவேண்டும். நாம் அறிந்து சிறிய அளவில்கூட அதன்மீது அழுத்தத்தைச் செலுத்தக் கூடாது. அதாவது நாம் அதை

நகர்த்தக்கூடாது. நாம் அதன் அசைவை உணரும் பொருட்டே அதைத் தீண்டியிருக்கிறோம்.'

அவர்கள் மெல்ல அதைத் தொட்டபடி அசையாமல் அமர்ந்திருந்தனர்.

'சண்முகத்தின் அம்மாவை வரவழைப்போம்' என்றேன். அவன் சற்று அசைந்தான்.

'வீரம்மா' என்றேன். இருளில் அந்த ஒலி மேலும் உரக்கக் கேட்டது.

மிக மெல்ல அந்தரங்கமாக அப்பெயரைச் சொல்லி அழைத்தேன். மீண்டும் மீண்டும் அழைத்தேன். பிளாஞ்செட் கோப்பை அசையாமல் இருந்தது.

'வீரம்மா... உங்க மகன் கூப்பிடறான். உங்க மகன். உங்க மேல உயிரையே வைச்சிருக்கிற பிள்ளை.'

நான் மீண்டும் சொன்னேன். 'நாங்க உங்களுக்கு எந்தத் தொந்தரவையும் அளிக்கமாட்டோம். லௌகீக உலகத்துல எங்களுக்கு எதையாவது சாதிச்சுக்கிறதுக்கு உங்க உதவியை நாடமாட்டோம். ஆவியுலகுக்கும் மனுஷ உலகுக்கும் இடையே இருக்கிற நீங்கமுடியாத திரையை நீக்கமாட்டோம். உங்க எல்லையை மீறி ஒண்ணுமே செய்யச் சொல்லமாட்டோம்.'

அமைதி இறுகிய நிமிடங்கள்.

'வீரம்மா வாங்க! வந்திருங்க வீரம்மா!'

சட்டென்று டம்ளர் அசைய ஆரம்பித்தது. கணகணவென்ற ஒலியுடன் ஒரு சிறு வட்டம் அடித்து மீண்டும் வந்துநின்றது.

'வீரம்மாவா நீங்க?'

டம்ளர் அசைந்து 'ஆம்' என்ற இடத்தில் நின்றது. பிறகு மீண்டது.

'நீங்க நிறைவா இருக்கீங்களா?'

'ஆம்' என்று டம்ளர் சொன்னது.

'அங்கே உங்கள் கணவர் இருக்கிறாரா?'

'ஆம்.'

‘உங்கள் உலகில் பசி, தாகம் உண்டா?’

‘இல்லை.’

‘உங்கள் உலகில் உங்களுக்கு என்ன வடிவம்?’

பதில் இல்லை.

‘நீங்கள் கடவுளைப் பார்த்தீர்களா?’

பதில் இல்லை.

‘வேறு என்ன கேட்பது சண்முகம்?’ என்றேன்.

‘மருமகள்மேல கோவம் இருக்கான்னு?’

‘வீரம்மா, உங்களுக்கு மருமகள் மேல கோபம் உண்டா?’

பிளாஞ்செட் அசையவில்லை.

‘சொல்லுங்கம்மா.’

'No emotions here.'

சண்முகம் பெருமூச்சு விட்டான்.

‘அப்டீன்னா அவளை மன்னிச்சிட்டீங்களா?’

பிளாஞ்செட் பதில் சொல்லவில்லை.

மீண்டும் கேட்டேன்.

பதில் இல்லை.

‘உங்க மகன்கிட்ட ஏதாவது சொல்லவேண்டுமா?’ என்றேன் நான். ஆவியை அதிகபட்சம் ஐந்து நிமிடங்களுக்குமேல் இந்த உலகில் நிறுத்தக்கூடாது.

டம்ளர் மெல்ல நகர்ந்து ஆங்கில எழுத்துகளை ஒவ்வொன்றாகத் தீண்டியது. 'Leave Sarasu.'

மெல்ல டம்ளர் நிலை திரும்பியது. நான் கைகளைத் தட்டியபின் விளக்கைப போட்டேன். நால்வரும் பெருமூச்சுடன் மீண்டனர்.

‘எப்டி மாஸ்டர்?’ என்றான் கணபதி வியப்புடன். ‘சாமி சத்தியமா நான் கையையே நகர்த்தலை. டம்ளர் என் கையை நகத்துற மாதிரி இருந்திச்சு.’

‘நம்பவே முடியலை’ என்றான் கோலப்பன்.

பிளாஞ்செட் வெளியே நின்னு பாக்கிறவங்களுக்குப் பொய்யாப் படும். அதை இயக்கிறவங்களுக்குத்தான் தெரியும், அவங்க அதைச் செய்யலை; ஐந்தாவதா ஒரு சக்தி வந்துதான் அதைச் செய்யுதுன்னு. அதான் பிளாஞ்செட்டோட மர்மமே.’

‘யார்ரா அது சரசு?’ என்றான் கோலப்பன்.

சண்முகம் முகம் வெளிறி, பேசாமல் அமர்ந்திருந்ததைக் கவனித்தேன்.

கணபதி ‘ஆமால்ல, யார்ரா அது?’ என்றான்.

நான், ‘அதை நாம் கேட்கக் கூடாது’ என்றேன். ‘பிளாஞ்செட்டில் இதுதான் ஒரு அபாயம். நமக்குள்ள ரகசியங்கள் ஆவிகளுக்கு ஒரு பொருட்டே இல்லை.’

சண்முகம் சட்டென்று விசும்பினான்.

‘டேய் என்னடா இது. டேய்’ என்றான் கோலப்பன்.

‘சண்முகம் என்ன இது?’

‘யாருக்குமே தெரியாது மாஸ்டர். அவ்வளவு ரகசியமா வைச்சிருந்தேன். அம்மாவுக்குத் தெரிஞ்சிரும்னு நான் நினைக்கவே இல்லை…’

‘கள்ள உறவா?’ என்றேன்.

தலை அசைத்தான்.

‘விட்டிரு.’

அவன் மேலும் விசும்பினான்.

‘சரிடா விடு. அம்மா இங்க இல்லை. இப்ப அவ கடவுள் மாதிரி…’

பெருமூச்சுடன் நால்வரும் இலகுவானார்கள்.

‘எப்டி மாஸ்டர் இது?’ என்றான் கோலப்பன் மீண்டும் எழுந்த வியப்புடன்.

‘ஆவிகளுக்கு உடல் இல்லை. அதுகளுக்கு இந்த உலகத்தில வெளிப்படணுமானா உடல் வேணும். மனசு வேணும். நாம கொஞ்ச நேரம் நம்ம உடலையும் மனசையும் விட்டுக் குடுக்கிறோம்.’

‘பயம்மா இருக்கு.’

‘ஆவிகள் நம்மைப் போலத்தான். அவை வாழற உலகம் வேற. வாழற வடிவம் வேற, அவ்வளவுதான். கதைகளில் வாறமாதிரி அவையெல்லாம் பிசாசுகள் ஒண்ணும் இல்லை.’

கணபதி மெல்ல, ‘இல்லை மாஸ்டர்...’ என்றான்.

‘சொல்லு.’

‘நான் சந்தேகப்படலை. ஆனா ஒருத்தர் இதைப் பாத்துட்டு நீங்க இதை ஹிப்னடைஸ் பண்ணிச் செய்ய வைக்கிறீங்கன்னு ஏன் சொல்லக் கூடாது?’

‘அதாவது...’

‘நீங்க எங்க மனசுகளை ஆட்கொள்றீங்க. மயக்க நிலையில் நீங்க நினைக்கிறதை நாங்க செய்றோம்... அதாவது இந்த பதில்கள் நீங்க எங்க மனசுக்குள்ள உருவாக்கியவை. நாங்க அதை இதில் காட்டறோம்.’

‘எப்டிரா அது?’

‘எங்க எல்லாரையும்விட உங்க வில் பவர் பல மடங்கு அதிகம் மாஸ்டர். இது உங்க இடம். நீங்க பல வருஷமா இதையெல்லாம் பண்ணி உங்களுக்கு ஒரு இமேஜ் இருக்கு... நாங்க வேற, எங்கள சப்மிட் பண்ற மனநிலையோட வந்திருக்கோம்...’

‘உண்மையில் அப்டி ஒரு குற்றச்சாட்டு உண்டு’ என்றேன். ‘ஒரு டிரான்ஸ் நிலையில் சம்பந்தப்பட்டவங்களோட கூட்டான ஆழ்மனசுதான் கை அசைவை வெளிப்படுதுன்னு.’

‘அதாவது...’

அந்த பதில்களைச் சொல்ற ஐந்தாவது ஆள்ங்கிறது நாலு ஆழ்மனசுகளும் ஒண்ணாச் சேர்ந்த கூட்டு ஆழ்மனசு... கணபதி என்ன சொல்றான்னா அந்த ஆழ்மனசை நான் கண்ட்ரோல் பண்றேன்னு. அது சாத்தியம்தான். ஆனா என்னால முடியாது. அஞ்சு பேரை ஒரே சமயத்தில் ஹிப்னடைஸ் பண்றதுன்னா அது அவ்வளவு ஈஸி இல்லை.'

'நான் சும்மா ஒரு பேச்சுக்குச் சொன்னேன்' என்றான் கணபதி.

'அப்ப சண்முகம், சரசு மேட்டரை அம்மா சொல்லணும்னு ஆழ்மனசில ஆசைப்பட்டிருக்கான். இல்லியா மாஸ்டர்?'

'அதை அறியணும்னு நீங்களும் ஆசைப்பட்டிருக்கலாம்' என்றேன்.

'மடத்தனம். ஆழ்மனசும் மண்ணாங்கட்டியும். டேய் நான் டம்ளரைக் கொஞ்சம்கூட அசைக்கலை. அதுவே அசைஞ்சுது. இதுதான் சத்தியம்.' சண்முகம் மூச்சிரைக்கச் சொன்னான். 'உண்மையைச் சொல்லணும்னா சரசு பேரு வர ஆரம்பிச்சப்ப நான் அதைத் தடுக்கணும்னுகூட நினைச்சேன். கையை அசைக்க முடியலை.... அப்டியே யாரோ கையைப் பிடிச்சமாதிரி...'

'அதான்டா மனசாட்சி' என்றான் கோலப்பன். கணபதி சிரித்தான்.

'நான் அந்தச் சக்தியை இதோ உன்னை ஃபீல் பண்ற மாதிரி ஃபீல் பண்ணினேண்டா. சாமி சத்தியமா... அது ஆழ்மனசெல்லாம் ஒண்ணும் இல்லை. உன்னை மாதிரி, என்னை மாதிரி அதுவும் ஒரு தனி ஆள். தனி சக்தி... அதில எனக்கு டவுட்டே இல்லை.'

'மாஸ்டர், உங்க எண்ணம் என்ன? ஆவிகள் இருக்கா?'

'இருக்கு. இல்லாட்டி இது நடக்காது. ஆவிகளா, வேற எதுவான்னு சொல்லத் தெரியலை... ஆவிகள் நம் ஆழ்மனசைப் பயன்படுத்திக்குதுன்னு நான் சொல்வேன்.'

'மாஸ்டர், நான் சரளாகிட்ட பேசணும்' என்றான் ராஜாமணி.

அனைவரும் திடுக்கிட்டனர்.

‘இன்னொரு நாள் பாப்பம்’ என்றேன். ‘இன்னைக்கு டவுட் வந்தாச்சு. நிறைய டிஸ்கஸ் பண்ணிட்டோம்.’

‘இல்லை மாஸ்டர், நான் இன்னைக்கே பேசியாகணும்.’

‘சரி... பேசுவோம். இவங்க போகட்டும்... நீ தனியா இங்க வா...’

‘இல்லை நான் அவகிட்ட இப்பவே பேசணும். இவங்கள்லாம் இருக்கிறப்பவே பேசணும்...’

‘டேய்’ என்றான் கோலப்பன்.

‘இவங்களும் இருக்கணும்...’ என்றான் அவன். முகம் வெறி கொண்டிருந்தது ‘இவங்க கண்டிப்பா இருக்கணும்...’

‘ஆவிகளுக்கு நாம நினைக்கிற அந்தரங்கம்லாம் இல்லை. அதை மறக்காதே’ என்றேன்.

‘நானும் செத்தாச்சு. எனக்கும் அப்டி அந்தரங்கம்னு ஏதும் இல்லை.’

‘டேய்!’

‘மாஸ்டர் ப்ளீஸ்... ப்ளீஸ்...’

‘ஓக்கே’ என்றேன். ‘என்னப்பா சரியா?’

‘வேணுமா மாஸ்டர்?’ என்றான் கோலப்பன்.

‘அவன் இப்டிச் சொல்றானேடா...’

‘ஓக்கே.’

‘மூணு பேரும் ரெடிதானே?’

மூவரும் தலையசைத்தனர்.

மீண்டும் அவர்களை என் சொற்களால் ஒருமை கொள்ளச் செய்தேன். மீண்டும் டம்ளரில் அவர்கள் குவிந்தனர்.

‘சரளா... சரளா... வாம்மா...’

‘சரளா... உன்னிடம் உன் கணவன் பேசவேண்டும்... உன்னிடம்... ’

‘சரளா உன் கௌரவத்துக்கு எந்தவிதமான பிரச்சினையும் வராது... இது உறுதி...’

டம்ளர் அசைந்தது. சரளா வந்தாள்.

‘சரளா, இது நீயா?’ என்றேன்.

‘ஆம்.’

‘நீ நிறைவாக இருக்கிறாயா?’

‘இல்லை.’

அனைவரும் சற்று அதிர்ந்தனர்.

‘ஏன்?’

‘என் வாழ்க்கை முடியவில்லை.’

‘ஏன்?’

‘நான் தற்கொலை செய்துகொண்டேன்.’

‘தற்கொலையா? ஏன்?’

‘நான் மனமுடைந்தேன்.’

‘எதனால்?’

‘என் கணவரின் குடி... கடன்.’

‘சரளா, அவன் என்ன செய்யவேண்டும்?’

‘திருந்த’

டம்ளர் சட்டென்று திசைமாறி நகர்ந்தது.

‘சரளா’

‘நான் கொல்லப்பட்டேன்’ என்றது பிளாஞ்செட்.

நான் நால்வரையும் கூர்ந்து நோக்கினேன். தூக்கத்தில் கனவு கண்டு துடிப்பு கொள்பவர்கள்போல, யார்? யார் அது?

டம்ளர் கேள்வி கேட்காமலேயே ஓடியது.

‘நான் கற்பழிக்கப்பட்டேன்.’

மொத்த மனதிலும் அழுத்தமான காந்தவிசைபோல அந்த வல்லமையை உணர்ந்தேன். காட்டாற்று நீரில் அடித்துச் செல்லப்படுபவன்போல.

‘மாஸ்டர் குற்றவாளி.’

பிளாஞ்செட் அசைந்தது.

கட்டப்பட்ட கயிறு அவிழ்ந்தவர்கள்போல அவர்கள் சிறு அசைவுடன் மீண்டனர்.

நான் ஒரு பெரும் மல்யுத்தத்தில் தோற்கடிக்கப்பட்டவனாக விழுந்து கிடந்தேன்.

# 10. ரூபி

‘பி ளாக் வைனா?’ என்றேன் வியப்புடன்.

ஞானசிரோமணி சங்கடமாகச் சிரித்தபடி ‘ஆமா. அதான் சார்.’

‘யோவ், அது குதிரையாய்யா? கழுதை.’

‘நான் என்ன சொல்ல? கிரகங்கள் என்னைக்குமே பொய் சொல்லாது.’

‘நீ சொல்லுவியே.’

‘நம்பினா நம்புங்க சார். இல்லாட்டி கௌம்பிட்டே இருங்க. நான் இன்னைக்குவரை இந்த விஷயத்தில பொய் சொன்னதில்லை. எனக்குன்னு ஒரு பாலிசி இருக்கு. அப்றம் உங்க இஷ்டம்.’

நான் சற்றுத் தணிந்தேன். ‘இல்ல, இந்த ரேஸ்ல எல்லா நல்ல குதிரைங்களும் ஓடுது... நடைமுறையில் பாக்கவேண்டாமா... இதுக்குக் காலு நீளம் கம்மி. எடை ஜாஸ்தி. டிரையினிங்கும் அப்டி அப்டித்தான். அதோட ஓனர்கூட அதைப் பொருட்படுத்தலை.’

‘அதெல்லாம் மெய்தான் சாமி. ஆனா ரேஸ்ல ஓரமா ஓடுற எவ்ளவோ குதிரைங்க பிய்ச்சிட்டுப் போயிருக்கு... உங்களுக்குத் தெரியாததா?’

‘உண்மைதான். இல்லேங்கலை. ஆனா அதெல்லாம் ஜெயிக்கிறதுக்கு சான்ஸ் உள்ள குதிரைங்க. ஃபாம்ல இல்லாம இருந்திட்டிருக்கும். திடீர்னு ஃபாமுக்கு வந்திரும். இந்த ஆட்டத்தில இருக்கிற முக்கியமான த்ரில்லே இதான்னு எங்க மாஸ்டர் சொல்லுவார். ஓடறது மிஷின்ஸ் இல்ல, ஆத்மாக்கள். அந்த ஆத்மாவுக்கும் ஓட்டறவன் ஆத்மாவுக்கும் உள்ள உறவு தான் பாதி விஷயங்களைத் தீர்மானிக்குது...’

‘என்னதான் சொல்லுங்க சார், அந்த மாதிரி பாத்தா ரூபிக்குச் சமானமா இன்னைக்குவரை ஒண்ணு வாய்க்கலை உங்களுக்கு.’

நான் சற்று அமைதியானேன். எழுந்தபடி ‘சரி, நீங்க சொன்ன படியே செய்றேன். இந்த வாரம் ரெட் சல்யூட். பாப்போம்.’ ஒரு சிகரெட் பற்றவைத்தபடி, ‘நல்ல குதிரை நல்ல மனைவி மாதிரின்னு சொல்வார் மாஸ்டர்.’

லாயங்களுக்குப் போனேன். குதிரைகள் வால் சுழல நின்று தீனி தின்றன. ரேஸ் குதிரைகளுக்கான சிறப்புக் கலவை உணவு. ஓட்டப் பயிற்சி முடிந்து உடலை உருவிவிட்டதனால் வியர்வை வாசத்துடன் பளபளப்பாக இருந்தன.

ராயல் வைட் என்னைப் பார்த்ததும் திரும்பிப் பார்த்து மெல்லக் கனைத்தது. உடனே மற்ற குதிரைகளும் திரும்பிப் பார்த்தன. குதிரைக்கு மோப்ப சக்தியும் எச்சரிக்கை உணர்வும் மிக அதிகம். நான் லாயத்தில் காரை நிறுத்தியதுமே என்னை அடையாளம் கண்டுகொண்டிருக்கும். இப்போது ராயல் வைட் என்னைப் பற்றி என்னவோ சொல்லியிருக்கிறது. யாருக்குத் தெரியும்?

சதர்ன் பேர்ல் மீண்டும் கனைத்தது. மற்ற குதிரைகள் உடலைச் சிலிர்த்தன. ஸீ டெவில் காதுகளைச் சேர்த்துக் கூர்மையாக்கி என்னைப் பார்த்தது. பையன் ஓடிவந்தான். ‘வாங்கண்ணா.’

‘பாஸ் வந்தாரா?’

‘டிரைனிங் பார்த்தார். இப்பத்தான் போனார்.’

நான் ஒரு சிகரெட் பற்ற வைத்தேன். பிளாக் வைன் அருகே போய்ப் பார்த்தேன். அதுவும் மாா்வாரிக் குதிரைதான். கிரேட் மராத்தா என்று புகழ்பெற்ற இவ்வகைக் குதிரைகளைக் கடந்த பதினைந்து வருடங்களாகத்தான் ரேஸுக்குக் கொண்டுவந்திருக்கிறார்கள். ஐரோப்பியக் குதிரை வகைகள் இவற்றைவிடப் பெரியவை, தசைவலிமை மிக்கவை. ஆனால் இந்தியச் சூழலை அவற்றால் தாக்குப்பிடிக்க முடிவதில்லை. குறிப்பாக வெப்பம், தூசு மற்றும் பலவகை பாக்டீரியங்கள், அமீபாக்கள். தொடர்ந்த வயிற்றுச் சிக்கலால் அவை இறக்கின்றன. பெரும்பாலான நேரங்களில் எரிச்சலான மனநிலை கொண்டிருக்கின்றன. பழைய மராட்டியர்கள் போரில்

மலையேறும் பொருட்டு விரிவுபடுத்தி எடுத்த இவ்வகைக் குதிரைகள் களைப்பே அடைவதில்லை. பொறுமை மிக்கவை.

‘சரவண்.’

‘சார்’ என்று ஓடிவந்தான்.

‘இதற்கு அசைவுகளை எடு.’

‘இதற்கா?’

‘ம்.’

ரூபியின் அளவுகளை நினைவுகூர்ந்தேன். நான் அறிந்தவரை மராத்தா வகைக் குதிரைகளில் பெரியது அதுதான். 16 கை உயரம், 76 இஞ்ச் மார்பளவு, மூட்டுக்குக் கீழே எலும்பு 93 இன்ச், கடிவாள நீளம் 52 இஞ்ச், 630 கிலோ எடை. அது குதிரை அளவுகளில் ஒரு வகை உச்சம். செட்டியாருக்கு அதைப்பற்றிப் பெருமை இருந்தது. மராத்தா அப்போதுதான் உலக அளவில் புகழ்பெறத் தொடங்கியிருந்தது. வெள்ளையர்கள் வாரம்தோறும் வந்து அதைப் பார்த்துப்போனார்கள். ரேஸ்களில் அது வெல்லும்போது அது அசாதாரண முக்கியத்துவம் கொண்ட செய்தி ஆகியது. அது உண்மையிலேயே அழகான பெண் குதிரை. கம்பீரத்துடன் வெட்கமும் தயக்கமும் கொண்டது. மராட்டிய அரச மகளிரைப் போல.

பிளாக் வைன் வந்தது. அதைப் பார்த்ததுமே எனக்கு ஓர் ஏமாற்றம் ஏற்பட்டது. சற்று சின்னக் குதிரை. அது பரவாயில்லை. உடல் வலிமையாக இருந்தது. ஆனால் அதில் ஒரு கோணல் இருந்தது. என்னைப் போன்ற அனுபவம் மிக்க ஜாக்கிகள்தான் அதைக் கண்டறிய முடியும். அமைப்பில் கோணல் உள்ள குதிரைக்குச் சில சமயம் அதுவே ஒரு தகுதியாக ஆகும், அந்தக் கோணலை வேகமாக மாற்ற ஜாக்கியால் முடிந்தால். இடது கையர்கள் நல்ல குத்துச் சண்டை வீரர்கள் ஆவதுபோல, வித்தியாசமே வலிமையாக ஆகும். ஆனால்...

‘இதை நான் ஓட்டுகிறேன்’ என்றேன்.

‘சார்.’

‘சேணம் போடு.’

குதிரையை வெல்ல வைக்கும் கூறுகள் பல. ஜாக்கியின் உடலுக்குக் குதிரை உடல்மீதான அளவு, அதன் உடல் ஜாக்கியைத் தாங்கிக் கொள்ளும் விதம், அவர்களுக்கு இடையேயான தகவல் பரிமாற்றம். அதாவது உடல் வழியாகப் பரிமாறிக்கொள்ளப்படும் எண்ணங்கள். ஓட ஆரம்பித்தபிறகு குதிரையின் ஆத்மாவுக்கும் ஜாக்கியின் ஆத்மாவுக்கும் இடையேதான் உறவே. உடல் ஊடகம்தான். சில சமயம் உடல்கூட இல்லை.

பிளாக் வைன், மராத்தா குதிரைகளின் வழக்கமான அளவுதான். 13 கை உயரம். மார்பு 62. காலெலும்பு 74. எடை 482. ரேஸ் குதிரையின் கணக்கில் மிகச் சாதாரணமான அளவுகள்.

அதைச் சும்மா ஓடவிட்டுப் பார்த்தேன். உண்மைதான், ஒரு சிறிய கோணல். அது அதன் கண்பார்வையில்கூட இருக்கலாம். ஹாண்டில் பார் கோணலான சைக்கிள்போல அதன் ஓட்டத்தில் அது பிரதிபலித்தது.

அதன்மீது நான் ஏறியதை அது அவ்வளவாக விரும்பவில்லை. தும்மல் போட்டபடி குஞ்சிமயிர் குலையக் குனிந்தது. கால்களை மாற்றிக்கொண்டது.

ஓட்டத் தொடங்கியபோது என் ஏமாற்றம் பெருகியது. அதனால் கட்டளைகளைப் புரிந்துகொள்ள இயலவில்லை. முதலில் வேகமெடுத்து உடனே மனம் தளர்ந்து வேகம் குறைந்தது. தூண்டும்தோறும் சினம் கொண்டு அதன் வேகம் குறைந்தது. அது என்னை எதிரியாக எண்ணுகிறது என்று புரிந்தது.

இறங்கி சிகரெட் பிடித்து அமர்ந்திருந்தபோது பையன், ‘அது வேஸ்ட் சார். அதில ஒண்ணுமே பண்ண முடியாது’ என்றான்.

பீர் ஊற்றி நீட்டியபடி ‘குதிரைன்னா அது ரூபி. அது என்னா சார் குதிரை. நின்னா, நடந்தா சும்மா ஐஸ்வரியா ராய் மாதிரி...’

பீரை, கண்களை மூடியபடி அருந்தினேன். கண்முன் ரூபியைப் பார்க்க முடிந்தது.

எழுந்து காரில் ஏறி நேராக கிளப்புக்குச் சென்றேன். பலரிடம் சீட்டாடினேன். தோற்றேன். சண்டை போட்டேன். குடித்தேன். மாலை வீடு திரும்பினேன். வீட்டில் யாருமில்லை. மனைவி, அவளுடைய ஊருக்குப் போயிருந்தாள்.

படுத்துக்கொண்டு ரூபியைப் பற்றி நினைத்துக்கொண்டேன். தூங்கிவிட்டேன். கனவில் டெர்பி பந்தயத்தில் அதன்மீது நான் ஓடிக்கொண்டிருந்தேன். என் உடலும் அதன் உடலும் ஒன்றாகிவிட்டிருந்தன. மிகச் சிறந்த உடலுறவின் கணங்கள்போல. ஒருவர் மனதே இன்னொருவர் மனதும். ஒரே எண்ணங்கள், ஒரே இலக்கு. உடல் இத்தனை துல்லியமான கண்ணாடியாக மாற முடியுமா? ஆத்மாக்கள் இத்தனை தெளிவாக ஒன்றையொன்று காண முடியுமா?

அதில் ரூபி ஜெயித்தது. அவளும் நானும் சேர்ந்தால் வெற்றிதான்.

ரூபியை ஐரோப்பிய நிறுவனம் ஒன்று விலை கேட்டு வந்தது. ஐரோப்பிய ரேஸ்களில் இந்திய வகைக் குதிரை ஓடியதே இல்லை என்றார்கள். ரூபி ஒருவேளை பெரும் பரபரப்பாக மாறக்கூடும். அதற்குப் பேசப்பட்ட விலை இயந்திரக் குதிரை வரலாற்றில் ஒரு சாதனை. உலகப் புகழ்பெற்ற ஜாக்கி சிட்னி ஸ்டுவர்ட்ஸன் அதை ஓட்டப்போவதாகச் சொன்னார்கள். நிபுணர்கள் வந்து அதைப் பார்வையிட்டப்படியே இருந்தார்கள்.

ஸ்டுவர்ட் அதைப் பார்ப்பதற்காக சிம்லா ரேஸுக்கு வந்தான். என்னை அறிமுகம் செய்துகொண்டான். ஏறிய நெற்றி கொண்ட, ஒல்லியான, நீள முக வெள்ளைக்காரன். நடிகர் லாரல் போல இருந்தான். உதடே இல்லை. ஒரு சிவப்புக் கோடு. பெரிய ஹவானா சுருட்டைக் கவ்வியபடி நட்பில்லாத கண்களால் நோக்கி ‘உன்னை சந்தித்ததில் மகிழ்ச்சி’ என்றான். ரூபியைச் சுற்றிவந்து பார்த்தான்.

‘மோசமான முதுகு’ என்றான். ‘கால்களும் நீளமில்லை.’

‘ஓடும்போது பாருங்கள். அது கொக்குபோலப் பறக்கும்’ என்றார் செட்டியார்.

ஸ்டுவர்ட், ரூபியின் மூக்கைப் பொத்தினான். உடலை வருடினான். அதன் காதில் ஏதோ பேசினான்.

‘அதற்குச் சுருட்டு வாசனை பிடிக்காது‘ என்றேன்.

‘அப்படியா?’

‘ரூபியின் கழுத்தைச் சொறிந்தான். அதனிடம் மெல்லிய குரலில் ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான். ரூபி சருமத்தைச் சிலிர்த்தது. தும்மிக்கொண்டது.

அவன்மீது கழுத்தைத் தேய்த்தது. அவனை விளையாட்டாகக் கவ்வ முயன்றது.

அவன் அதில் ஏறி மிக இயல்பாகச் சுற்றிவந்தான்.

'நல்ல குதிரை. ஆனால் பழக்கவேண்டும்.'

'பழகிய குதிரைதான்' என்றேன். 'சிம்லா ரேஸில் நீங்களே பார்க்கலாம்.'

ஆனால் சிம்லாவில் ரூபி வெற்றிக் கோட்டுக்குச் சற்றுமுன் முதுகு ஒடிந்து குப்புற விழுந்தது. நான் அதன்மீதிருந்து தெறித்தேன். என் கால் எலும்பு முறிந்தது. கவசம் இருந்ததனால் கழுத்தெலும்பு முறியவில்லை.

ரூபியின் மரணம் செய்தித்தாளில் அலசப்பட்டது. குதிரைப் பந்தயத்துடன் தொடர்பே இல்லாதவர்கள்கூட அதற்காக வருந்தினார்கள். டிவியில் அதைக் காட்டினார்கள். நம் தேசப் பெருமிதம் சீண்டப்பட்டுவிட்டது. செட்டியார் மனம் உடைந்து அழுததைக் கண்டேன். ஆறு மாதம், பார்ப்பவர்களெல்லாம் என்னிடம் துக்கம் கேட்டார்கள். அத்துடன் ஒரு விசாரணைக் கமிட்டிமுன் நான் ஆஜர் ஆகவேண்டியிருந்தது. அதன்பிறகு அத்தனை வேகமான மராத்தா அமையவில்லை. அரசு, மானியம் அளிக்கத் தயாராக இருந்தும்கூட.

காலையில் மீண்டும் லாயத்துக்குச் சென்றேன். பிளாக் வைன் புல் தின்றுகொண்டிருந்த அழகைக் கண்டபோது எரிச்சலாக இருந்தது. வண்டிக் குதிரைபோல ஒரு பிச்சைக்காரப் பரபரப்பு. பொறுமை பொறுமை என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். பொறுமையாக இரு. ஞானம் சொன்ன எதுவும் என்வரையில் பலிக்காமல் இருந்ததில்லை. ரேஸ் ஜோதிடம் என்பதைப்போல ஹம்பக் ஏதுமில்லை என்று எனக்குத் தெரியும். ஆனால் ஞானம் அப்படியல்ல. அது உள்ளுணர்வா, முதிர்ந்த விவேகமா அல்லது அவர் சொல்வது போல கிரகங்களின் கணக்கா தெரியவில்லை. நடைமுறையில் அதுதான் என் வெற்றிக்கான அடிப்படை.

பிளாக் வைன் ஓடத் தயங்கியது. திரும்பி லாயத்துக்குப் போக ஏங்கியது. ரேஸ் குதிரை கட்டளைகளைக் கணம்கூடத் தயங்காமல் ஏற்கவேண்டும். அதாவது அது கட்டளைகளுக்காகக் காத்திருக்கவேண்டும். கட்டளை கிடைத்ததும் குதிரை அறியாமலே அதன் உடல் அதை நிறைவேற்றவேண்டும்.

அதற்கு அக்குதிரைக்கு ரேஸ்மீது வெறி இருக்கவேண்டும். ரேஸில் ஒரு கண நேரம் குதிரை தயங்கினால்கூட முடிவு மாறிவிடும்.

‘நீ என் செல்லம். நீ என் உயிர். நானும் நீயும் ஒன்று. நானும் நீயும் ஒரே உடல், ஒரே உயிர். என் கண்ணில்லையா, என் செல்லக் குட்டி அல்லவா?’ உடலுறவிற்கு முந்தைய சொல் விளையாட்டேதான். ‘விளையாட்டாச் சொல்லாதே. மனசில ஒட்டாமச் சொல்றத, பொண்ணும் சரி, குதிரையும் சரி, உடனே கண்டுபிடிச்சிரும். அந்த நிமிஷத்தில் அத நம்பிச் சொல்லு. உணர்ச்சிகள் உண்மையா இருக்கணும்... அதுக்கு அவ்வளவு பவர் இருக்கு. குதிரைக்குத் தெரியும் அது...’ மாஸ்டர் சொல்வார். ஆனால் எப்படி நம்பிச் சொல்வது? ‘திரும்பித் திரும்பிச் சொல்லு, போறும். நாம சொல்றத நாமளே நம்பிருவோம். மனசுன்னா அப்டித்தான். டேய் பின்ன எப்டிரா நாமல்லாம் பொம்பிளைங்கள லவ் பண்றோம்?’

ஆனால் என்னால் அன்று அச்சொற்களைச் சொல்ல முடியவில்லை. சொல்லச் சொல்ல வேறு ஏதோ மனிதனின் குரலாக அவை ஒலித்தன. ‘சனியன்... மிருகம்’ என்று வைத்தேன். வையக்கூடாது. அது குதிரைக்குத் தெரியும். நீ அதன் உடல்மீது இருக்கிறாய். உன் உடலின் ஒவ்வொரு அதிர்வும் ஒவ்வொரு உணர்ச்சியும் குதிரைக்குத் தெரியும். கவனம். நான் மீண்டும் என் சொற்களை எனக்கே சொல்லிக்கொண்டேன். ‘டார்லிங், நான் உன்னை விரும்புகிறேன். நீ என் செல்லக்குட்டி. நீ என் சக்கரைக்குட்டி... நீ இல்லாமல் நான் இல்லை. நீதான் நான்...’

தளர்ந்து அதை லாயத்துக்கு அனுப்பினேன். பீர் சாப்பிடும்போது பையன் ‘தேறுமா சார்?’ என்றான்.

‘பார்ப்போம்’ என்றேன்.

‘அதுக்குடு கோணல் இருக்கு சார். கோணல் அதோட மூக்கில இருக்கு.’

‘மூக்கிலயா?’

‘மூச்சை இழுக்கிறப்ப கோணலா முகத்தைத் திருப்புது.’

இவன் எதிர்காலத்தில் ஜாக்கியாகவோ டிரையினராகவோ வருவான் என்று பட்டது.

‘நீ என்ன நினைக்கிறே? இது ஓடுமா?’

‘ஓடாதுன்னு முடிவாச் சொல்லமாட்டேன் சார்... அப்டீன்னா சொல்லியிருப்பேனே.’

‘ஏன்?’

‘இதுகிட்ட ஒரு வெறி இருக்கு... சில சமயம் அப்டியே விறைச்சுப் போயிடுது. அப்பப் பிடிச்சா, நிக்காது... பேய் பிடிச்ச பொண்ணுக இருக்குமே அப்டி...’

‘அப்டியா?’

அந்த வெறி கிளம்பும் பொறியைக் கண்டுபிடிக்கவேண்டும். அதுதான்.

யதிராஜ் மாஸ்டரைக் காணவேண்டும்போல் இருந்தது. காஸ்மாபாலிடன் கிளப்பில் இருப்பார். எந்நேரமும் அங்கேதான். குடி.

நான் உள்ளே நுழைந்ததும் ‘வாடா வா. சின்ன மராத்தாவோட ரொமான்ஸ் பண்றியாமே... மசியறாளா?’ என்றார். ‘ஓல்ட் மாங்க் சொல்லு.’

சொல்லிவிட்டு நான் என் நோக்கத்தைச் சொன்னேன். மாஸ்டர் உறிஞ்சியபடி, ‘அது சரியான மசக் கிராக்கிடா. ஆனா அதில ஒரு மர்மம் இருக்கு. அதான் யோசிக்கிறேன்...’

‘என்ன பண்றது?’

‘லவ்ஸ் அடி. நீ இப்ப முதப் பொண்டாட்டி நினைப்போட ரெண்டாம் காரிய ...க்கிறவன் மாதிரி இருக்கே. அத விடு. மூத்தவள மறந்திரு.’

‘அது எப்டி?’

‘ஈஸியான வழி இருக்கு. இதுதான் அதுன்னு நினைச்சுக்கோ.’

நான் சிரித்தேன்.

‘நிசம்மாத்தாண்டா சொல்றேன். அதான் வழி.’

அவருக்கு மேலும் மூன்று லார்ஜ் வாங்கி ஊற்றிவிட்டுக் கிளம்பினேன்.

மறுநாள் செட்டியார் இருந்தார்.

‘என்ன டாம் இதையா ஓட்டப்போறே?’

‘ஆமா.’

‘ஓடுமா?’

‘பாப்பம்.’

‘அப்டிப் பாக்கிற ரேஸ் இல்ல. இதில சிம்லாவிலேருந்து டெண்டி வருது. பெங்களூர் மகாலட்சுமி. அப்றம் நாயிடுவோட கிளவர் பாஸ்டர்ட். எல்லாமே அசல் சரக்குங்க... இது வண்டிக் காளை மாதிரி இருக்கு... என்ன சொல்றேன்னா...’

‘இது மராத்தா.’

‘எனக்கு இந்த மராத்தா ஜாதிமேல நம்பிக்கையே இல்லை. சும்மா அரசாங்கம் காட்டுற விளம்பரம் வித்தை. ரூபி என்னவோ தப்பிப் பிறந்த கேஸ்.’

‘பாப்பம்.’

‘எப்பப் பாத்தாலும் பாப்பம்னே சொல்லு... இந்த வாட்டி ஜெயிச்சாகணும்.’

‘ஜெயிப்போம்.’

‘இத்த வச்சுக்கிட்டா? டாம் கண்ணா, சொல்றதக் கேளுடா.’

நான் பயிற்சிக்குப் போய்விட்டிருந்தேன். இம்முறை அந்த உத்தியைச் செய்தேன். மீண்டும் மீண்டும் என் மனதுக்குச் சொல்லிக்கொண்டேன். இது ரூபி. இதுதான் நான் மூன்று வருடம் இந்திய, அரபு மைதானங்களில் ஓட்டிய என்னுடைய குதிரை. ‘ரூபி! ரூபி! நான் உன்னைக் காதலிக்கிறேன். நீ என் செல்லம், என் தங்கம். என் ஸ்வீட்டி... ரூபி.’

ஆனால் பிளாக் வைன் அதைக் கேட்டதாகத் தெரியவில்லை. ஆசையில்லாத பெண்ணை அணைக்கையில் அவள் ஒப்புக்கொள்ளும்போதுகூட உடலிலிருந்து ஓர் எதிர்ப்பை உணர்வதுபோல ஒன்றை நான் பெற்றுக்கொண்டிருந்தேன்.

ரேஸ் நாள் காலைவரை எனக்கு ஒரு குருட்டு தைரியம் இருந்தது, ஏதோ நடக்கப்போகிறது என்று. மாஸ்க்கைப் போட்டபின் திடீரென வயிற்றைக் கலக்கியது. ஞானத்தை வரச்சொல்லிக் கேட்டேன். ‘என்ன சார் சொல்றீங்க?’

‘எனக்கு நம்பிக்கை இருக்கு. இன்னைக்கு இதுதான் ஜெயிக்கும்.’

எனக்கு என்ன சொல்வதெனத் தெரியவில்லை.

பையனிடம் என் குதிரையின் மீதான பெட்டிங் ரேட் கேட்டேன். பதினெட்டு மடங்கு. அதாவது அனேகமாக யாருக்குமே நம்பிக்கை வரவில்லை. கிளவர் பாஸ்டர்ட்தான் பெட்டிங்கில் முதலிடத்தில் இருந்தது. பளபளப்பான கருப்புப் பட்டுச் சருமம் கொண்ட ஆண் குதிரை. அதைப் பார்க்கக் கூட்டம் முண்டியடித்தது.

செட்டியார் வந்தார். ‘என்னய்யா... கோமாளிக்கூத்தா இருக்கு. எல்லாரும் சிரிக்கிறாங்க.’

நான் பதில் சொல்லாமல் சிகரெட் பிடித்தேன்.

பொறுமை இழந்து கால் உதைத்து மூச்சு சீற நின்ற கிளவர் பாஸ்டர்டைப் பார்த்தேன். பிளாக் வைன் அசை போட்டபடி பசு மாடுபோல நின்றது.

கேட் திறந்தது. வேட்டு விழுந்து குதிரைகள் சீறி வெளியேறின. அலையலையாகக் கைகள் வீசப்பட்டன. காலரிச் சத்தம் ஓங்கி எழுந்து சூழ்ந்தது.

குதிரை முதுகுமீது உடல் எடை அழுந்தாமல் அது முன்னோக்கிப் பாய இடம் கொடுத்தேன். பின் அதைச் சீராக ஓடவிட்டு அமர்ந்துகொண்டேன். பிளாக் வைன் பதினொன்றாகச் சென்றது. சீண்டக் கூடாது. சீண்டினால் அது சினமோ, பயமோ கொள்ளும். பிறகு அதைக் கட்டுப்படுத்த முடியாது. இப்போது தேவை அதற்கு என் மனம் பற்றிய பிரக்ஞை. அதற்கும் எனக்குமான உளத்தொடர்பு. ஓடுவதில் அதற்கு மெல்ல மெல்ல ஆர்வம் ஏற்படவேண்டும். மெல்ல மெல்ல வேகத்தைக் கூட்டினேன். ‘ரூபி... கண்ணல்ல, ஓடுடீ... என் ராஜாத்தி... என் தங்கம்... என் செல்லம்... ஓடம்மா...’

காலரிச் சத்தம் மாறுபடுவதைக் கேட்டேன். ஆம், அது கிண்டல். என்னைப் பற்றித்தான். புகழ்பெற்ற ஜாக்கி, வண்டிக் குதிரையை ஓட்டுகிறார் என்ற வேடிக்கை. இல்லை, அதை நான் கேட்கவில்லை. இப்போது என் உலகில் நானும் ரூபியும் மட்டும்தான். ரூபியும் நானும் மட்டும். எங்கள் இரு உடல்கள். உடல்கள் இரண்டும் ஒன்றாகி, முயங்கி, அசைவுகளை வாங்கி,

அசைவுகளைக் கொடுத்து… சீரான பிசிரற்ற அசைவுகள். அசைவுகளினால் ஆன தாளம்…

சட்டென்று என் அகம் சிலிர்த்தது. ஆம், நான் ரூபிமீது அமர்ந் திருந்தேன். அதே அசைவு. அதேதான். ஆம், மிக நன்றாக நான் அறிவேன் அதை. ஆனால் இது பிளாக் வைன். இதன் அசைவு களே வேறு. பிரமையா? இல்லை. இது ரூபி. ரூபியேதான்.

சேணத்தை விட்டுவிடுவேனா என்ற பயம். வியர்த்து, குளிர்ந்து அமர்ந்திருந்தேன். ரூபியை என் உடலும் அறிந்துகொண்டது. நன்கு பயின்ற என் ஜாக்கியின் உடல் அதை ஓட்டியது.

காலரிகளின் ஓசை நிலைத்துவிட்டிருந்தது.

பிளாக் வைன் நாலாவதாக ஓடிக்கொண்டிருந்தது. சீரான ஓட்டம். இறகு பதிக்கப்பட்ட அம்புபோல பிசிறே இல்லாத கூரிய நேர் வேகம், காற்றைக் கிழித்து. இத்தனை கூர்மை ஒரு குதிரையில் கூடிவிட்டால் அதன் ஆற்றலில் சிறிதுகூட வீணாகாது. எல்லா அசைவும் அதை முன்னோக்கித் தூக்கவே உதவும். பல லட்சம் ஆண்டுகளாகக் காற்றுடன் பேசிப்பேசி குதிரையுடல் உருவாக்கிக்கொண்ட வடிவம் அதன் உச்சத்தை அடையும். அதை வெல்ல முடியாது.

காலரியில் ஒரு பெரும் குரல் எழுந்தது. பின்னர் அலையலையாக எழுந்தன உற்சாகக் கூக்குரல்கள். சூதாட்டத்தின் வெற்றி தோல்விகளுக்கு அப்பால் பார்வையாளர்களின் மனம் எழுந்து விட்டது. அவர்கள் முன் ஒரு வரலாறு நிகழ்கிறது.

‘மராத்தா ! மராத்தா ! மராத்தா !’

ஒரு தேசியக்கொடி அசைவதை எட்டாம் சுற்றில் கண்டேன்.

ஒரு கட்டத்தில் ஓட்டமே இல்லாமல் ஆகிவிட்டது. நானும் குதிரையும் மட்டும் காலமற்ற வெளியில் இருந்தோம். ரூபி நீயா? ரூபி நீயா? அச்சம் என் கைகால்களைப் பனிக்கட்டியாக மாற்றிவிட்டிருந்தது.

‘மராத்தா ! மராத்தா ! மராத்தா !’

என் முன் டெண்டியின் வால் சுழலக் கண்டேன். திடமான கபில நிறக் குதிரை. நீளமான கால்கள் மண்ணில் படுகின்றனவா என்றே ஐயமாக இருந்தது. கடைசிக் கட்டத் தாவியோட்டம், கடல் அலைகள் போல. இது ரூபி இல்லை. என் பிரமை. இது பிளாக் வைன். ஆனால் இதை நான் ரூபி எனறு நினைத்ததால்தான் வெற்றி சாத்தியமாகியிருக்கிறது. ஆகவே இது ரூபிதான். ரூபி, வேகம், வேகம் கண்ணே. நாம் ஜெயிக்கப் போகிறோம்.

'மராத்தா! மராத்தா! மராத்தா கமான்! கமான் மராத்தா!'

நான் பிளாக் வைன் முதுகின்மீது என் எடையை ஏற்றாமல் நின்றுகொண்டேன். குதிரை தாவும்போது நாமும் காற்றில் நிற்க வேண்டும். அது தரையில் கால் பதித்தபிறகு மட்டுமே நம் எடையை அதன்மீது சுமத்தவேண்டும். ஜாக்கியின் உச்சகட்டத் திறம் வெளிப்படும் இடம் அது. எல்லாம் சில கணங்களுக்குள் நிகழும் கணக்கு. ஜாக்கியும் குதிரையும் ஒருவரோடு ஒருவர் ஒன்றாகிவிட்டால் மட்டுமே அது நிகழ முடியும். எனக்கும் ரூபிக்கும் அப்படி ஓர் ஒத்திசைவு இருந்தது.

ஆனால் சிம்லா ரேஸில் அது தரையைத் தொடும் கணத்துக்கு முந்தைய கணமே நான் அதன்மீது அமர்ந்திருந்தேன். என் எடையுடன் அது தரையை மோதியது.

பிளாக் வைன் இரண்டாவதாக ஓடிக்கொண்டிருந்தது. என்முன் கிளவர் பாஸ்டர்ட் வெறி பிடித்ததுபோல ஓடிக்கொண்டிருக்கக் கண்டேன். அப்படி ஒருநாளும் அது ஓடியதில்லை.

பிளாக் வைன் ஓடிய வேத்தை என்னால் கற்பனை செய்ய இயலவில்லை. ரூபி கூட

என் நெஞ்சு அதிர்ந்தது. அது ரூபிதான். அசைவுகள் மட்டுமல்ல. வியர்வையின் வாசனை. மூச்சிரைக்கும் ஒலி. ரூபிதான்.

'ரூபி! ரூபி... இல்லை, என்னை மன்னித்துவிடு ரூபி.'

ரூபி வென்று முன்னகர்ந்தது. எல்லைக் கோட்டைப் பெரும் ஓசை நடுவே கடந்து சென்றது. காலரிகள் கொந்தளித்தன.

‘ரூபி! வேண்டாம்!’

குதிரை ஓடிய வேகத்தில் சற்றுத் திரும்ப நான் காற்றில் வீசப்பட்டேன். என்மீது கனத்த குளம்புகளுடன் கிளவர் பாஸ்டர்ட், டெண்டி இரண்டும் கடந்துசென்றன.

[1] யட்சி: பூமியில் வாழும் தேவர்களில் ஒரு வகையினர் யட்சர்கள். யட்சி அதன் பெண்பால். மிக அழகிய பெண்ணாகத் தோன்றி எதிர்ப்படுபவர்களைக் கவர்ந்து மோகமூட்டி இறுதியில் கொன்று உண்ணும் என்று புராண நம்பிக்கை. ஒரு வகை மோகினிப் பேய் எனலாம். குமரி மாவட்டத்தில் பல நூறு யட்சி ஆலயங்கள் உள்ளன.

[2] இ.எம்.எஸ்: இ.எம்.சங்கரன் நம்பூதிரிப்பாட், கேரள கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் கோட்பாட்டு அறிஞர், பெரும் தலைவர்களில் ஒருவர்.

[1] பட்டும் வளையும்: திருவிதாங்கூர் மன்னர்கள் சிறந்த சேவைக்காக அளிக்கும் பட்டச்சால்வையும் கங்கணமும்

[2] மாடம்பி: நிலப்பிரபு. ஒரு பகுதியின் வரிவசூல் உரிமை உடையவர்

[3] கைப்பள்ளி: தென்னை மரம் சம்பந்தமான வேலைகளைச் செய்யும் சாதியினர்

[4] ஓர்மை: நினைவு

[5] முண்டு: வேட்டி

